உ சிவ மயம்.

ஓம் தத் சத் பரப் பிரஹ்மணே நம:

# திரு எம் பாவை-திருப் பள்ளி எழுச்சி

## என்னும் அருட் பா மாலை.

### மணி மாலை - சிறு சுடர் உரையும்,

### பத உரையும்.





...க ஞாநாச்சார்ய ஸ்வாமிகள்

...த மடம், திருப் பூ வணம்.

காப்பிரைட்] 1957 [விலை பைசா 75

वीर शखर ज्ञान देशिक ... ।
तिरुक्कळर् ।





வீர சேகர ஞான தேசிக சுவாமிகள்,
திருக் களர்.

काशिकानन्द ज्ञानाचार्य स्वामिकल् ।
तिरुप्पूवणम् मठम् ।



காசிகாநந்த ஞாநாச்சார்ய சுவாமிகள்,
திருப் பூ வணம்.





நாராயண சுவாமிகள், கோ. சித. மடம், சிதம்பரம், திரு வை யாறு.



உ சிவ மயம்.

ஓம் தத் சத் பரப் பிரஹ்மணே நம:

திருக் களர், ஸ்ரீ வீர சேகர ஞாந தேசிகர் மீது

திருப் பூ வணம்,

ஸ்ரீ காசிகாநந்த ஞாநாச்சார்ய ஸ்வாமிகள்

இயற்றிய,

# திரு எம் பாவை - திருப் பள்ளி எழுச்சி

## என்னும் அருட் பா மாலை.

இதற்கு,

சிதம்பரம், ஸ்ரீ கோ. சித. மடம், சிதம்பர ஞாந தேசிகர்
மாணக்கர், திரு வை யாறு, அறு பத்து மூவர் மடம்,
மதுரை - தமிழ்ச் சங்கத்து - பண்டித,

ஸ்ரீ நாராயண சுவாமிகளால்

இயற்றப் பெற்ற,

**மணி மாலை - சிறு சுடர்**

என்னும்

**பொழிப் புரை, விசேஷ உரை.**

இது

மதுரை, ராஜேஸ்வரி பிரசில் பதிப்பிக்கப்பட்டது.

காப்பிரைட்] 1957 [விலை பைசா 50

## பாட்டு முதற் குறிப்பு.



| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 4 | 15 | னிரை | னிறை |
| ,, | 25 | உத்தீபற | உந்திபற |
| 14 | 23 | சேகச | சேகர |
| 17 | 13 | விசாரனை | விசாரணை |
| ,, | 19 | சிங்சித்தலும் | சிந்தித்தலும் |
| 20 | 21 | முறலிய | முதலிய |
| 25 | 8 | மரகிய | மாகிய |
| 26 | 22 | வாலானு | வாயானு |
| 27 | 24 | பாவேயே | பாவையே |
| 31 | 15 | வழிப்பட்டால் | வழிபட்டால் |
| 32 | 14 | மொன்றும் | மொன்றும் |
| 36 | 10 | நூவாசிரியர் | நூலாசிரியர் |
| 37 | 25 | பனைத்தும் | பனைத்தும் |
| 40 | 8 | தீரும் | நீரும் |
| 43 | 8 | சீர்த்தி | கீர்த்தி |
| 47 | 2 | ஷக | சுக |
| ,, | 20 | பிஞ்ஞுகளை | பிஞ்ஞகனே |
| ,, | 21 | வாழ்தது | வாழ்த்து |

24-5

திருச் சிராப் பள்ளி, குன்றி மணிச் சாமி மடம்,
கோவிலூர், ஸ்ரீ மகா தேவ ஞாந தேசிகர் மாணுக்கர்,
ஸ்ரீ அத்வைதாநந்த சுவாமிகள் இயற்றியது.

---

1. பூவுறை மாது நாவுறை நாரி
புகுந்தகல் புண்ணிய பதியாம்,
காவுறை பாரி ஜாதமே நாறும்
கவின்மிகு களர்உறை குருமுன்,
மேவுறும் அடியார் மேன்மையாம் ஆதி
மித்திரி ஞாநநற் குணங்கள்,
நாஉரை ஒன்று போதுமோ நாலா
யிரமது வேண்டுமே அன்றே.

2. வானது கலந்த வாசக மணியாம்
வாதவூர் அண்ணலின் சரிதம்,
தானது மெய்ம்மை தகும்தகும் என்னத்
தவமிகு வீரசே கரனும்,
கோனது சோதி குறித்தநாள் கலந்த
கோதிலாச் சரிதங்கொண் டுரைத்தான்,
தேனதாம் என்னத் திருப்புவ ணஞ்சார்
தேசிக தேசிகோத் தமனே.

3. பூவணம் அதனிற் பொலிந்தகல் விகித
போதனும் ஆரியப் புகிதன்,
பாவலர் தமக்குப் பாரினில் மேலாம்
பாவலன் எனப்புகழ் பெறுவோன்,
பாவகா தீதப் பரம்பொருள் உலகில்
பாவனைக் குரியதென் றுரைக்கச்,
சிவனும் வீர சேகர ஞாந
தேசிகன் திருவடித் தொண்டன்.

4. மன்னிவரு குருக்கள்பல மலிந்தாலும்
மண்ணுலகில் மகிமை தோன்ற,
வன்னிவநம் அதில்உற்ற வாள்ஈசன்
வான்சோயில் வளப்பம் செய்து,
தன்னிகரில் தனைஈயும் தேசிகனுர்
தமின்ஐந்தாம் தாநம் பெற்றோன்,
இன்னிலத்தில் இவன்பெருமை இயம்புதிருப்
பாவைதனில் இயம்பக் கேண்மோ.

5. அரியதமிழ் ஆரியம்இரண் டியுமே கற்று
அரியபொருள் அறியஉரை அநந்தம் செய்து,
உரியஉப நிடதமுதல் மொழிபெ யர்த்தும்
உயர்ந்தஉபந் நியாசங்கள் உலகிற் கீந்தும்,
அரிஎனவே மதவாதி தன்னைக் கண்டால்
அகன்றோட அண்டரண்டப் பட்சி போல்வான்,
துரியபொருள் அறியதுயர் ஒழிய ஞான
தூயவுப தேசங்கள் செய்ய வல்லோன்.

6. ஓங்குதிருக் களர்வீர சேக ரன்தான்
உபயபத மலர்அணிந்த காசிப் பேரோன்,
பாங்குபடப் பாமாலை பலவி யற்றிப்
பாரில்உயர் குருபரனைப் பாவுஞ் சீரோன்,
தீங்கனியோ கற்கண்டோ திருப்பா வைப்பா
திருப்பள்ளி எழுச்சிஎனச் சிறப்பாய்ச் செய்தான்,
ஆங்கதற்கு அரியவுரை அரியின் பேரான்
அரியகல்லல் அமர்ந்தோன்தான் ஆக்கி னானே.

7. இயம்புதிருப் பாவையதற் கேற்றமுறு
கல்விமுதல் ஒழுக்கம் சார்ந்தோன்,
நியம்புகுதம் சிதம்பரதே சிகசீடன்
நியமாதி சாதனஞ்சேர் நித்யசீலன்,
பயம்புகுதா நெஞ்சில்உறை ஞானம்உடன்
பார்புகழுப் பரம சாந்தன்,
நயந்துபலர் புகழஉரை இயற்றினான்
நாரணன்பேர் உடையான் தானே.

8. பாரில்உயர் குருவீரன் திருப்பாவை உரைபார்த்துப்
படித்த பின்னர்,
ஓரில்வரு பாவைஉரை வேறுலகர் உயர்ந்ததென
உரைப்பார் யாரே,
தேரில்உரை தனக்கும்ஒரு தெளிந்தஉரை தெரியச்சிலர்
செய்வர் பின்னே,
ஆர்இவர்முன் னேபரிமேல் அழகர்என அறிஞர்பலர்
அறைவர் அன்றோ.

---

உ
சிவமயம்.

# திருவெம்பாவை.

## முகவுரை.

திரு எம் பாவை என இத் தொடர் பிரியும். ‘திரு’ என்பது உயிரீற்று மொழியாதலின், அதற்கு முன் ‘எம்’ என்பது வர “உடன்படு மெய்யி னுருபுகோளல் வரையார்” (தொல்காப்பியம் எழுத்ததிகாரம்) “இ ஈ ஐவ் வழி யவ்வும், ஏனை யுயிர் வழி வவ்வும், ஏமுனிவ் விருமையு, முயிர்வரி னுடம்படு மெய்யென் றாகும்” (நன்னூல் உயிரீற்றுப் புணரியல்) எனத் தொல்காப்பியரும், நன்னூலாரும், நியமமாகக் கூறுத உடம்படு மெய் பெற்று, ‘திருவெம்பாவை’ எனத் தொடர்ந்து நின்றது, பழிச்சு எடுத்துக் கொண்ட பா ஒவ்வொன்ற னீற்றிலும், ‘எம் பாவாய்’ என வருதலின், அப் பாக்களின் தொகுதி எம்பாவாய் எனப் பெயரிடப் பெற்றது. ‘பாவை’ என்பதுவே விளிக்கண் ‘பாவாய்’ எனப்படுதலின், ‘பாவை’ எனப் பெயரிடற் கேற்றதென்க. எம் பாவை யென்பது எங்களுக் குரிய பாவை எனக் கிழமைப் பொருள்பட வந்த நான்கன் உருபு விரிய நிற்குந் தொகை நிலைத் தொடராகும். ‘திரு’ என்பது உயர்வைக் குறிக்க வந்த அடையாகும். இஃது உயர் வற்ற எம் பாவைகளை விலக்க வந்த தன்மையால், செஞ் ஞாயிறு போல, இயை பின்மை மட்டும் நீக்க வந்த அடையாகும். இறைவன் சம்பந்தப்படுதலின் உயர் வுண்டாயது என்க. கோயில் மடம் இவற்றைத் துலக்கும் அலகு முதலியவற்றிற்கு உயர் வுண்மை கருதப்படுதலின், அவை, திரு வலகு, திரு மாலை, திரு வாடை, என வழங்கப்படுதல் போல, இதுவும், திருவெம்பாவை யென இறைவன் சம்பந்தமான உயர் விருத்தலால் வழங்கப் பெற்றதென்க. இறைவன் சம்பந்தமானவை, மக்களை அழிவி லின்பப் படைவு வரை செலுத்தலால், உயர்வு கொண்டன என்க.

இனிப் பண்டைக் காலத்தில், தமிழ் நாட்டில் இளம் பருவப் பெண்கள் பலர் கூடித் தம் தாய்மார்கள் தூண்ட எதிர் காலத்தில், அண்மையில் மழை வளத்தையும், சேய்மையில், தங்கட்கு நல்ல கணவரையும், பெறுதலை முன் னிட்டு, மார்கழித் திங்களில், திங்கள் கலை நிரம்பிய நாள் தொடங்கித் திரு வாதிரை நாளுந் தலை மணக்கத், தைத் திங்களில் திங்கள் கலை நிரம்பும் நாள் வரை விடியற் காலத்தில் புறந் தூய்மை யுண்டாதல் வாய்தலாக, அகந் தூய்மை பெறத், தங்கள் தாய்மார்களுடன் நீரிற் குளித்து, இறைவனைக் குறித்து நோன் பாற்றுதல் வழக்க மென்பது சங்கச் செய்யுட்களால் புலப்படுகின்றது. இக் காலத்திலும், அந் நோன்பை நினைப்பூட்டுதல் மட்டு மாகத் திரு வாதிரைக் காப்புக் கட் டென மார்கழி மாதத்தில் நாட்டுக் கோட்டை நகர தன வணிகர் மரபிலும், பிற, மரபிலும், ஒரு நோன்பு நடை பெறுகின்றது. இச் செய்தி, பரி பாடல் பதி னோராம் பாடலிலும், பிங்கலந்தை ஆயிரத்து மூந் நூற்று அறு பத் தொன்பதாம் நூற் பாவிலும், குறிஞ்சிக் கலி இரு பத்து மூன்றாம் பாடலிலும், ஐங் குரு நூறு மருதத்தில், எண் பத்து நாலாம் பாடலிலும், பிற வற்றிலும், குறிக்கப்பட்டிருக்கின்றது. மழையைக் குறித்து ஆற்றுவார்கள் என்பது, "வேம் பாதாக விய னில வரைப் பென" (பரிபாடல்) "கொண்டல்காள் மின்னிப் பொழியாய் மழையே லோ ரெம்பாவாய்" (திரு வாசகம்) என்பன முதலிய வற்றாற் புலப்படும். கணவரைப் பெறக் குறித்து ஆற்றுவா ரென்பது, "தையி னீராடிய தவந் தலைப்படுவாயோ" (குறிஞ்சிக் கலி 23-ம் பாடல்) என்பது முதலியவற்றாற் புலப்படுகின்றது. 'தவம்' என்பது, தவத்தின் பயனாகிய கணவனைப் பெறுத லா மென்க. இளம் பருவப் பெண்கள் நோன் பாற்றுவதற்கு தாய்மாரோடு சென்று நீ ராடலால், இதனை, "அம்பா வாடல்"



எனவும், மார்கழி மாதத்தில் *திங்கள் கலை நிரம்பத் திருவாதிரையுங், கலக்கு நாளில் நீ ராடத் தொடங்குதலால், "ஞாயிறு காயா நளி மாரியிற் துளத்து, மாயிருந் திங்கள் மறுநிறை யாதிரை, விரிநூ லந்தணர் விழவு தொடங்கப், புரிநூ லந்தணர் பொலங்கல மேற்ப, வெம்பா தாக வியனில வரைப்பென, அம்பா வாடலின்" எனவும், பரிபாடலில், குறிக்கின்றனர். ஒன்பது வயதுக் குட்பட்ட பெண் களே இந் நோன்பை ஆற்றுவார்க ளென்பது பிங்கலந்தையாற் பெறப்படுகின்றது. நோன்பு ஆற்றுங் காலத்துத் தா மாக்கி யுண்ப ரென்பதும், பிறர் மனையிற் சென்று ஐய மேற் றுண்ப ரென்பதும், அதனையும் பிறர்க்கு முதலிற் கொடுத்து மீத மாவதையே சிறுக உண்ப ரென்பதும், கலிப் பாவால் பெறப்படுகின்றன. மார்கழி தொடங்கித் தையிலும், நோன் பாற்றுவதற்கு நீ ராடுதலால், சாந்திர மாதப்படி அதனைத் தைத் திங்க ளென வழங்குவர். அது "நறுவீ யைம்பால் மகளி ராடும் தை இத் தண் கயம் போல" என வரும் (ஐங் குறு நூறு மருதம்) பா முதலியவற்றாலும், "அம்பா வாடல் என்பது தைந் நீ ராடற்குப் பெய ராயிற்று" எனப் பரிமே லழகர் உரைத்த உரை முதலியவற்றாலும் வெளிப்படும். மார்கழியில் திரு வாதிரை தலை மணக்கத் திங்கள் கலை நிரம்பு நாள் தான், நோன்பு தொடங்கப் பெற்று வந்தது என்பதைக் குறிப்பதற்காகவே, திரு வெம் பாவையை மார்கழி மாதத்தில் தென் புலியூர் முதலிய எல்லாத் தலங்களிலும் திரு வாதிரை நாள் முடிய, முன் பத்து நாள் வரை, திருக் கோயிலில் ஓதுகின்றனர் எனச் சிலர் கருதுகின்றனர். நோன் பாற்றுவோர் இளஞ் சிறுமிய ராதலின், இரவி லயர்ந்து தூங்குதலால் விடியலிலேயே யாறு தடாகங்களிற் குளிப்பதற்குத் தாய்மார்கள் நே ராகவும், முன் னெழும்பிய சிறுமியரைக் கொண் டும், எழுப்பி நீ ராட்டி நோன் பாற்றுவிப்ப ரென்பது தெளியப்

* "மார்கழித் திங்கள் மதி நிறைந்த நன்னாளால்" எனவும், திருப் பாவையையும் நோக்குக.

படுகின்றமையால், இவ் வழக்கினை முன்னிட்டு மணி வாசகப் பெருமான் முதலிய பெரியோர்கள், இறைவனைப் புகழ்ந்தது போல, அரு ளிறையையும், தத்துவ ராய சுவாமிகள் முதலியோர் புகழ்ந்து நின்றனர். தத்துவ ராய சுவாமிகள் முதலிய பெரியோர்கள் போல, இப் பா ஆசிரிய ராகிய ஞானச்சாரிய சுவாமிகளும் தங்க ளரு ளிறைவரை, அவ் வழக்கை முன்னிட்டுப் புகழ்ந்தன ரென்க. புகழுமிடத்து, "பாவை" என்பவர் அறியாப் பருவத் தின ராதலால், தங்கள் அரு ளிறைவர்பால் வந்தடைந்த மந்த முமூட்சுக்களையும் அறியாப் பருவத்தினராக வைத்து, அவர்களைப் பாவையரோ டொப்பித்து, அரு ளிறைவர்பால் வந் தடைந்து தத்துவ ஞானம் பெற்றுத் திகழும் ஞான முதியோர்கள், தாங்க ளும், தங்களால் தீவிர ராகிய முமூட்சுக்களைக் கொண்டும், மந்தர் களைத் தேக முதலியவற்றை மெய் யென மயங்கு முறக்கத்தி னின்றும் நீக்கி, அரு ளிரைவரை அவர்கள் வழிபட் டுய்வதற்கு, அரு ளிறைவரின் பெருமையை அவர்கள் கூறுவ தாகப் புகழ்ந்தன ரென்க.

'பாவை', என்பது குருதி பரவ உடல் வளரும் பருவச் சிறு மியரைக் குறிப்ப தாகும். அது 'பாவு ஐ' என முதலு மீறு மாகப் புணர்ந்து நின்று செயப்படு பொருளை யுணர்த்துஞ் சொல்லாகும். வளருதலில் பெண்கள் முற்பட்டு வளர்தலின், அது பெண்களைக் குறிப்பதற் குரிய சொல்லாயிற்று. இளம் பெண்களையும், இளம் பெண்களாகக் கருதப்படுவோரையு மன்றி, மற்றைய பெண்களைக் குறியா தாதலால், அது தமிழ்ச் சொல்லே யாகும். அதனாலே தான், அப் பெயரை, பல்லி, கோத்தும்பி, தோ ணேக்கம், உத்தீபற, காக்கைப் பிள்ளாய் என்பனவற்றோ டொப்பப் பண்டைப் பெரி யோர்கள் எடுத்தாண்ட ரென்பது தமிழ் நூல் வல்லார் கொள்கை யாகும். இப் 'பாவை' என்பதை, இசை நிறை யென்று சில சான் றோர் கொண்டனர். அவர் திரு வுள்ள மிருந்தபடி யது. எம்மனோ



ராலு மது அறிதற் கரிய தாகும் என அமைதல் சால்புடைத்து. இங்கு இசை நிறையாக வந்த தென்பதற் கிட மில்லை யென்க.

இங்ஙனம்,
மணி மாலை யுரை யாசிரியர்
**சங்கத்து பண்டித, சித. நாராயண சாமி.**
*அறு பத்து மூவர் மடம்*
*திரு வை யாறு.*

உ
சிவமயம்

## காப்பு.

இயற்றப் புகுந்த திரு வெம் பாவை யென்னும் பழிச்சு பாடல்களா லாகிய யாப்பானது, இனிது முடிவதற்கு இடையூறு புகுந்து தடை செய்யாமல் காத்தலின், இவ் வைங்கா இறை வழி பாட்டைக் குறிக்கும் பாவானது காப் பெனப்பட்டது. காத்த லுடையதனைக் காப் பென்ற தாகு பெயர்.

### விநாயகர் வணக்கம்.

செய்ய வீரநல் சேகரச் செம்மல்மேல்
உய்ய வேண்டி உளுற்றுநல் பாவைதான்
வைய கம்புகழ் வண்ண முடிந்திட
ஐயன் மாமுகன் ஐங்கரன் போற்றுவாம்.

### * பொழிப் புரை.

நா-பொழிப்பு, விசேட வுரை :— சேர்மை யமைந்த நல்ல வீர சேகர ஞான தேசிக மூர்த்தியின் மீது (இயற்றப் புகுந்த யாமும், பயின்று பாடும் நன் மக்களும்) மல விச்சேப ஆவரணச்

* பொழிப்பெனப் படுவது பொருந்திய பொருளைப், பிண்டமாகக் கொண்டுரைப் பதுவே".

குறறங்க ளற்றுத் துன்ப வொழிவு இன்ப அடைவு வடிவ வீடு பேறு பெற விரும்பிச் செய்யப்படுகின்ற திரு வெம் பாவை என்னும் பழிச்சு பாடல்க ளாகிய யாப் பானது, செந் நாப் புலவர்கள் புகழும்படி முடிவு அடையும் பொருட்டு, ஐந்து திருக் கரங்களை யுடையவரும், யானை முக முடையவரு மாகிய கணபதிப் பெருமானை வழிபடுவோமாக. (எ-று)

தானும், துற வற ஒழுக்கத்திற் சிறிதுந் தவறாது நிலை பெற்றுத் தன்னை யண்மிய மாணவர்களையும், அவ் வொழுக்கத்திற் றலை சிறந்து நிற்கச் செய்து மிளிர்ந்தமையால், ‘செய்ய’ எனவும், மைத்திரியாதி நறுங் குணங்களை இயல்பாகக் கொண்டமையால், ‘நல்’ எனவும், அண்மிய மாணவர்கட்குத் தான் ஞாநோபதேசஞ் செய்து, அவர்களை மெய்ஞ் ஞாநிக ளாக ஆக்கியதோடமையாது, தம் மாணவர்களும், அவர் தம்மை யடுத்த மாணவர்களை மெய்ஞ் ஞாநிக ளாக ஆக்கு மாறுஞ் செய்தமையாலும், மந்தர்களைச் சிவ விட்டுணு பக்தர்க ளாக ஆக்கியமையாலும், ‘செம்மல்’ எனவும், பல அடைகள் கொடுத்துக் குரு மூர்த்தியின் பண்புகள் பலவும் வெளிப்படப் புகழ்ந்தபடி. செம்மல் = மேலானவன்; ஆசாரிய ஆசாரியன் என்ப தாம். உஞற்றுதல் = செய்தல்.

பயில்வார் பிறவிப் பிணி யறுக்க வல்ல தாகலின், ‘நற் பாவை’ எனப்பட்டது. இது தன்வய மின்றிக் குரு வயப்பட்டுப் பாடப் படுதலின், தற் புகழ்ச்சியாகா தென்க. ஒவ் வொரு பாவி னீற்றிலும் ‘பாவாய்’ என வருதலின், ‘திரு வெம் பாவை’ என முன்னோர் மொழிந்தபடி இதுவும் (பாடப் புகும் பாட்டும்) பாவை யெனப் பட்டது. ‘தான்’ என்பது கட்டுரைச் சுவைபட நின்றது. கட்டுரை யென்பது தொடர் மொழியைக் குறிக்கும். அதன்கண் சுவை தோன்ற வருவது என்ப தாம். அதாவது, தொடுத்துப் பேசுதற் கண் சுவை தோன்ற நிற்பதா மென்க. அங்ஙனம் வருதலின், அது



அசை நிலையாகு மென்க. “தோற்றந் தாமே வினையோடு வருமே” (493 கிளவி ஆக்கம் 10) “ஆக்கந் தானே காரண முதற்றே” (504 சொல் அதிகாரம் கிளவி ஆக்கம் 21) எனத் தொல்காப்பியத்தில், ‘தாம்’ ‘தான்’ என்பன கட்டுரைச் சுவைபட நிற்றல் காண்க. உலக வழக்கிலும், “நீ தான், நான் றான், செய்து தான், பார்த்தேன்” எனத் தொடுத் துரைக்கு மிடத்துச் சுவை படத் ‘தான்’ முதலியன நிற்றலையும் காண்க. இவ் வாறு கட்டுரைச் சுவைபடச் செய்யுளிடத்தும், வழக்கிடத்தும், வருவன வெல்லாம் அசை நிலைக ளாகு மென்ப இயல் நூ லாசிரியர்கள். வையக மென்ப துலகத்தை யுணர்த்தி நிற்கின்றது. “உலக மென்ப துயர்ந்தோர் மாட்டே”. (பிங்கலம்) என்றலின் வையக மென்பதற்குச் செந் நாப் புலவர் என்றனம்; ஈண்டுப் புகழ்தற் குரிய ரெனக் கொள்ளப்படுவா ரவரே யாதலின். சொன் மாசு, தொடை மாசு, பொருண் மாசு முதலியன வராமல் முடிய வேண்டி என்பார், “வையகம் புகழ் வண்ண முடிந்திட” என்றனர்.

விநாயகர், கணங்களுக் கெல்லாம் தலைவ ராதலின், ‘ஐயன்’ என்றனர். அங்ஙனமே கூறி விடுப்பின், மக்களிற் றலைசிறந்தானையும், பிற கடவுளையும், அஃ துணர்த்து மாதலின், அவர் மேற் செல்லா திருக்க, ‘மா முகன்’ என்றனர்; விநாயகர் யானை முக முக முடைய ராதலின் அஙஙனமே விடுப்பின், ஐய னாகவும், மா முக னாகவும், நந்தியம் பெருமானும் இருத்தலின். அவர் மேற் செல்லா திருக்க, “ஐங் கரன்” என்றனா; ஐங் கரம், விநாயகர்க் கன்றிப் பிறர்க் கில்லை யாதலின்.

‘மா’ என்பது விலங்கின் பொதுப் பெய ராதலின், காளை முகங் கொண்ட நந்தியம் பெருமானையும் குறிக்கும். ‘ஐயன்’ என மேல் வருதலின், ஐங் கரம் அவர்க் கில்லை யாகலின், அவரைக் குறியா தென்க.

'மா' என்பது விலங்கின் பொதுப் பெயராயினும், சில விலங்கினங்கட்கே உரிய வாகப் பயின்று வருதலான், சேனவரையர் முதலியோர். 'மா' என்பது ஒரு சார் விலங்கினங்கட்கும் எனத் தொல்காப்பிய வுரையில், எழுதினு ரன்றி, விலங்கின் பொதுப் பெய ரன் றென்ப தவர் கருத் தன் றென்க.

"மாவும் புள்ளும் வதி வயிர்படர" (பழைய பாடல்) எனவும், "மூத்துவிளி மா வொழித் தெவ்வுயிர் மாட்டும்" (மணி மேகலை) எனவும், 'மா' என்பது பொதுப்பட வருதல் காண்க.

போற்றுதல் என்பது, காத்தல் முதலிய பல பொருள்கட்குரிய சொல்லாயினும், ஈண்டுப் புகழ்தலும், வணங்கலும், உள்ளத் தமைத்தலு மாகிய வழிபாட்டின் மே னின்ற தென்க.

## திரு எம் பாவை

*வெண் தளையால் வந்த இயல் தரவு இணைக் கொச்சகக் கலிப் பா.*

சீர்அமைந்த வானோர்கள் தேறும் விடியல்எனப்
பேர்அமைந்த மார்கழியில் பெட்புடனே வைகறையில்
நேர்அமைந்த சான்றோர்கள் நீர்படிந்து தூய்மையுடன்
தார்அமைந்த மாமலரைச் சாத்திப் பணிகின்றார்
கார்அமைந்த பூம்குழலாய் கண்விழியா தேஉறங்கல்
ஏர்அமையு மோவிழிப்பாய் எம்வீர சேகரனைப்
பார்அமைந்த சித்தியுறப் பாடித் தொழுதுநின்று
நார்அமைந்த நெஞ்சமுடன் நாம்தொழுவோம் எம்பாவாய்.

(நா-பொ-வி-ரை) இயல்பாக விழுப்பம் பொருந்திய தேவர்கள், நனவு நிலையை அடையும் விடியற் காலம் எனப் பெயர் பெற்ற மார்கழி மாதத்தில் (நன்மை பயக்கு மென்பதால்) விடியற் பொழுதிலேயே ஒழுக்கத்தில் நேர்மையான பெரியோர்கள் புறந்



தூய்மை யுண்டாக நீரிலே மூழ்கி, அகத் தூய்மையோடு மாலையாக அமைக்கப் பெற்ற சிறந்த மலரைச் சாத்தி வணங்குகின்றனர். மேக மெனச் சொல்லும்படி கருமை நிறத்தோடு பொருந்திய பொலிவு தங்கிய கூந்தலை யுடையவளே! நோன் பாற்றப் புகுந்த இளையவளே! கண்ணைத் திறவாமல் தூங்குகின்றனையே! இப்படித் தூங்குதல் மேன்மையைத் தருதற்குக் காரணமாகப் பொருந்துமோ? (பொருந்தா தாகையால்) கண்ணைத் திறந் தெழுக. நந் தலைவ ராகிய வீர சேகர ஞான தேசிக மூர்த்தியை அன்பு நிறைந்த நெஞ்சத்துடன் அத் தேசிக மூர்த்தியின் பூ வுல கெங்கணும் நிறைந்த மிக்க புகழை முதலிற் கூறிக் கை குவித்துத் தொழுது நின்று, (இருமை யின்பும் பெற விரும்பும் நாம்) வழி படுவோம். (இப் பொய்கை நீரிற் குளிப்போம் வருக.) எ—று.

சீர் = விழுப்பம்: (கனம்.) 'சீர் தூக்கல்' என்னு மிடத்துச் 'சீர்' என்பது விழுப்பத்தை (கனத்தை)க் குறித்து நிற்றல் காண்க. சீரினைக் காட்டுதலால், தராசுக்குச் 'சீரை' என்னும் பெயர் வந்தது. "விழுமம் சீர்மையும் சிறப்பு மாகும்" (தொல் காப்பியம் 835-சொல் அதிகாரம் உரி இயல் 55) எனச் சீர்மை விழுமம் என்பன ஒரு பொருட் சொற்க ளாக நிற்கு மென்பதை அறிக.

"சீரகங் கோட்டு" (பழ மலை யந்தாதி) என்பது முதலியன போல, மங்கல மொழியாதலின், 'சீர்' எனத் தொடங்கப்பட்டது.

வானோர் கட்குச் 'சீரமைந்த' என்னும் விசேடணம் (அடை), செந் தாமரை என்பதில், 'செம்மை' யெனபது இனங் குறித்து வருதல் போ லன்றி, 'செஞ் ஞாயிறு' என்பதி, லது ஞாயிற்றி னியல்பை விளக்க வந்தது போல, வானோர்களின் இயல்பை விளக்க வந்த தென்க; அத் தகையோரும் நனவு கொண்டு நீ ராடி இறை வழிபாடு புரியும் கால மென மார்கழியின் சிறப்பினை விளக்க.

மார்கழியானது, சிறவாத தக்கிணாயநத்தின் இறுதிக் கூறுகிச், சிறந்த உத்தராயணத்திற் சேர்க்குங் காலமாக இருத்தலால், சிறந்தது போலும். மார்கழி மாதம் பல வகையில் சிறந்ததாலன்றோ, வெண்ணையே கமழும் பவள வாய் விமலன், "मासानां मार्गशीर्षोऽहम्" (பகவற் கீதை 10 அத்யாயம் 35) என்றனர்.

இனிக் கர்ம தேவர்களை நீக்கி, ஏனைத் தேவர்களைக் குறிப்பதற்காக, 'சீ ரமைந்த" என் றடை கொடுத்தன ரெனினுமாம். பெரிதும் இன்பமே துய்த்தலானும், வேண் டுருக் கோடலானும், தம்மை வழிபட்டார்க்கு வேண்டுவன அளித்தலானும், நரை திரை மூப் பின்றி நீள வாழும் நிலைமை யுடைமையானும், இன்னும் பிறவு முடைமையானும், "சீ ரமைந்த வானோர்கள்" என்றனர்.

தேவர்கட்கு மூன் றவத்தைகளு முண் டென்பது புராணங்களா லறியப்படுதலின், "தேறும் விடியல்" என்றனர். நீ ராடாது எவ் வினையுஞ் செய்தல் கூடாது என்பதும்; அந் நீ ராட்டமும் வைகறையிலாயிற் சிறந்த தென்பதும், 'स्नात्वा कर्माणि कुर्वति" "விடியலே தட மூழ்கி" என்பன முதலிய மெய்ம் மொழிகளாற் றேரினமையின், "வைகறையி னீர் படிந்து" என்றனர். 'வைகறை, என்பது, இராப் பொழுதின் பிற் கூ றாகும். 'விடியல்' என்பது, பகற் பொழுதின் முற் கூ றாகும். இரண்டு மடுத்து நிகழ்தலின்' வைகறை யென்பதை, 'விடியல்' என வழங்குதல் வழு வமைதியாகும்.

இனிக், காலை யென்பது தான், பகற் பொழுதின் முற் கூற்றைக் குறிப்ப தாகும், வைகறை என்பதும், விடிய லென்பதும், ஒரு பொழுதைக் குறிக்கும் (இராப் பொழுதின் கடைக் கூற்றினைக் குறிக்கும்) இரு மொழிகளே யாம் எனினு மாம்.



ஆன் றவிந் தடங்கிய கொள்கையினரே, ஈண்டுச் சான்றோ ரெனப்பட்டனர் என்க. தனித் தனி மலராகச் சாத்துவதை விட, "பூமாலை புனைந் தேத்தி" (திரு நாவுக் கரசர்) என்றபடி, மாலையாகச் சாத்துதல் சிறந்த தெனக் குறிக்க, "தா ரமைந்த மாமலரைச் சாத்தி" என்றனர். தாமரை, செங் கழுநீர் முதலியன, முல்லை மல்லிகை முதலியன போலக் காம சனக மாகாதன வாதலின், "மையறு மலரி னீங்கி" (கம்பர்) என்பது போல, "மாமலர்" என்றனர். மா மலர் = குற்ற மின்றிய சிறந்த மலர். கனவு கொள்ளாது என்பார், 'கண் விழியாதே' என்றனர். உறக்கம் = சுழுத்தி. சீர்த்தி = மிகு புகழ். தொழுதல் = கை குவித்துத் தொழுதல்; அது, "கைகாள் கூப்பித் தொழீர்" (திரு நாவுக் கரசு சுவாமிகள்) என்பதனாற் புலனும். தொழுதல் = வழிபடுதல். அது, "மன மொழி மெய்களிற் றொழுதவ னருளால்" (நன் னூல் விருத்தி யுரை) என்பதனாற் புலனும். ஆடுகளும, மாடுகளும், வந்து கூடு மிடத்தை, ஆட்டுத் தொழுவம், மாட்டுத் தொழுவம எனவும், புள்ளின் கூட்டத்தை, 'புள்ளின் தொழுதி' யெனவும், வழங்கு மிடத்துத், 'தொழு' என்பது கூடுதலைக் குறித்து, இரண்டு பொருள்கள் ஒன்றோ டொன்று சேர்தலை மட்டு முணர்த்துதற் குரிய தாக நில்லாது, ஒன்று நிற்க, அதனோடு மற் றொன்று வந்து சேர்த லாகிய கூட்டத்தையு முணர்த்துதற் குரியதாகவும் நிற்றலானும், அது, கைகளொன் றோடொன்று குவிந்து சேர்ந்து வழிபடலையும், மனம், மொழி, கண், காது முதலியவை, இறைவனோடும், இறைவன் புகழ் முதலியவற்றோடும், கூடுத லாகிய வழிபாட்டையும், உணர்த்துதற் கேற்புடைய தாகவும், இங்கு வழங்கப்பட்ட தென்க. 1

2. ஆதித்தன் வானவெளி ஆர்வதன்முன் தூக்கம்அற்றுச்
சாதுவர்க்கம் யாறிழிந்து தட்பம்உற வேகுளித்துப்
பேதம்அற எங்கும் பிறங்கும்எழில் நல்குருவைச்
சோதிமறை யாவையுமே தொட்டறியா தேகலங்கும்

ஆதிநறும் கொன்றை அலர்துளபத் தார்அணிவோய்
பூதி புனையும்எங்கள் புண்ணியனே என்றுதொழ
மாதே வளருதியோ மாமுநிவீ ரேசனைநாம்
போதம் உறத்தொழுவோம் போதுகநீ எம்பாவாய்.

(நா-பொ-வி-ரை) சூரியன் ஆகாய வெளியில் வருவதற்கு முன்னர் (விடியற் காலத்தில்) சாதுக்களின் கூட்டம் விழித் தெழுந்து யாற்றில் இறங்கி, உடல் வெப்பம் நீங்குதலால்; உள்ளம் சத்துவ குணத்தோடு பொருந்தி ஆறி நிற்க, நீ ராடி, எல்லாப் பொருள்களிலும், எல்லாத் தேயங்களிலும், எல்லாக் காலங்களி லும், வேற்றுமை யின்றிச் சச்சிதாநந்த வடிவாக விளங்கும் மேன்மை தங்கிய நல்ல வீர சேகர ஞான தேசிக மூர்த்தியை, விளக்கம் அமைந்த வேதங்க ளனைத்தும் நேதி நேதி என்ப தன்றி இஃ தெனச் சுட்டிக் கூறுதற் கியலாது கலங்கும்படியான சர்வ காரண பூதரே, மண மிகுந்த கொன்றை மலராலும், துளபத்தாலு மமைந்த மாலைகளைத் தரித்து, அரனும், அரியு மாக விளங்குபவரே! விபூதியை அணி சாந்த மாகப் புனைந்த அற வாழி யந்தணரே! என்று அழைத்துப் புகழ்ந்து வழிபட்டு நிற்க, பெண்ணே! இளஞ் சிறுமியே! (நீ அச் செயலை யறியாமல்) தூங்குகின்றனை, இவ் வாறு தூங்கலாமா? சிறந்த மனன சீலரான அவ் வீர சேகர ஞான தேசிக மூர்த்தியை நாம் மெய்ஞ் ஞான மடைதற் பொருட்டு வழிபடுவ தற்கு நீ ராடச் செல்வோம் நீ வருதி. எ—று.

"பேத மற எங்கும் பிறங்கும்" என்பதற்கு, எல்லாத் தேயத் தும், எல்லாக் காலத்தும், எல்லாப் பொருளிடத்தும், அவை வேறு, தான் வேறு என வின்றி, அவை தாமேயாய் விளங்கும் எனல் சாலும்.

வான வெளி இரு பெய ரொட்டுப் பண்புத் தொகை. வான வெளி=மேகங்க ளுலவும் ஆகாயம் எனினுமாம். இறைவன்



தேச கால வஸ்து பரிச்சேத மின்றியவனாயினும், எல்லாமா யல்லனுமா யிருத்தலால், இப் படியன், இந் நிறத்தன், இவ் வண் ணத்தன் என்று இயம்புதற் கரிய னாதலின், "சோதி மறை யாவையுமே தொட்டறியாதே கலந்நும்" எனவும், அங்ஙன மாயினும், உலக மாகிய காரியத்தைக் கொண்டு நிச்சயிக்கப்படுதலின், "ஆதி" எனவும், அவ் வபின்ன நிமித்த வுபாதான காரணப் பிரமமே, படைத் தளித் தழிக்க மும் மூர்த்திக ளாக இலகலின், '-நறுங் கொன்றை யலர் துளபத் தா ரணிவோய்" எனவும், மும் மூர்த்திக ளாக விளங்கித் தனு கரண புவன போகங்களை, படைத் தளித் தழிக்கு மவனே, தன்னை யண்மி வீடு பேறு பெறக் கருதுவார்க்கு அரு ளிறையாக (குருபரனாக)த் தோன்றித் தத்துவ ஞானந் தருவா னாதலின், "பூதி புனையு மெங்கள் புண்ணியனே" எனவும் கூறி னர். பூதி புனையும் எங்கள் புண்ணியனே என்பதற்கு, எங்கள் புண்ணிய பரிபாகத்தால், திரு நீ றணிந்த திருக் கோலத்துடன் அரு ளிறை யாக எழுந்தருளி வந்தவனே எனப் பொரு ளுரைப்பினு மமையும், உபலக்கணத்தால் பிரமனுங் கொள்ளப்படுவன். 'பூதி' என்பதனால் உருத்திராக்க முதலியனவுங் கொள்ளப்படும். "ஆரங் கண்டிகை", "பூசு நீறு போல்" (பெரிய புராணம்) என்பன முத லியவற்றால், அரு ளிறை வடிவ மாக அமர்ந்தவர்கள் அணி சாந்தும் கலன்களு மிவை யென்பது புலப்படும். "ஞானியை நான்கூறா னென தொழிக, ஞால முய நாதனருளால், மேனியது கொண்டுதனை நல்கவரு மென்றறையும் வேத முடிவே" (தத்துவ ராய சுவாமிகள் சசிவன்ன போதம் 110) என ஞான தாதாக்க ளாகிய குரு மூர்த்தி களை இறைவ னாகவே, மறை முடிவுகளுங் கருதுகின்றன என்ப தால், சான்றோர் குரு மூர்த்தங்களை இறைவ னாகவே கொண்டு விளித்தலும் பிறவுஞ் செய்வ ரென்க. 2.

3. தெய்வத் திருமறைகள் சென்றறியா தோலமிடக்
கைவைத்த சான்றோர்கள் காலைநறும் நீர்ஆடி

மெய்வைத்த நம்குருவின் மேலாம் அடிபரவி
உய்வைத் தரத்துதிக்கும் ஓங்கும்ஒலி எங்கும்உற
மைவைத்த பூம்குழலாய் மற்றறியா தேதுயில்வாய்
செய்வித்தும் செம்சாலி தேங்கும் திருக்களரில்
பைவைக்கும் பாம்பணியும் பண்ணவன்வீ ரேசன்அடி
பொய்வைக்கும் மாயைகெடப் போற்றுவம்வா எம்பாவாய்.

(நா-பொ-ரை.) தெய்வத் தன்மை பொருந்திய வேதங்கள் இறைவனைச் சுட்டிக் காட்டப் புகுந்து, இஃ தில்லை, இஃ தில்லை யென, தம் மறியாமை வெளிப்படச் சுட்டுதற் கியலாமல், அலறி நிற்ப, அன்பர்க் கெளியனுதலின், ஒழுக்க நிரம்பிய பெரியோர்கள், அவ் விறைவ னருளால், விடியற் காலத்தில் தூய்மை யுண்டாக்குந் தண் ணீரிற் குளித்து, மனித வேடந் தாங்கிய நம் வீரசேகர ஞான தேசிக மூர்த்தியாகிய இறைவனது மேலான திரு வடிகளை வணங் கித் துன்ப மனைத்து மில்லாத இன்ப வடி வாகத் தம்மை யுள்ளபடி யுணருவதற்காகத் துதிக்கும்படியான முழக்கம், நாற் றிசையும் பரவி நிற்க, கரிய கூந்தலை யுடையவளே! எம் இளஞ் சிறுமியே! (நீ) அதனை யறியாது உறங்குகின்றனை, (இவ் வாறு உறங்குதல் நோன் பாற்றப் புகுந்தவர்களுக்குத் தக்க தன்று.) வயல்களிலே விதைத்த செந் நெற் பயிர்கள் (செழித்து) நிறைந் துள்ள திருக் களரென்னும் திரு வூரி லெழுந்தருளி யிருக்கின்ற, படத்துடன் கூடிய பாம்பை அணி கலனுகக் கொண்ட இறைவ னுகிய அவ் வீர சேகர ஞான தேசிக மூர்த்தியின் திரு வடிகளைப் பொய் யாகப் பொருந்திய அஞ்ஞான மென்ப தடியோ டழிய வழிபடுதற்கு நீ ராடப் போவோம் வருக. எ—று.

முற்று முணர்ந் துரைத்தலின், "தெய்வத் திரு மறைகள்" என்றனர். கை = ஒழுக்கம். 'காலை' என்பது இலக்கணையாக விடியற் பொழுதை யுணர்த்துகின்றது. வேதங்களா லறிய முடி யாதவனுயினும், அன்பர்கள் அவ னருளாலே யவன் றாள் வணங்க



வியலு மாகலின், "காலை நறு நீ ராடி வணங்கி" என்பதற்கு, இறைவனது திரு வருளாலே என உரை தொடங்கப் பெற்ற தென்க. மெய் = மனித உடல். மெய் வைத்த என்பதற்கு, உலகத்தில் மெய்ம்மை இது வென நிலை நாட்டிய எனப் பொருள் கொண்டு, இரண் டில்லை யொன்றே என்னும் அத்வைத மெய்ந் நிலையை நிலை நாட்டிய என்று விளக்கங் கொள்ளலு மாம். 'மை வைத்த' என்பதற்குத், தகரச் சாந் தணிந்த என்றோ, மேகத்தைத் நிக ராகக் கொண்ட என்றோ, உரைப்பினும் பொருந்தும். நல்ல பாம் பென்னும் பாம் பினங்களை அணிகின்றான் என்பார், "பை வைத்த பாம் பணியும்" என்றனர். அவை சத்தியத்திற்குக் கட்டுப் படல் முதலிய நற் பண்புகள் வாய்ந்தவையாதலின், நல்ல பாம்புகள் எனப்படும். பண்ணவன் = தேவன். அது இங்கு இறைவனை யுணர்த்துகின்றது. 'பொய் வைத்த மாயை', 'பொய்' என்ப தீண்டு பாத யோக்கியம் என்பதை யுணர்த்துகின்றது. வியவகார நிலையில் பாவ பதார்த்த மெனக் கொள்ளப்படுதலின், அது (மாயை) முற்று மின்மைக்கு எதிர்மறை யெனக் கொள்ளற்க.

"அஞ்ஞான மாயை யென்பன" வெவ் வேறு பொருள்களை யுணர்த்துவன வாகவும், ஒரு பொருளை யுணர்த்துவன வாகவும், இடத்திற் கேற்பக் கொள்ளப்படுவன வாதலின், மாயை என்ப தற்கு, 'அஞ்ஞானம்' என உரை உரைக்கப்பட்டது என்க. அஞ் ஞானம் என்பதும், அவித்தையை மட்டு முணர்த்தாமல், மாயையை யும் உணர்த்துவ தாகும். அஞ்ஞானமே சத்துவ குண சுத்தியால் 'மாயை' எனவும், சத்துவ குண மலினத்தால் 'அவித்தை' எனவும், பெயர் பெறும். அது, माया चाविद्या च स्वयमव भवति ॥ என்னுஞ் சுருதி முதலியவற்றுற் றெளிவுறும். 3.

4. அஞ்ஞானம் மூட அலைந்து திரிந்திடும்என்
போய்ஞ்ஞாலம் அத்தனையும் போக்க நினைந்தருளிச்

சேம்ஞாயி றென்னத் திகழும் திருஅருளால்
போய்ஞாலம் வல்லே புறம்கோடுப்ப ஏற்றிவைத்த
மேய்ஞ்ஞாந நல்விளக்கை மீதோளிரச் சேய்துமிக
எஞ்ஞாந மும்கடந்த இன்பவடி வத்தைஒளிர்
விஞ்ஞாநம் ஆக விளங்கியவீ ரேசன்சீர்
எஞ்ஞான்றும் நேஞ்சுருகி ஏத்துவம்வா எம்பாவாய்.

(நா-பொ-ரை.) எங்கள் இளம் பருவப் பெண்ணே! அஞ்ஞான மாகிய இருள் (இருபத் தொன்பது தத்துவங்களையும் ஒன்றற்கொன்றுள்ள வேறுபாடு தெரிய வொட்டாமல், எல்லாவற்றையுமொன்றாக நா னென்று அபிமானிக்கும்படி) மறைத்தலால், (பல்வேறு உடல்களை யெடுத்து விண் ணுலகம் மண் ணுலக முதலிய எல்லா வுலகத்தின்கண்ணும்) மாறி மாறிப் புகுந்து (சுழன்று) திரிகின்ற என் னுடைய (தேகாதி: பிரபஞ்சங்களை மெய் யென்றுணரும்) பொய் யுணர்ச்சிக ளெல்லாவற்றையும் போக்குவதற்கெண்ணி, இள வள ஞாயிறு போல, விளங்குகின்ற திரு வருளால், அப் பொய் யுணர்ச்சிகள் விரைவில் ஒழியும்படி, என் னுள்ளத்தில் பற்றச் செய்த, பொய்ப் பொருள் மெய்ப் பொருள்களின் வேறுபாட் டுணர் வாகிய நல்ல விளக்கினை, (அழியுந் தன்மைத் தாகிய இம்மை மறுமை யின்பங்களி னுவர்ப்பும், உட் பொறி வெளிப் பொறிகளை யடக்கும் சம தம முதலிய ஆறு பண்புகளும், வீட்டின்கண் விருப்பும் தோன்றவும், அவை யேது வாக மகா வாக்கிய சிரவணஞ் செய்து, இல்லை இலங் கிற்றிலை யென மறைக்கும் இரு வடிவ மறைப்பான தழியத், திடமாக நூ லுணர்வும், நே ருணர்வும், உண்டாகும் வரை) மிக மேலாக சுடர் விட்டொளிரும்படி செய்து, காட்சி கருத்து ஒப்புமை பொருட் பேறு விளங்காமைக ளாகிய அளவைகளா லுண்டாகும் அறிவுகளுக்குப் புல னாகாத இன்ப வடிவ மாகிய ஈசுர சாக்கி யாகிய பிரமத்தைச், சீவ சாக்கி யாகிய பிரத்தியக் காக, 'தத்துவமஸி' என்னு முபதேச மகா வாக்கியத்தால்,



விளங்கும்படி உபதேசித் தருளிய, வீர சேகர ஞாந தேசிக மூர்த்தியின் விழுமிய பண்புகளை, உள்ளங் கசிய எப் பொழுதும் புகழுவோம் நீ ராட எழுந்து வருதி. எ—று.

உலகம் என்பதில் எல்லா மடங்குதலின், அத்தியாசத்தினை "ஞாலம்" என்றனர். 'ஞாலம்' என்ப தீண்டு அத்தியாசத்தினைக் குறிப்பதற்காகவே, "என் போய்" என்னும் அடை கொடுக்கப் பட்டது. தனது முற்று மின்மை நிலைக்களத்தில், தனது தோற்றம் அத்தியாசம் ஆகும். அத்தியாசம், ஞாநாத்தியாசம் அர்த்தாத்தியாசம் என இரு வகைப்பட்டு, ஒவ்வொன்றும் பல வாக நிற்றலின், "போய்ஞ் ஞால மத்தனையும்" என்றனர். எல்லா அத்தியாசங்களையும், அடியோடு நீக்க வல்லது, "தத்துவ மஸி" என்னு மகா வாக்கிய விசாரணையா லுண்டாகும் திடாபரோக்ஷ ஞான மாகும். அவ் விசாரணையும், நான்கு சாதனங்களும் நிரம்பியவர்கட்கே பயனளிக்க வல்லதாகும், அச் சாதனங்களுட் டலையாயது நித்தியாநித்திய வத்து விவேகமே யாகும். அது, குருபாரது திரு வருளாலே கைகூடுவதாகும்; ஆதலின், அத் திரு வருளைப் பெற யான் முதலில் ஒழுக்க நிலையினின்று குருபரனைச் சிந்தித்தலும், வந்தித்தலும், புகழ்தலு மாகிய வழிபாடு செய்தே னதனு லவர் திரு வருள் செய்து, நித்த வநித்த வேறுபாட் டுணர்வையும், அதன் வாயி லாக மற்றைய சாதனங்களையும் ஈந்து, பின்னர் மகா வாக்கியத்தை உபதேசித்து, அம் மகா வாக்கிய விசாரணை மூல மாக, பிரத்தியக் காகிய யானே, பிரம மாக இருக்கிறேன் என்னுந் திடாபரோக்ஷ ஞானத்தை யீய, துன்ப வொழிவு இன்ப அடைவு வடிவ வீடுபேறு பெற்றேன். நீயு மவ் வாறு வழிபடின், அவை யெல்லாம் பெற்றின்புரு வாகலா மென, நோன் பாற்றத் தொடங்கி யயர்ந்து தூங்கும் தன் மகளை நோக்கித், தாய் கூறி, நீ ராடுவதற்கு எழுப்புவதாக வைத்துத் தங்கள் குருபரரைப் புகழ்ந்தபடி. நூ லுணர்வு= பரோக்ஷ ஞாநம். நே ருணர்வு=அபரோக்ஷ ஞாநம். காட்சி,

கருத்து, ஒப்புமை, பொருட் பேறு, விளங்காமை என்பவற்றை வட நூலார், பிரத்தியக்ஷம், அநுமாநம், உபமாநம், அருத்தாபத்தி, அநுபலப்தி என்பர். 4.

5. அல்லல் பிறவி அறுப்பதற்கா உள்இருளை
நல்லகன்மம் ஒன்றும் நலியாது பூதஇருள்
வெல்லும் படையால் விலகுமோ எல்விளக்கால்
நில்லா தழியும் நிலைமைபோல் ஞானத்தால்
இல்லை எனச்செய்தல் ஏலும்எனத் தொண்டருக்கு
மெல்லக் கடைவிழியால் வீச்சித் துணர்வளிக்கும்
மல்லல் திருக்களர்எம் மாமுனிவீ ரேசன்சீர்
சொல்லித் துதிப்பத் துயில்எழுவாய் எம்பாவாய்.

(நா-பொ-ரை) எங்கள் பாவையே! துன்ப வடிவாகிய பிறவிப் பிணியை அளிக்க வல்ல, யா னென தென்னும் தளையை யறுப்ப தற்கு, (முதலில்) அஞ்ஞாந மாகிய அக இருளை யொழித்தல் வேண்டும்; அவ் வஞ்ஞாநத்தையோ தீய கன்மங்க ளன்றி நல்ல கன்மங்களும், அழிப்பதற்கு வல்லவை யாகமாட்டா. எப்படிக் கண் ணிருள் (வெளி யிருள்) வாள் வேல் முதலிய படைகளின் குத்து வெட்டு முதலிய தொழில்களால், நீக்கத் தக்க தாகாமல், ஞாயிற்றின் ஒளியால் நீக்க, நிலையா தழியத் தக்க தாமோ, (அவ் வஞ்ஞாநத்தை) முக் காலத்தினும் உண்மையாக இல்லை யென்னும் படி செய்தற் கியலு மெனத் திரு வுளம் பற்றித் திருக் கடைக் கண்ணைக் குளிர்ந்த நோக்க முடன் தன்னை யண்மிய மாணவர் மேற் சாத்திச் சாதன முதலிய வாயிலாகத் தத்துவ ஞாநத்தினை யளித்தருளும் வளப்பம் பொருந்திய திருக் களரென்னும் சோழ வள நாட்டுத் திருப் பதி யொன்றில் சுவாநுபூதிச் செல்வத்துடன் எழுந்தருளி யிருக்கும் எங்கள் குருபரர் வீர சேகர ஞாந தேசிக மூர்த்தியின் சிறப்புக்களை, ஒவ் வொன்றாக எடுத் துரைத்துப் புகழுதற்கு, உறக்கத் தினின்றும் எழுந்து வருதி (மார்கழி நீ ராடப் போவோம்.) எ—று.



பிறப்பின்கண் இன்ப மாகத் தோன்றுவனவும், பின் விளையும் துன்பத்திற்கு முன்னிலையாக (காரணமாக) இருத்தலின், பிறப் பிடைத் துன்பமே யல்லாமல், சிறிதும் இன்ப மில்லை யென்பார் "அல்லல் பிறவி" என்றனர். இது "தோன்றி நின் றழியப் படுங் கோடும் பிறப்பிற் றுன்பமே யன்றியேட் டுணையு மின்றிநெஞ் சகத் தோர்ந் திடிற்பிறி திலையால்" (சாந்த லிங்க சுவாமிகள் வைராக்கிய தீபம்) என்பது முதலியவற்றாற் றெளி வறு மென்க.

அஞ்ஞாந மாகிய வுள் ளிருளே, தேகாதிகளைத் தா னென அபிமானிக்கச் செய்கிற தென்பதும், அவ் வபிமான வாயிலாக பிறப் பிறப்பாகிய சம்சாரத்தில் உயிர்களை யழுத்துகின்றது என்ப தும், "अज्ञानेनावृतं ज्ञानम् तेन मुह्यन्ति जन्तवः ॥" (பகவற் கீதை) என்பது முதலியவற்றால் தெளிவுறு மென்க.

அஞ்ஞாநம் கன்மத்தால் அழியாது, ஞாநத்தாலேயே அழியு மென்பது, "தர்ப்ப ணத்தினில் அழுக்கற வேண்டினுல் சாதனத் தொழில் வேண்டும், கற்ப ளிங்கிலா ரோபமே கறுப்பெனக் கண்டிட மனம்போதும்." 2–69.

"துங்க ஞாநமே கருமவந் ஞாநத்தைச் சுடுகின்ற நெருப் பாமே." (கைவல்லிய நவநீதம் 2-70) என்பது முதலியவற்றாற் தெளிவுறு மென்க.

"பூத விருள் வெல்லும் படையால் விலகுமோ எல் விளக் கால் நில்லா தழியும்" என்பது, "குத்தும் வெட்டும் படைகளினுற் கூடுமோ இருடுறக்க, உத்தமமாம் ரவியுதித்தா லோடுமிருள்" (கீதா சாரத் தாலாட்டு) (58) என்பதை நினைப்பிக்கின்றது.

அருளா லெழும் பார்வை, முன்னும் பின்னும் இன்பந் தரத் தக்க தாதலால், "மெல்லக் கடை விழியால் வீச்சித்து" என்றனர்.

அருட் பார்வை, வெகுளிப் பார்வை போலப் பொள்ளென எழாது, ஆறிய நெஞ்சத்துடன் அமைதியாக வருதலின், "மேல்ல" என்றூ ரெனினு மாம்.

வெகுளிப் பார்வை, பொள் ளென வரு மென்பது, "போள் ளென வாங்கே புறம் வேரார்" (திருக் குறள்) (41-7) என்பது முதலியலற்றுல் வெளிப்படு மென்க.

'விலதுமோ' என்பதில் ஓகாரம் எதிர் மறையில் வந்தது. 5.

6. சோதிமறை ஆறங்கம் தோன்றத் துருவிஎன்றும்
மேதை உறுவோர் வியப்பவீ ரேசகுருத்
தாதா உரைத்திடவே தத்துவம்எ லாம்கடந்து
நீதான் தனியாக நித்தம் இருப்பதனைப்
பேதாய்நீ கேட்டிருந்தும் பேதுற் றயர்ந்தனையே
பாதாளம் ஏழினுமோ மேலும் பறைசாற்றி
ஓதும் அவன்உரையை ஓம்பிப் பவம்துடைக்க
நாதன்அவன் நல்தாளை நாம்தொழுவோம் எம்பாவாய்.

(நா-பொ-ரை) எங்கள் பாவையே! முற் றுணர்ச்சியுடன் மூவா தொளிர்தரும் இறைவனு லருளிச் செய்யப்பட்ட வேதங் களையும், அவற்றி னங்கங்க ளாகிய வியாகரண முதலிய ஆறினையும் விளக்கமுற ஆராய்ந்து, ஞான தாதாவாகிய நம் வீர சேகர ஞான தேசிக மூர்த்தியானவர், நீ பிருதிவி முறலிய தத்துவங்களோடு கலந்திருப்பினும், அவற்றிற் கெல்லாம் வே ருகி அவைகளி னியல் பொன்றனையும் பற்ருது தனித் திருக்குந் தன்மையை, "இம் மந்த நிலையை யுடையாட்கும் மெய்ம்மையை எளிதி லுணர எடுத் துரைக்கின்றனரே" என அறிவுடையோ ரெல்லாரும் வியப்புக் கொள்ளும்படி குரு வாய் மலர்ந்தருள, நீ அதனைக் காதாரக் கேட்டும் அதன்கண் நெஞ்சினைச் செலுத்தாமல், மயங்கித் தூங்குகின்ற னையே! (இவ் வாறு தூங்கலாமா) கீ ழுள்ள ஏ ழுலகுக்கு மட்டுமா?



மே லுள்ள ஏ ழுலகத்திற்கு மெட்டும்படி, வேதாந்த டிண்டமத்தை முழங்கும்படி செய்து, மெய்ப் பொருளை விளக்கும்படியான அக் குருமூர்த்தியின் திரு வாய் மொழிகளைப் பிறப்பினை அகற்றி, இன்ப வீடு எய்துவதற்கு, மறவாது உள்ளத் திருத்தி, அம் மொழிப் பொருளை யடைவதற்கு முதலில் சித்த சுத்தி முதலியன மூலமாக எல்லாச் சாதனங்களையும், அடைவதற்காக அத் தேசிகரின் திரு அடிகளை வழிபடுவதற்கு நல்ல கால மாகிய மார்கழியின் விடியற் காலத்தில் நீ ராடுவோம் வருக. எ—று.

சோதி மறை, மூன்ரும் வேற்றுமை யுருபும் பயனு முடன் ரெக்க தொகை யாகும். ஆரும் வேற்றுமைத் தொகையாகக் கொண்டு இறைவனது மறை எனப் பொருள் கொள்ளினும் பொருந்தும். வேதம் நித்திய மென்பார் கொள்கைப்படி யுரைக் கப்பட்ட தெனின், முற்று முணர்ந் துரைக்கு மறைகள் எனப் பொரு ளுரைக்க. ஆ றங்கம் = கற்பம், சந்தசு, நிருத்தம், வியாகா ணம், சோ திடம், சிட்சை யென்பனவாம்.

அசேட சாத்திரஞர்களாகிய பண்டிதர்களும், மெய்ம்மை யறியாது கலங்கி நிற்ப, இவ் வீர சேகர ஞான தேசிக மூர்த்திகள் மந்தர்களும், மெய்ப் பொருளை யினி துணரும்படி, தங்கள் ஆதி குரு மூர்த்திக ளாகிய சங்கர பகவத் பாதர் முதலியவர்கள் வேத முதலியவற்றை ஆராய்ந் துணர்த்தியபடியே யுணர வுரைத்தலின், "சோதி மறை யாறங்கந் தோன்றத் துருவி" எனவும், "மேதை யுறுவோர் வியப்ப" எனவும். அவற்றை உரைத்தலுக்கு அடை யாக்கினர்.

"எவரே வரினும் அவர்க் கெல்லாம் அத்துவித வுண்மையை யெடுத் துரைப்பா"ரென, எங்கு மறியும்படி யிருந்து, கோயி லூர் திருக் களர் முதலிய இடங்களின் மட்டு மன்றிச், சென்ற சென்ற

இடங்க ளெல்லாவற்றினும், வேதாந்த முழக்கம் செய்து, மெய்ப் பொருளை விளக்கி நின்றமையின், பாட லாசிரிய ரதனை அன்பு மேலீட்டால், பாதாள மேழினுமோ மேலும் பறை சாற்றி'' என அதிசயோக்தியாகப் பாத்திரத்தின் மொழியாக வுரைத்தனர்.

அறிவுறுத்தியும் அறியா திருத்தலின், 'பேதாய்' எனச் சினந் தோன்ற விளிக்கப்பட்டனள். 'நற் றாள்' என்பது, கற்றதனு லாய பயனென் கொல் வாலறிவ னற்றாள் தொழா ரெனின்.'' (வள்ளு வர் 1-2) என்புழி நற் றாள் போ னின்றது. 6.

7. சாதநங்கள் நான்குநனி சார்ந்தவகை தான்அறிந்தே
வேதநம் செய்தளிக்கும் வித்தகனும் வீரேச
நாதனைநம் ஆசை நவைமரத்தின் வேர்களைந்து
சோதனைகள் செய்துநலம் தோற்றுவித்த பெம்மானை
மாதம் பலவினும்சீர் மன்னிமிளிர் மார்கழியில்
வாதனைகள் இல்லாமல் வாய்ஆர வேபுகழ்ந்து
பேதம் கழன்ற பெரும்பொய்கை நீர்ஆடி
ஏதம் கழற்ற எழுந்திருப்பாய் எம்பாவாய்.

(கா-பொ-ரை.) எங்கள் பாவையே! தன்னை யடுத்த மாண வர்களுக்கு (பூர்வ புண்ணிய பரிபாகத்தினுலும், தன்னுடைய ஆத்த மங்க முதலிய பணிவிடைகளாலும்) நான்கு சாதனங்களும், மிகப் பொருந்திய இயல்பினை யறிந்து, விசாரணை வாயிலாக மகா வாக்கிய உபதேசஞ் செய்து, அவர்களை அஞ்ஞானிகள் என்னும் நிலையினின்று மாற்றி (மெய்ஞ் ஞானிகளாக ஆக்குவதற்கு, மிஞ்சிய பிராரத்தத்தின் வினைப் பயன்களைத் துய்ப்பதற்கு உடம்போடு கூடி நிற்றலின்,) பிறவியாகிய பயனைப் பயக்க வல்ல அவா வாகிய மரம் சிறிதுந் தளிர்க்காத வண்ணம் வேரைப் பறித்து (தன் சாது சங்கத் திலேயே திடாபரோக்ஷ ஞானம் வரும் வரை வைத்து)க் காக்கும் தத்துவ ஞானியாகிய நம் வீர சேகர ஞாந தேசிகத் தலைவரும்,



(அவர்களைப் பிரம வித்துக்க ளாக ஆக்குவதோடு மட்டு மமை யாமல் நிதித்தியாசன வாயிலாக நிட்டர்களாக நிலைக்கச் செய்து, சீவன் முத்திப் பேரின்பத்தையும், நுகரு மாறு செய்த தலைவரும் ஆகிய குருபரரை, மாதங்கள் பலவற்றுள்ளும் மிகச் சிறப்புப் பொ ருந்தி விளங்குகின்ற மார்கழி மாதத்தில், சோம்பல் முதலிய துன்ப சாதனங்க ளொன்று மில்லாது நீக்கி, வாய் நிறையப் புகழ்ந்து, தேச கால வத்துப் பரிச்சேத மின்றிய பரிபூர்ணப் பொய்கையில், அழியாத பேரின்ப நீரிற் குளித்து, முத் தாபங்கள் சிறிது மின்றி இறுமாந்திருப்பதற்கு (இப் பொய்கை நீரிற் படிவோம்) எழுந்தி ருப்பாயாக. எ-று.

சாதனங்கள் நான்கு நனி சார்ந்த வகை தா னறிந்தே சோதனைகள் செய்து வேதநஞ் செய்து ஆசை நவை மரத்தின் வேர் களைந்து அளிக்கும் நம் வீரேச நாதனை, நலம் தோற்றுவித்த பெம்மானை யெனக் கூட்டிப் பொருள் காணும்படி பொழிப் புரைக் கப்பட்டது. முன்னும் பின்னும் வரும் பாக்களில் இசை யெச்ச மாகப் பல சொற்கள் கொணர்ந் துரைக்கப்படு மிடங்களை நோக்கிப் பாட்டி லச்சொற்க ளில்லையே யென்னற்க; இசை யெச்சமாகக் கொணரப்பட்டன வென்க.

'தான்' என்ப திங்கும் கட்டுரைச் சுவைபட நின்ற தென்க. 'தத்' 'துவம்' என்னும் வேறுபாட்டால் சோதனைகள் என விசா ரத்தைப் பன்மை வாசகத்தாற் கூறின ரென்க. ''வாதனைக ளில் லாமல்'' என்பது, சிரத்தையைக் குறிப்ப தாகும். பிறவி யாகிய இன்னலுக் கேது வாக இருத்தலால், 'ஆசை நவை' யெனக் கூறப் பட்ட தென்க.

நவை=குற்றம். நச்சு மரம் என்பது குறிப்பு. கண்ண பிரான் சம்சாரத்தை அரச மர மாக வுருவகித்தது போல, இவ் வாசிரியரும் அதனை யடி யொற்றிச் சம்சாரத்திற்கு வித்தான ஆசை

யையும் நச்சு மர மென வுருவகித்தனர்; அது மரம் போலத் தோன்றி ஊன்றி நின்று (உள்ளத்தே பதிந்து) திணிந்து வளர்ந்து பல கிளைகளாக விரிந்து பிறவி யாகிய பயன்களைத் தருதலின். ஆசா என்பது தமிழில் 'ஆசை' யென ஈறு திரிந்து நின்றது. ஆசா என்பது, பெண்பால் மொழி. இவ் வாறு பெண்பாலாகக் கூறப்படுகையால், தோன்றி மே லெழுந்து பற்றிப் படர்ந்து கொழுந்து விட்டு ஓங்கும் கொடி யெனவும், சான்றோர் அதனை யுருவகிப்பர்; கொடியும் பெண்பால் மொழியாக 'லதா, வல்லி' என வழங்கப்படுதலின். ஆசு ஐ எனப் பிரித்துக் குற்றத்தைச் செய்வது ஆசை, அல்லது, குற்றத்தை வடிவமாக வுடையது ஆசை எனப் பொருள் கொண்டு, தமிழ்ச் சொல் லென்பாரும் உளர். அவர், ஐ என்பதை வினை முதற் பொருளை யுணர்த்தும் விகுதி யென்பர். ஆசை யானது ஒண்டுக் குடியாகிய உடலை முன்னிட்டும், அதன் சார்பான மனைவி மக்களை முன்னிட்டும், அவை யெல்லா வற்றிற்கும் வேண்டிய மனை மாடு முதலிய பொருள்களை முன்னிட்டும் எழுவதாகலின், அவை யெல்லாம் பொய்யாகவும், அறி வற்றன வாகவும், இருந்தால், துன்பமே பயக்க வல்லவை, இன்பந் தினை யளவுந் தருபவை யல்ல என மொழிந்து சிறிதும் மனம் பற்றாத படி செய்தலின், ''வேர் களைந்து'' என்றனர். 7.

8. வேலைசூல வும்தடமண் விண்வாயு தீஅறல்விண்
கோலும் மதிஇரவி கூடும்உயிர் எட்டுவித
ஆலயங்கள் உள்ளே அமர்வீர சேகரனை
நால்ஆகும் வாயானும் நாரம் துயில்வோனும்
மேல்ஆன சூள்உறவு விண்டறியா தேகலங்கி
மால்ஆக நிற்க வளர்ஒளியை நல்குருவை
ஏலா இளம்கிளியே எய்யா துறங்கிடுதல்
சாலாது நீஎழுவாய் சாற்றுவம்நாம் எம்பாவாய்.





(நா-பொ-ரை.) எங்கள் பாவையே! இளங் கிளி போன்றவளே! அடியே! கடல் சூழ்ந்த பூமியும், ஆகாயமும், காற்றும், நெருப்பும், நீரும் ஆகாயத்திற் சுழன்று திரிகின்ற ஞாயிறும் திங்களும் அம் மண் ணுலகத்தின்கண்ணும் விண் ணுலகத்தின்கண்ணும் நீ ருலகத்தின்கண்ணும் காற் றுலகத்தின்கண்ணும் நெருப் புலகத்தின்கண்ணும் அவ் வவ் வுடம்புகளுடன்) கூடி நிற்கும் உயிர்களு மாகிய எட்டுப் பிரி வாகிய ஆலயங்களுக்குள்ளே எழுந்தருளியிருக்கின்ற (அவ் வெட்டினுள்ளு நிறைந்து நிற்கின்ற) இறைவனுகிய வீர சேகர ஞான தேசிக மூர்த்தியும், நான்கு முகங்களை யுடைய பிரமனும், பாற் கடலிலே பள்ளி கொண்ட திருமாலும், உயர்ந்த நெடு மொழி கூறி, அடியையும் முடியையும் காண முடியாமல், நெஞ்சம் நொந்து மயங்கி நிற்கும்படி, ஒளிப் பிழம்பாக வளர்ந்து நின்ற சிவ பெருமானு மாகிய நல்ல குருபரரை, வந்தித்துச் சிந்தித்து வாழ்த்தி வழிபடுதலை மறந்து, தூங்குதல் தக்க தன்றாகும். அவரை நினைந்து வணங்கி வாழ்த்த நீ ராடப் போவோம் நீ எழுவாயாக. எ—று,

வேலை=கரை. அது ஆகு பெயராகக் கடலை யுணர்த்துகின்றது. 'வேலா' என்பது தமிழில் 'வேலை' யென ஈறு திரிந்து நின்றது. ('வேலி' என்பது செயப்படு பொருளை யுணர்த்துவதாக, சூழ்ந்து நிற்கு மரணை யுணர்த்துவது போல, ''வேலை'' என்பதும் செயப்படு பொருளை யுணர்த்துவதாய்ச் சூழ்ந்து அரணாக நிற்கும் கடலை யுணர்த்துதலின், தமிழ்ச் சொல்லே என்பாரு முளர். கரையும் அரணுகச் சூழ்ந்திருப்பதாகலின், அதனை யுணர்த்துவதும் (கரையை யுணர்த்தும் வேலை என்பதுந்) தமிழ்ச் சொல்லே என்பவர். வெல்லுதலால் 'வேல்' என ஒருபடை வழங்கப்படுகின்றது. வேல் போலக் கூரிய முட்களை யுடைமையால், கரு வேல், வெள் வேல், உடை வேல், குடை வேல், என அம் மரங்கள் வழங்கப் படுகின்றன. அம் மரங்களின் முள் நிறைந்த கிளை வளார்களால்

ஆக்கப் படுகின்றமையின், அரண்கள், 'வேலி' யென முதலிற் கூறப் பட்டன. "இடுமுள் வேலி யெயினர்" (சிலப் பதிகாரம் 12 வேட்டுவரி கதை 10 வரி) என்பது முதலியவற்றா லறியலாம். வேலி யென்பது, பின்னர் நீர் வேலி, மதில் வேலி யெனக் காப் புடையனவற்றை யெல்லாங் குறிக்குஞ் சொல் லாயிற்று. இங்கு இ, ஐ என்னு மிரண்டும் செயப்படு பொருளை யுணர்த்தும் ஈறு களாக நின்றன என்பர்.

இனி இவ் வீறுகளைக் கருவிப் பொருளை யுணர்த்தும் ஈறுக ளெனக் கொண்டு, மேல் வருவாரைத் தடுத்து வெல்வதற்கு ஏது வாக வுள்ளன என்னும் பொருளில், வேலி, வேலை யென்பன நிற்கின்றன என்றுங் கூறுவர். தடம்=விரிவு. தட மண்= விரிந்த மண். 'தடம்' என்பதை எல்லாப் பூதங்களுடனுங் கூட் டலாம். பயிலு மிட மாதலின், இறுதிப் பூத மாகிய மண்ணை முதலிற் கூறி மற்றையவற்றை முறையே கூறினர். வாய்=முகம். 'முகம்' என்பது வட மொழியில் உணவு செல்லும் வழியையும், மற்றைய புலன்கள் செல்லும் வழிக ளாகிய பொறிகளை யுடைய உறுப்பினையும் உணர்த்துவது போலத், தமிழில் 'வாய்' என்பது உணவு செல்லும் வழியையும் மற்றைய புலன்கள் செல்லும் வழிக ளாகிய ஐம் பொறிகளையும், சேரக் கொண்ட வுறுப்பினையும், உணர்த்து மென றனித் துணர்ந்தன ராதலின், நாலாகும் முகத் தானும் என்பார், "நாலாதும் வாலானு" மென்றனர். வாய்= வழி; முகம். முகப்பு என்பதை, வாயில் இல் வாய் என வழங்கு தலையும், பொறிகளை 'வாய்' என்ப துணர்த்து மென் பதறிவிக்க, "ஐவாய் வேட்கை" (வள்ளுவர்)என வழங்குதலையும் நோக்கின், 'வாய்' என்பது முகத்தை யுணர்த்து மென்பது புலப்படும்.

'முகம்' என்பதும் வழியையே யுணர்த்துவதாகும் என்பது, "முகஞ் செய்து கிடக்கும்" (சிலப் பதிகாரம்) என்பது முதலியவற்றா



லறியலாம். ஐந்து வழிகளையுங் கொண்டது (ஐந்து வாயையுங் கொண்டது.) 'வாய்' என வினை முதலை யுணர்த்தும் ஈறு புணர்ந்து கெட நின்ற சொல் லாகும் எனவுங் கூறுவர்.

ஒரு முகப்படாதவனும், விழிப் பின்றியவனும் என்னு மொரு பொருளுந் தோன்ற, "நாலாதும் வாயானும்" "நாரந் துயில்வோனும்" எனவுங் காரியப் பிரமங்களைக் காரணப் பிரமத் திற்கு ஏற்றங் கூறு முகத்தான் பழித்துக் கூறினு ரெனினு மமையக் கூறினு ரென்க. இறைவ னுடைய அடி முடிகளைக் காணல், காரியப் பிரமங்களுக்கு மரிய செயல்க ளாதலின், 'அவற் றைக் காண்போம்' என்று சூ ளுறவு செய்ததை, "மேலான சூளுறவு" என்றனர்.

சூளுறவு=சூளுறுதல்; சூளைப் பொருந்தல். சூள், சபதம்
வெடு மொழி என்பன ஒரு பொருட் சொற்கள். 8

9. பொன்னும் பிறஎவையும் பொள்ளென் றருள்வதுடன்
தன்னையுமே சார்வார் தமக்களிக்க வல்லவனை
அன்னைஎனத் தொண்டர்தமை ஆதரிக்கும் தண்அளிகொள்
மன்னவனைச் சங்கரனும் மாதவனை ஒப்பானைத்
தென்னைபலா கந்தி செழிக்கும் திருக்களரில்
பின்னம்அற நிற்கும் பெரியோனை வீரேசத்
தென்னவனை நல்குருவைத் தென்கழநி யூர்ப்பதியை
வன்னக் கரும்குயிலே வாழ்த்துவம்வா எம்பாவாய்,

(நா-பொ-ரை) அழகிய கரிய குயில் போலும், மொழியை யுடையவளே! எங்கள் பாவையே! தன்னை வந் தடைந்த அடிய வர்கள் வேண்டும் பொன்னையும், பிற பேறுகளையும், தாமத மின்றிக் கொடுப்பதோடு அழிவற்ற தன்னையும் (நீ உடல் முதலியவைக ளெல்லா மல்லை; தத் பத இலக்கியார்த்த மாகிய யானே துவம் பத இலக்கியார்த்த மாகிய நீ யென) அளிக்க வல்லவரும், தாய் போல

உண்டி யுடை மருந்து உறையுள் எல்லாம் வழங்கி, அடியவர்களைக் காப்பாற்றுதற்கு, முன்னிலையான கருணை நிறைந்த தலைவரும், தங்கள் மரபினிற் றலைசிறந்த ஆதி சங்கர பகவற் பாதாள் போலத் தமிழ் நாடு முழுதும் அத்வைத சித்தாந்தந் திகழும்படி நிலை நாட்டிய வரும், தென்னை, பலா, பாக்கு முதலிய † புற்களும், மரங்களும், செழித் தியருந் திருக் கள ரென்னுந் திரு வூரின்கண்ணே வேற் றுமை யின்றி, யாவரும் வந்து வணங்கும்படி யெழுந்தருளி யிருக்கு மேலானவரும், வீர சேகரர் என்னுந் திரு நாமத்துடன் சங்கரர் பத்ம பாதர் முதலிய சான்றோர்கள் போலத் தென் னாட்டிற் றோன்றியவரும், கழனி நக ரென வழங்கும் கோயிலூ ரென்னுந் திரு வூரில் மிளிர்தரும் ஸ்ரீ முத்து ராம லிங்க ஞான தேசிக சுவாமிகளின் ஆதீனத்தில், ஞான தேசிக மூர்த்தியாக எழுந்தருளியவரு மாகிய, நமக் கெளிவந் தருள்தரும் குருபரரை, வாழ்த்தி வழிபடுவதற்கு இப் பொய்கையில் நீ ராடப் போவோம் எழுந்து வருக. எ—று.

வீர சேகர ஞான தேசிகர், "வேண்டுவார் வேண்டுவதே" யீவா ஞகிய இறைவ ஞதலின், "பொன்னும் பிற வேவையும், அருள்வதுடன்" எனவும், அன்பர் துன்ப மிறையளவும் பொருதவ ராகலின், "பொன் னென்று" எனவும், இம்மை யின்ப மறுமை யின்பம் விழைபவர்க் கிவ் வா றீத லன்றியும், இறுதி யில்லாத இன்பத்தை விழைகின்றவர்கட்கு, ததீசி சிபி முதலியவர்களைப் போ லன்றி, யழி வற்ற தன்னையே தரவும் வல்லவ ராதலின், "தன்னையுமே, அளிக்க வல்லவன்" எனவுங் கூறினர். தன்னையும் என்பதில் உம்மை இறந்தது தழுவுதலோடு உயர்வையுங் காட்டியது.

---

† "புறக்காழனவே புல்லென மொழிப", "அகக் காழன வே மர மென மொழிப" (தொல் காப்பியம் 1585 பொருள் அதிகாரம் மரபியல் 85.) புற வயிர முடையன 'புல்' எனப்படும். அக வயிர முடையன 'மரம்' எனப்படும் என்க.



இறுதியி லின்பம் விழைவார் சாதன மற்றவ ராயினும், தன் னருட் பெருக்கால் அவர்க்குச் சாதனங்களை நிரப்பி, தன்னை யளிப்பார் என்பார், "தன்னையே தர வல்ல" (தத்துவ ராயர்) என்பது போல, "தன்னையுமே சார்வார் தமக் களிக்க வல்லவன்" என் றனர். பொள் என்று = விரைவாக.

வீர சேகர ஞான தேசிக மூர்த்தியை அடைந்து பொன் முதலிய பொருள்களைப் பல ரடைந்தன ரென்பதும், இறுதியி லின்ப மெய்தின ரென்பதும், உலகப் பிரசித் தாகும். கோயிலூ ராதீனத்தில் இக் குருபரரே பல மாணவர்களுக்கு அத்வைத சித் தாந்தத்தைப் போதித்து, அவர் வாயிலாக எங்கும் அத்வைத சித்தாந்தம் பரவி நிலைக்கும்படி செய்தன ராதலின், "சங்கரனு மாதவனை யொப்பான்" என்றனர். வீடுபேறே யன்றி, பிற செல் வங்களையும் வருவார்க் களித்தலின், எல்லாரும் வந்து வணங்கத் தக்கவராக இருக்கின்று ரென்பார், "பின்ன மற நிற்கும் பெரி யோன்" என்றனர். கருதுவன பெறுமாறு காண்டற் கெளிய வராக இருத்தலின், 'நற் குருபரன்' என்றனர். கொற்றவா ளிறை வற்கும், திருநெல்லை யம்பிகைக்கும், கோயிலூர் இதுவே யெனக் கண்டா ரெவரும் கூறும்படி, கோயி லமைத்துத் திருக் குளமும், நாற் புறமும் மாட மாளிகைகளும், வேதக் கிடைகளும், பட்டி மண்டபங்களும் அமையச் செய்து, மதுப் பிரிய மகா முனிவர் வேண்டியபடி துற வறச் செல்வர் பல ரென்றும் நின்று நிலவத் திரு மட மமைத்து, சிருங்க கிரியில் ஆதி சங்கர மூர்த்தியி னவதார மெனப்பட்ட ஸ்ரீ சிவாபிநவ நரசிம்ம பாரதி யென்னும் உலக குரு நாதரை யெழுந்தருள்வித்து, கொற்வா ளிறைவர் திரு நெல்லை நாயகியார் கோயிற் கும்பாபிடேகஞ் சிறக்கச் செய்து, ஞான தேசிக ராய் வீற்றிருந்தமையால், "தென் கழநி யூர்ப் பதியை" என்றனர். பின்னர், அன்பர் வேண்ட திருக் களருக் கெழுந்தருளி யங்குப் பாரிசாதேசுரர்க்குத் திருக் கோயில் புதுக்கிக் கும்பாபிடேகஞ்

செய்து, ஐந்து தே ரமைத்து, அவ் விறைவர்க்குத் தேர் விழாச் செய்து, அங்கேயே விதேக முத்தி யடைந்து, திருக்கோயில் கொண் டமைந்தமையால், "திருக் களரில் பின்னமற நிற்கும் பெரியோன்" என்றனர். திருக் களராண்டவ ரென வழங்கப்படுதலின், திருக் களரி லெழுந்தருளியிருப்பதனை, " திருக் களரிற் பின்னமற நிற்கும் பெரியோன் " என முன்னர்க் கூறினர்.

கந்தி = பாக்கு. வன்னம் = அழகு. ஓசையிற் கருங் குயிலும், பொறிக் குயிலும், ஒரு தன்மையன வாயினும், பெரும் பாலும் கருங் குயிலே காணப்படலானும்; கோகிலோபாலம்பநத்தில் கவிகள் கருங் குயிலையே எடுத்துக் கூறுதலானும், "வன்னக் கருங் குயிலே" என அதனையே யுருவகித்தனர்.

"உயிர்த்த பொழுதே நின்குரல் கேளா முன்னேடிற் றீன்றதாய்,
நயத்தின் தாய்குரல் கேட்டலு மோடுங் கத்துரந் ததால்
பயத்த மலர்ப்பூங் காவகத்தில் இருந்து பல்காற் கூவினல்
செயிர்த்து நின்னைக் குயிலோான், வெறுத்தல் செப்பல்
வேண்டுமோ"

(பிரபு லிங்க லீலை) என்பது முதலியவற்றில் கருங் குயிலையே எடுத்துக் கூறுதல் காண்க. 9

10. தண்ணீரும் காவேரி தான்எனவே சான்றோர்கள்
உண்ணீர்மை கோண்டுபுனல் ஒயா அதின்மூழ்கி
மண்ஆர் அமுத வளம்ஆர் திருக்களரில்
தண்ஆர் அளிவீர சேகரன்சீர்த் தாள்பணிந்தார்
உண்நோய்கள் எல்லாம் ஒழியவகை செய்வதற்கிங்
கேண்ணுது வாளா எவனே துயிலுகின்றாய்
பண்ஆர் மடமொழியே பாரில் அவன்அருளாம்
தேண்ணீர் படிவோம் தெளிந்தெழுவாய் எம்பாவாய்.



(கா-பொ-ரை.) இசை யமைந்த இளஞ் சொற்களை யுடையவளே! எங்கள் பாவையே! " தண்ணீரும் காவிரியே " என்று சிறப் பித்துப் புகழப்படுவதற் கேற்ப நன்மை பயப்பது அந் நீரே யென்று அத னகத்தேயுள்ள தன்மையை நோக்கியறிந்து, நீ ரற வறியாக் காவிரி யாகிய அதன்கண் அறிவா லமைந்த பெரியோர்கள் குளித்து, உள்ளத்திலே தோன்றித் துன்புறுத்துகின்ற காம வெகுளி மயக்க மாகிய நோய்க ளனைத்தும் ஒழியும்படி செய்வதற்காக, இவ் வுலகத்தின்கண் மண் அமுதம் எனத் தக்க, சீர் வளம் நெல் வள முதலிய வளங்க ளெல்லாம் நிறைந்த திருக் களரில், எழுந்தருளி யிருக்கின்ற குளிர்ந்த கருணையோடு கூடிய வீர சேகர ஞான தேசிக மூர்த்தியின் விழுமிய திரு வடிகளை (வாழ்த்தி) வணங்கினர். அதனை நீ தெரிந்தும்கூட நெஞ்சத்தி லெண்ணுத லின்றிக் கவலை யற்றுத் தூங்குகின்றாய் என்ன காரணம்! பூ வுலகில் அக் குருபரனர் திரு வடிக் கன்பு செய்து வழிப்பட்டால், அவருடைய அருட் பெருக்கி லகப்பட்டுத் தன் பொருவ, இன்பமா யமர்வோ மாதலின், உறக்க நீங்கப் பெற்று எழுவாய் காவிரி நீரில் நாமும் படிந்து அவரை வழிபடுவோமாக. எ—று.

கவேர முனிவ ருடைய மக ளாதலின், ' காவேரி ' எனப் பட்டது. இந்திரன் பூங்கா வனத்தைச் செழிக்கச் செய்தமையால், ' காவிரி ' எனப்பட்டது. பொன்னி நதி கவேர முனிவன் தவத் தாற் றோன்றியது என்பது, 'மணி மேகலை' முதலியவற்றா லறியப் படுகின்றது. 'கவேரஸ்ய அபத்யம் ஸ்திரீ காவேரீ என வியுத் பத்தி செய்வர்; வட நூ லறிந்தார்.' காவிரி யானது தெய்வ யாறுகள் பலவற்றுள் சிறந்த எழு யாறுகளுள், மிகச் சிறந்த தாகத் தென் னாட்டிற் திகழுவதாய், பல திருப் பதிகளில் நுழைந்து செல் வதும், பொன்னெடு கலந்து வருவதும், சைவப் பெரியார்கள் வைணவப் பெரியார்கள், புலவர்களாற் பாராட்டப்படுவதும், "காவேரி நீர்க்குக் கபம் போம்" (தேரையர்) என்பது முதலிய

வற்றால் உட னேயும், உள்ள நோயும், போக்குவதாகக் கருதப்படுவ தும், பல யாறுக ளாகவும், கால்க ளாகவும், பிரிந்து நெல் வள முதலிய பல் வளமும், நல்குவது மாக இருத்தலின், "தண்ணீருங் காவேரி தா னெனவே, உண் ணீர்மை கொண்டு" மூழ்கின ரென, அதன் நலந் தோன்ற உரைத்தனர் என்க.

நீர், நெல் முதலியன அமுதம் போன்று, உடலி லுயிர்களை எஞ் ஞான்றுங் காணும்படி நிலைக்கச் செய்தலின், 'மன்னு ரமுத வளம்' என்றனர். அது ,'வானின் றுலகம் வழங்கி வருதலால் தானமிழ்த மென்றுணரற் பாற்று" (வள்ளுவர் 2 வான் சிறப்பு 2) என்பதனால் வெளிப்படும். தன் அன்பர்பால் கூற்றுவன் வந்து துன்புறுத்ாது காத்தலின், "சீர்த் தாள்" என்றனர். வீர சேகர ஞான தேசிக மூர்த்தியின் திரு வடி தொழுவார்க்குத் துன்ப மொன்றும் வந்தடையா என்பது கருத்து. அறக் கருணை மறக் கருணை யிரண்டும் முடிவில் இன்பமே பயத்தலின், "தன்னு ரளி" என்றனர். அளி = கருணை.
10

11. கொள்ளைகொள நெஞ்சமதைக் கூடும்அழ காரினும்என்
கிள்ளைஎனச் சொற்கள் கிளக்கினும்என் நல்களர்வாழ்
வள்ளலைநம் வீரேச மாமணியைத் தான்பரவி
ஒள்ளியசீர் அன்புடனே உற்ற அடியவர்க்குப்
பொள்ளல்உடல் மூன்ருய்ப் பொருந்தும்இரு பத்தேழும்
எள்ளுவகை நான்என் றிறுகும் முடிச்சவிழத்
தெள்ளுபுலக் கைகொடுத்த தேவனைவாழ்த்
தாதொழியின்
கொள்ளும் துயில்நீங்கிக் கோதாய்வாழ்த் தெம்பாவாய்.

(நா-பொ-ரை.) எங்கள் பாவையே! மலர் மாலை போன்ற வளே! நல்ல வள மார்ந்த திருக் களா னென்னு மூரி லெழுந்தருளி யிருக்கின்ற ஞான வள்ள லாகிய வீர சேகர ஞான தேசிகர் என்னுந் திருப் பெயரை யுடையவரும், சிறந்த மாணிக்கம் போன்று இயல் பாகிய ஒளி வடிவினரும், மா சில்லாத விழுப்ப மமைந்த அன்போடு துதித்து அடைந்த அடியவர்களுக்கு, "பொத்தை யூன்சுவர்" (மாணிக்க வாசகர் அதிசயப் பத்து 7.) எனப் பெரியோர்களா லிகழ்ந் துரைக்கப்படும், ஒன்பது துவாரங்களை யுடைய தூல வுடல் முதலிய மூன் றுடல்க ளாக அமைந்த இரு பத்தேழு தத்துவங்களை யும், ஒன்ருகச் சேர்த்து 'யா' னென்று அபிமானிக்கும்படியான கடின அகங்காரக் கிரந்தியானது, அவிழ்ந் தொழியும் பொருட்டு, அதனை அவிழ்க்கத் தக்க, திடாபரோக்ஷ ஞான மாகிய கையைக் கொடுத்தருளிய, குருதேவரு மாகிய, அத் திருக் களா ராண்டவரை, நெஞ் சார நினைந்து புகழா திருந்தால், ஆடவ ருடைய நெஞ்சங் களை யெல்லாங் கவரும்படியாக அமையும் உட லழகைப் பொருந்தி னாலும், கிளி போல மொழிகளை மொழிந்தாலும், அவற்ருற் பெரும் பயன் யாது (சிறந்த பய னென்றும் இல்லை யாதலால்) விரும்பி மேற்கொள்ளுகின்ற தூக்கத்தினின்றும் நீங்கி, அக் குரு பரனை மன மார நினைந்து, வாயார வாழ்த்துக. (வாழ்த்துவதற்கு முன்ன ரிப் பொய்கையில் நீ ராடுவதற்கு எழுந்து வருவாயாக) எ—று.



எண்ணியபடி அள்ளிக் கொள்ளுதலை, கொள்ளை கொள்ளுதல் என்பது மரபு. அள்ளிக் கொள்ளுத லென்பது கைகளுக் குரிய தாயினும், மன மொழி மெய்க ளெல்லாவற்றிற்கு முரிய செய லாகக் கருதப்படுகின்றது. அது "கொள்ளை கொள வீடுதவி", "அள்ளிக் கொளும் பேரழகன்" (சிவப் பிரகாச சுவாமிகள்) என் பன முதலியவற்ரு லறியலாம். மிகுதியாக கொள்ளுதல் என்ப தாம். மிக்க அழகோடு பொருந்தினும் என்ப தாம். 'உருவின் மிக்கதோ ருடம்பு பெறுதலு மரிதே' (சீவக சிந்தா மணி 276, 13 முக்தி இலம்பகம் 8 பெறுதற் கருமை 154) என்ப வாகலின், அங்ஙனம் கூறினர். கிளிகள், "கிளந்தவா கிளத்தல் கிளியின

தியல்பே'' என்றபடி, சொல்லிக் கொடுத்தபடியே சொல்ல வல்லவை யன்றிச், சொற் பொரு ளுணர்ந்து நடக்க வல்லவை யல்ல வாதலால், தாய்மார்க ளாகிய தாங்கள் கூறியபடி குருபாரை நினைத்தல் வேண்டும், வணங்குதல் வேண்டும், வாழ்த்துதல் வேண் டும் எனச் சொல்லிச், சொல்லியபடி சிந்தித்தலும், வந்தித்தலும், வாழ்த்தலு, மின்றி இளஞ் சிறுமியர் தூங்குதலின், அச் சிறுமியர் அவ் வாறு கூறுஞ் சொற்களுக்குக் கிளிகளின் மொழி ஒப்புமை யாக்கப்பட்டன. அன்றி, யினிமைக்காக ஒப்பிக்கப்பட்டன எனினு மாம். மற்றையவற்றை யீவா ரெல்லாம் வள்ளல்க ளாயினும், அவர் துன்பத்திற் கேதுவானவற்றை யீவா ரன்றி, இக் குருபார் போல, இன்பத்திற் கேதுவான தத்துவ ஞானத்தை யீவா ரல்ல ராதலால், "வள்ளல்'' என்பதற்கு 'ஞான வள்ளல்' என வுரை வுரைக்கப்பட்டது.

முத்து மாமணி (திரு வாசகம் அதிசயப் பத்து 7) என்பது போல், 'மாமணி' என்றனர். உயர்ந்தனவும் ஒளி யுடையனவு மாக இலகுதலினாலும், இயல் பறிந் தணிவார்க்கு நற் பேறுகளை யளித்த லாலும், மணிகள் உயர்ந்தன. எல்லா வற்றினு முயர்ந்தவ னாகவும், ஒளிக ளெல்லாவற்றிற்கு மொளி கொடுக்கும் அறி வொளியாக வுள்ளவனும், அன்பர் நினைந்த வடிவோடு விரைந் தணுகு மவ னியல் பறிந்து, எவ் வாறு வழிபடுகின்றனரோ, அவ் வாறு வழிபடு கின்றவர்களுக்குப் பய னளிக்க வல்லவனு மாகிய, இறைவனுக்குச் சான்றோர்கள் ஒப்பாக்கலா மெனக் கருதியபடி, இவ் வாசிரியரும் 'மாமணியை' என, ஒப்பாக மணியைக் கொண்டு உருவகித்தனர்.

"முத்து மாமணி மாணிக்க வயிரத்த பவளத்தின் முழுச்சோதி'' (திரு வாசகம் அதிசயப் பத்து 7.) ''மன்னே மாமணியே'' (சுந்தர மூர்த்திச் சுவாமிகள் மழ பாடி) எனச் சான்றோர்கள் எல்லாவற் றினு மிக்க இறைவனுக்கு உவமையாகக் கொள்ள, மணிகளினுஞ்



சிறந்த பொருள் வேறில்லையாகையால், அவற்றையே உவமான மாகக் கொண்டது போல, இங்கும் 'மணி' உவமானமாகக் கொள் ளப்பட்டதென்க. மனைவி மக்களிடத்து வைக்கு மன்பு, பற்றை யளித்துத் துன்பந் தருவ தாதலால், தத்துவ ஞான வாயி லாக இன்பந் தருவதாக இருக்கும் குருபார்பால் வைக்கும் அன்பு, ஒள்ளிய சீரன்பு என அதனி னீக்கி விசேடிக்கப்பட்டது. மணிகளி னியல்பை சிலப் பதிகாரம் திரு விளையாடற் புராணம் கல் லாட முதலியவற்றில் நன் கறிய லாம். தத்துவம் இரு பத்தேழாவன-தூல சரீர தத்துவம் ஆறு, சூட்சும சரீர தத்துவம் இருபது, காரண சரீர மாகிய அஞ்ஞான தத்துவ மொன்று எனக் கூறப்படுவன. 'மூன்று' என்பது ஆகு பெய ராக உடல்களை யுணர்த்துகின்றது. ஆகு பெய ரெல்லாம் தொன்று தொட்டு வருவன வாக இருத்தல் வேண்டு மாதலால், 'மூன்று' என்பது ஆகு பெய ராகத் தொன்று தொட்டு உடல்களை யுணர்த்துவ தாக திகழ்வதா இல்லையே எனின், இயற் பெயர்கள் யாதானு மோ ரியைபுடைய பிற பொருள்களை, முன்னும் பின்னும் வருஞ் சொற்களைக் கொண் டுணரும்படி செய்து நிற்குமானால், அப்போ தவை யாகு பெயர்க ளெனப்படும். இயை பின்றியவற்றை அவை யுணர்த்தா. இயை புடையவற்றை யுணர்த்தலே பழ முறை யாகும் என்பவற்றை யுணர்த்த, "அதற் கியை பிறிதைத், தொன் முறை யுரைப்பன வாகு பெயரே'' (நன் னூல் 290 பெய ரியல் 33) என்றன ரன்றித், தொன்று தொட்டு வரல் வேண்டும் என்னும் யாப்புற வுண்டு எனக் கூறினா ரில்லை. அது, "தொன்றுதொ டுரைப்பன'' என்னாது, "தொன் முறை யுரைப் பன'' என்றதால் விளங்குதல் காண்க. நன் னூலார் ஆகு பெய ராயின், தொன்று தொட்டு வருவ தாக இருத்தல் வேண்டு மெனக் கூறினா ரென்று மயங்கினர் கொள்கை கொண்டு, வினவுதல் பொருந்தா தாகலின், இங்கு, 'மூன்று' என்பது மூ வகை யுடல்களை யுணர்த்தி ஆகு பெய ராக நின்ற தாகு மென்க.

ஆகு பெய ராயின், தொன்று தொடு வரல் வேண்டு மென நன் னூலார் கூறினர் என மயங்கினார் கொள்கையைப் பின்பற்றி, "கைவல்ய நவ நீதம்" என்னு நூற்குப் பின் காலத் துரை யுரைக்கப் புகுந்தவர்களிற் சிலர், முன் னெழுதிய வுரைகளிற் சிறந்த, பெரிய சுவாமிகள் என வழங்கும் ஸ்ரீ பொன் னம்பல ஞான தேசிக மூர்த்திக ளெழுதிய வுரையில், (பொன்னில மாத ராசை என்னும் பா வுரையில்) பின் வரும், "காணிக் குரிய மகனென" (பாயிரம் 1 கைவல்லிய நவ நீதம்) என்பதையும், "காணி யாளப் பிறந்த மகன்" என வழங்கும் உலக வழக்கையு நோக்கி, நூ வாசிரியர் மூ வேடனை யன்றி, வேறு மொழிந்தனர் என்னுங் குற்றமு மகல, 'நிலம்' என்பது நிலத்துக் குரிய மைந்தரை யாகு பெய ராக வுணர்த்திற்று என்பது பட எழுதிய வுரையை யிகழ்ந்து, 'நிலம்' என்பது ஆகு பெய ராகத் தொன்று தொட்டு வாராமையின், அது மைந்தரை யுணர்த்தும் ஆகு பெய ரெனக் கூறுதல் பொருந்தாது என்றனர். அதுவே யன்றி, 'நிலம்' என்பது, நிலத்திற் குரிய மைந்தரை யுணர்த்துகின்ற தென்றால், 'பொன்' என்பது என் பொன்னுக் குரிய மைந்தரை யுணர்த்திற் றென்று கொள்ள லாகாது எனவுங் கூறுவர். அவர் பொன் முதலிய பொருள்கள் மக்கட்கே யன்றி, பிறர்க்குங் கொடுக்கத் தக்கன வாக இருத்தலா லன்றோ, மக்கட்கே யுரிய நிலத்தைப் பிறர்க்குக் கொடுக்க விரும்பின், ஓலை முதலிய வற்றில் கைச் சாத்திட்டு, அரசாங்கத்தில் பதிவு செய்து கொடுக் கின்றனர். அவ் வாறு கொடுக்கப்படும் நிலம் உரிய மக்களை யுணர்த்தற் கியை புடையதாக இருத்தலின், ஆகு பெய ராதற் கேற்புடைய தாகும் என வுட்கொண்டு மெழுதியதை யறிந்திலர். நிலத்த இயை புடையன வல்லன வாதலால் 'பொன் முதலியன ஆகு பெய ராதற் கேற்புடையன வாகா வென்பதையு மறிந்திலர். தொன் முறை முந்தையோர் உரைத்தபடி. இனித் தொல்காப்பி யரும், இயற் பெயர்கள் இயை புடைய பிற பொருள்களை யுணர்த்து மாயின், ஆகு பெய ராகும் என்னுங் கருத்துப்பட பயின்று வருவன



சிலவற்றை யெடுத்துக் காட்டி, இவ் வாறு வருவன ஆகு பெயர்க் கிளவி யாகும் என்பாராய், "முதலிற் கூறும் சினையறி கிளவியும் ...... அனைய மரபினவே ஆகு பெயர்க் கிளவி" என்னு நூற் பாவை (சூத்திரத்தை 597 தொல்காப்பியம் சொல் லதிகாரம்) உரைத்தனர். இந் நூற் பாவின் இறுதி யடிக் குரை கூறுபவராக உரை யாசிரியர், 'ஆகு பெய ரென்ற பொருண்மை யென்னை யெனின்', "ஒன்றன் பெயர் ஒன்றற்காய் நிற்றல் என்ற வாறு" எனப் பொழிப் பாக வுரைத்துத் தொல்காப்பியர் கருத்தைப் புலப் படுத்தினர். தொல்காப்பியரும் மேற் கூறியபடி கூறியதோ டமையாது, "கிளந்த வல்ல வேறு பிற தோன்றினும் கிளந்தவற்றியலா னுணர்ந்தன கொளலே" (601-35) எனவு முரைத்தனர். இந் நூற் பா வுரையில், "இயைபு பற்றி யொன்றன் பெயர் ஒன்றற் காங்கால் அவ் வியைபு ஓ ரிலக்கணத்த தன்றி வேறு பட்ட இலக் கணத்தை யுடைத்து, [illegible] விலக்கண மெல்லாங் கடைப் பிடித் துணர்க, என்பார், 'வேறு பிற தோன்றினும்' என்றார்" எனச் சேனாவரையர் எழுதினர். இவை யெல்லா நோக்கின், ஆகு பெய ராவ தித்தன்மையது என்பது நன்கு புலப்படும். இனி, 'கிளந்த வல்ல' என்னு நூற் பாவில், 'வேறு பிற காண்பினும்' என்னாது, 'வேறு பிற தோன்றினும்' என வுரைத் திருத்தலையும், அதற் குரை யிட்ட வுரை யாசிரியர், "மேற் சொல்லப்பட்டன வன்றி வரும் ஆகு பெயரு முள" என எழுதியிருத்தலை யுணரின், ஆகு பெயர்கள் இயற் பெய ராக வன்றி, புதியன வாகவும் தோன்றலா மெனக் கொண்டு, மூன் றென்பது மூன் றுடல்களையும் உணர்த்திற்று எனக் கோடல் சாலு மெனவுந் தெளிக.

நல்லியல் பனைத்தும் வாய்ந்த பெண்ணை, "திருவளர் தாமரை சீர்வளர் காவிக ளீசர்தில்லைக், குருவளர் பூங்குமிழ் கோண் டோங்கு தெய்வ, மருவளர் மாலையினொல்கி" எனத் திருக் கோவை யாரில் (1-பா) மாலை போன்றவள் எனப் புனைந்திருத்தலைப்

போலக் கூறுவார், சுருக்கி யுருவக மாக, 'கோதாய்' என்றனர். இப் பா, 'நுண்மா ணுழைபுலம்' (41 கல்லாமை 7) "கற்றதனு லாய பயனேன் கோல்" (1-2) "ஓதி யுணர்ந்தும் பிறர்க் குரைத் தும்" (84-4) என்னுந் திருக் குறட் பாக்களின் சார மாக நிலவு கின்ற தென்ன லாம்.

**11.**

12. மாகாய மூன்றுமே மாண்டொழியும் என்றுசொலி
ஆகாய ரூபம்என ஆக்கியவீ ரேசன்சீர்
வாகாய நாம்பாடி வாழ்த்துதொறும் வாழ்த்துதொறும்
போகாய கண்களின்நீர் பொள்என்று போய்உகவே
தீகாயும் நல்மெழுகு போலமநம் சேர்ந்துருகும்
ஓகோ உரைநாவும் உள்ளும் உடம்பும்எலாம்
பாகாம் எனஇனிகதும் பன்னும்அவன் சீர்பாடச்
சேகோயும் நீர்த்தடத்தில் சென்றுடாய் எம்பாவாய்.

(நா-பொ-ரை.) எங்கள் பாவையே! அஞ்ஞானமும் அஞ்ஞான தற் காரிய மாகிய பரு வுடல் நுண் ணுடல்களும் (தூல சூக்கும சரீரம்) ஆகிய மூன் றுடம்புகளும், அழிந்து பின் பெயருந் தோற் றுமல் போய் விடும் என்று அவை (தூல சூக்கும காரண வுடல்) களி னிலைமையை யெடுத்துச் சொல்லி, அவைக ளழிவன வாக இருக்கின்றன, நீ ஆகாயம் போல வியாபக மாய் நித்திய சொரூப மாக இருக்கின்றனை யாதலால், அவற்றின் வேறுவை யெனச் சச் சிதாநந்த வியாபக மாகிய நம் நிச சொரூப இலக்கணங்களை யுணர்த்தி யருளிய வீர சேகர ஞாந தேசிக மூர்த்தியின் சிறப்பினை யழகாகப் பாடி, நாம் அவர் செய்த (செய்யாமற் செய்த) வுதவிக்கு அவரைப் பல் லாண்டு பல் லாண்டாக வாழ்க வென்று அன்பு மேலீட்டால், நீண்ட அழகிய கண்களினின்றும் நீர் வெளிப்பட்டு இடை விடா தொழுக மன முழுதும் உருகும்படி (நெகிழும்படி) வாழ்த்தும் போ தெல்லாம் (ஆச்சரியம்.) சொல்லுகின்ற நாவும், மனமும், உடம்பு மாகிய முக் கரணங்களும் மகிழ் வடையும்படி



வெல்லப் பாகு போல, இனித்து இன்பத்தை யூட்டும். ஆகையால், இப் பெருமா னுடைய சிறப்பினை யெடுத் துரைப்பதற்கு முதலில் குற்ற மற்ற இத் தடாக நீரிலே போய்க் குளிப்போம் வருவாய். எ-று.

பார மார்த்திக மாக இல்லாதிருத்தலின், அவித்தை, 'மா' எனப்பட்டது. மா = இன்மை. 'மாயா' என்பதில், 'யா' என்பது, எது என்னும் பொருளை யுணர்த்த, 'மா' என்பது இல்லை யென் னும் பொருளை யுணர்த்த, எது இல்லாததோ, அது மாயா (மாயை) என வழங்கப்படுதல் காண்க. 'மாகாயம்' என்பது அவித்தை யாகிய சரீரம் (காரண சரீரம்) என முதலில் உணர்த்திப் பின் இரட்டுற மொழிதலால், மாவின் (அஞ்ஞாநத்தின்) காரிய மாகிய தூல சூக்கும சரீரங்களை யுணர்த்தலால், மூன்றும் என இனைத் தென வறிந்த முதலிற்குக் கொடுக்கும் முற் றும்மை கொடுக்கப் பட்டது. இனி, மாகாயம் என்பதனை யும்மைத் தொகையாகக் கொண்டு, மாவும், மற்றைய காயங்களும், எனப் பொருள் கூறினும் பொருந்தும். 'மாயை' என்பது, இல்லாத தென்னும் பொருளைத் தருதலா லன்றே, அருண கிரி நாதர், "இல்லையெனு மாயையி லிட்டனை நீ" (கந்தர் அநு பூதி 29) என்றனர். தத்துவ ஞாநத் தால் அஞ்ஞாநமும், அஞ்ஞாந தத் காரியங்களுங் கெடும், கெடு மெனினும், அஞ்ஞாநம் போலாது தூல சூக்கும சரீரங்கள் தப்த படம் போல, நுகர்விற் குரிய பழ வினை யிருக்கு மட்டும், (பிராரத்த வினை யிருக்கு மட்டும்) தோன்றும். தோன்றினும், பழ வினையின் முடிவில்; தூல சரீரம் பிண மாக விழுந் தழியும். அப் பொழுது, பழ வினையின் பயன்களை நுகர்தற் குரிய சூக்கும சரீ மானது, விசுவ, தைஜஸ பிராஞ்ஞர்களுக்குச் சாட்சியாக நிற்றலால், நான் காம் பொரு ளெனப்படும் பிரத்திய கபின்ன பிரமத்தில் காய்ச்சிய இரும்பிற் பட்ட நீர் போல, ஒடுங்கி யழியும் ஆதலின், 'மாளும்' என் றளவிற் கூறுது, 'மாண் டொழியும்'

என்று கூறினர். இனி, 'ஒழியும்' என்பதில், 'ஒழி' என்பது துணிவினை யுணர்த்தும் இறுதி நிலை யெனக் கொண்டு, மூன் றுடல்களும் நிச்சய மாக அழியும் எனப் பொருள் கூறினு மமையும். தத்துவ ஞாநத்தா லஞ்ஞாந முதலியன அழியு மென்பதை,

> "அரியமெய்ஞ் ஞாநத் தீயால் அவித்தையாம் உடல்நீ றதும்
> பெரியதூ லமுங்கா லத்தாற் பிணமாகி விழமந் நேரம்
> உரியசூக் குமச ரீரம் உலையிரும் புண்ட நீர்போல்
> தூரியமாய் விபுவாய் நின்ற சொருபத்தில் இறந்து போமே"

என வரும் (1-98) கைவல்லிய நவ நீதப் பா முதலியவற்று லறியலா மென்க.

"तस्माद्वा एदस्मादात्मनः आकाशः सम्भूतः" எனச் சுருதி யிருத்தலால், காரிய மாகிய ஆகாயம், சாபேட்சிக வியாக முடைய தாயினும், வியாபக முடைமை யாகிய பொதுமையால் நிரபேட்சிக வியாபக முடைய ஆன்மாவிற் குபமான மாகக் கூறப்பட்ட தென்க. ஆகாய ரூப மென = ஆகாய சொரூபம் போல. ஆகாயம் விபு சொரூப முடையது. நையாயிகர் ஆகாயம் விபு வாதலின் நித்திய மென்பர். அத்வைதக் கொள்கையினர், ஆகாயம் சாபேட்சிக வியாபக முடைய தெனக் கொள்ளுதலால், அதனை நித்திய மெனக் கொள்ளா ராதலின், அது விபுப் பொரு ளென்ற அந்த அளவிலேயே உபமான மாகக் கொள்ளப்பட்ட தென்க. 'ஆக்கிய' என்பதில் 'ஆக்கம்', முன், நீர் நிலமும், சேற்று நிலமும், மிதித்துச் சென்றான். வன் னில மிதிக்கும் பொழுது, 'நிலம் வலிதாயிற்று' என்றால், அங்கு, 'ஆக்கம்', "மெலியதாயது வலிதாய் வேறுபட்டது" என வேறுபாடு குறித்து நிற்பது போல, வேறுபாடு குறித்து வந்த மையின், 'ஆக்கிய' என்பதற்கு, அநித்திய மாகிய மூன் றுடல்களி னின்றும் நித்திய மாகிய நீ வே றென்று நா முணரும்படி நம் நிச சொருப இலக்கணங்களை யுணர்த்தி யருளிய, என்பது பட விரித்



துரை யுரைக்கப்பட்ட தென்க; இலக்கணத்தின் பயன் பிறவற்றி னின்றும் வேறுபடுத் துணர்த்தலேயா மாகலின்.

வாகு = அழகு. இது "கடி சொல் லில்லை காலத்துப் படினே" (தொல் காப்பியம் 934 சொல் அதிகாரம் 56) என்றபடி கொள்ளத் தக்க தாகப் புதி தாகத் தோன்றிய சொல் லாகும்; சான்றோர் செய்யுட்களில் வழங்கப் படாமையின் என்க. போகு = நீண்ட. இது 'போ' என்னும் முத னிலை, 'கு' என்னும் சாரியை யடுத்துப் 'போகு' என ஆகிக், 'கன்' என்பதை முடிக்குஞ் சொல் லாகக் கொண்டு, வினைத் தொகை யாக நின்றது. 'ஆய' என்பது இடை நிலை. (இடைப் பிற வரல்.) அது 'ஆய்' என்பத னடியாகப் பிறந்த குறிப்புப் பெய ரெச்ச வினை. ஆய் = அழகு. அது "ஆய் மயில் கோல்லோ" (திருக் குறள்) என்பது முதலியவற்றாற் புலப்படும். 'ஒகோ' என்பது இறும்பூதினை விளக்கும் இடைச் சொல். வட மொழியில், अहो என வருவது போல வந்த தாகும். இதுவு மோர் புதுச் சொல்லே. நினைத் தொறும், காண் டொறும், பேசுந் தொறும், எப் போதும், 'அனைத் தெலும் புண்ணெக ஆநந் தத்தேன் சொரிதலின்', "உரை நாவு முள்ளு முடம்பு மெல்லாம் பாகாம் என இனிக்தும்" என்றனர். சேகு = குற்றம். மா சகலவே குளித்தல் வேண்டப்படுதலின். மா சுடைய நீரிற் குளித்த லாகா தென்பார். 'சேகோயு நீர்த் தடத்தில்" என்றனர். நிலத் தியல் பாலும், சேரும் பொருள்களாலும், நீர் மாசுபடும். இந் நீ ரத் தகைய தன் றென்ப தாம். 'ஒபும்' என்பது இயல்பாக இன் றென அத னியல்பையே விளக்கிற்று என்க. இனிக் குளிப்பாரின் யுற மாசும், அக மாசும், ஒழிதற்குக் காரணமான, தெய்வ வடிவ தீர்த்த மென்பதற்கு அங்ஙனங் கூறினு ரென்றல் நன் றும். 12

13. பெண்உருவை நெஞ்சில் பிறங்கவிடான் வீரகுரு
நண்ணும் உமைஉருவை நன்குமநம் நீங்கவிடான்

கண்ணும் கருத்துமாக் கொண்டவனைப் பாடிஅன்பர்
உண்ணெக்கு நிற்பவிழி யோடுநீர் தாரைகொளக்
கண்ணைத் துயின்றவமே காலத்தைப் போக்குகின்ருய்
கண்ணிற் கினியான் கழலின் புகழ்பாடின்
எண்ணில் பிறவிவரா வந்தாலும் எய்ப்படையோம்
அண்ணல் அவன்புகழை ஆதரித்தோ தெம்பாவாய்.

(நா-பொ-ரை) எங்கள் பாவையே! பெண்களின் வடிவத்தை உள்ளத்திலே விளங்கும்படி யெண்ணுதவரும், சிவ பெருமான் பக்கத்திலே தங்கும் உமா தேவியா ராகிய உலக மாதாவின் திரு வடிவை என்று மனத்தி னின்றும் நீங்காத வண்ணம் எண்ணுப வரும், ஆகிய வீர சேகர ஞாந தேசிக மூர்த்தியைக், கண்ணுற் காணத் தக்க பொருளும், உள்ளத்தா லுள்ளத் தக்க பொருளும், இப் பெருமானே யன்றி, வே றில்லை யெனக் கொண்டு, வாயாரப் புகழ்ந்து, அன்பர்கள் விழிகளினின்றும் நீரானது தாரையாக ஒழுகும்படி மன நெகிழ்ந்து தன் வய மிழந்து, அக் குருபார் வயப் பட்டு, ஆரா வின்பந் துய்த்து நிற்ப, நீ கண்களைத் திறவாமல் வாளா தூங்கிக் காலத்தைக் கழிக்கின்றனை இது தக்க செய லாகாது. எண்ணுதற் கெளி தாக வடிவுட னெழுந்தருளிய, அக் குருபாரது திரு வடியின் புகழைப் பாடினுல், அளவிடற் கரிய பிறவிகள் வர மாட்டா. வந்தாலும் துன்பங்களை நுகர மாட்டோம். ஆகையால், தலை சிறந்த அக் குருபாரின் திரு வடிப் புகழை விரும்பி ஓது வோம். முதலில் இந் நீரிற் குளிப்போம் வருதி. எ—று.

பெட்ப (விரும்ப) நிலவு மகளிரின் வடிவத்தை, (காமத்தை யுண்டாக்கு மங்கையர் வடிவத்தை); நெஞ்சம் பற்றும்படி எண்ணு தவர் என்பார், "பெண் ணுருவை நெஞ்சிற் பிறங்கவிடான்" என வும், சிவ சத்தியின் வடிவம் பெண் வடிவ மாயினும், ஞாந சநக மாக இருத்தலால், "நண்ணு மமை யுருவை நன்று மன நீங்க விடான்" எனவும் கூறினர் என்க; திருக் கூத்தப் பெருமானையே



தங்கள் மரபிற் கேற்ப உபாசனை மூர்த்தி யாகக் கொண்டமையால். (தங்கள் மரபு=கோயிலூர் மரபு.) மகளிர், விரும்பத் தக்க (காமிக் கத் தக்க) நிலையில், 'பெண்' எனப்படுவர். மற்றைய நிலையில், மகவு தாய் எனப்படுவர். 'நண்ணு முமை யுருவை நன்கு மன நீங்க விடான்' என்பதனுல், மக்கள் சிவ பூசை செய்து உய்வதற் காக இறைவன் திரு வை யாற்றில், "ஐயா றதனிற் சைவ னுகியும்" (மாணிக்க வாசகர் 2வது சீர்த்தித் திரு வகவல் 85) எனச் சான் ரேர் எடுத்துரைக்கும்படி, சிவ லிங்க பூசை செய்தது போல, ஞால முய்வதற் காக, "மறை சோலும் போருள், மனித வேட" மாக வந்து வீர சேகர ஞாந தேசிக மூர்த்தி யென உரைக்கும்படி நிலவியதால், கொண்ட வேடத்திற்கு ஒப்பத் திருக் கூத்தப் பிரானை யென்று முள்ளத்து ளுள்ளுவா ராதலின், அவன் பக்கலிலே நிற்கும் சிவ காம சுந்தரியைப் பெண் ணுருவங் கொண்டமையால், பெண் ணென்று நினையா திரார், ஞாந சநக மாதலால், என்று நினைப்பா ரென, மேல் பொது வாக வந்த விலக்கு, உமை யம்மையார் பக்க லில்லை யெனத் குறித்தனரா மென்க. புகழை எடுத்துரைத்தால், அச் செயல், பாம்பரைச் சாதன மாக நின்று, தத்துவ ஞாநத்தைத் தோற்றுவித்துப், பிறவிக் கேது வாகிய அஞ்ஞாநத்தை யழியும்படி செய்தலின், "புகழ்பாடின் எண்ணில் பிறவி வரா" எனவும், ஞாநத் தடையால் பிறவி வந்தாலும், முன் புகழ்ந்த பயிற்சியால் எடுக்கும் பிறவிக்கண்ணும் அக் குருபார் வயப்பட்டுப் புகழ்த னேர்த லால், மகிழ்வொடு நிற்க இயலு மாதலின், "வந்தாலு மேய்ப் படையோம்" எனவும் கூறினர். களியர் (கள் ளுண்டு களிப் போர்) வேறு துன்பங்க ணேரினும், அத் துன்ப மொன்றனையு மறியாது அக் களிப்போடு நிற்றல் போல, அடியவர் குரு பாரைப் புகழுங் களிப்பால், பிற துன்ப நேரினு மத் துன்ப மொன்றனையு முணராது நிற்ப ரென்ப தாம். இப் பிறவியில் குரு பாரைப் புகழுதலினுல், சித்த சுத்தி முதலியன சித்திக்க, ஞாந முண்டாகா திருப்பினும், புகழும் பயிற்சி, வரும் பிறவிகளிலும் புகழும்படி செய்து, ஞாநத்தை

முடிவில் அளிக்க வல்ல தாகலின், புகழுதலில் சிரத்தை கொள்க என்பார், 'ஆதரித்து' என்றனர்.

உறுப்புக்களில் தாழ்ந்த தெனக் கருதப்படும் திரு வடியை வழிபடுதலால் மகிழ்ந்து, வழிபட்டார்க்கு இறைவன் வேண்டுவன வற்றைத் தருதலோடு, பிறவிப் பிணியை யறுப்பதற் குரிய ஞானச் சுட ரொளி வாளேயும் ஈவான். அவ் வாறு ஈதல், திரு வடி வாயி லாகத் தோன்றுதல் பற்றி, "கழலின் புகழ் பாடின் ...... எய்ப் படையோம் என்றனர்.

இனி, மன்மதனை யெரித்ததும், திரி புரத்தை யழித்ததும், பிரமன் தலையைக் கிள்ளி யெறிந்ததும் ஆகிய செயல்கள், தன்னேடு பகைமை கொண்டமையாலும், தன்னின் மே லென நின்றமை யாலும், நிகழ்த்திய உறுப்புக்களுக் குயர் வில்லை. அடியவர் பொ ருட்டு எமனை யுதைத்து, அவ் வடியவர்க் கின்பூட்டிய அடியே எல்லாவற்றினுஞ் சிறந்த தாகலின், உயர் வுடையதாகு மெனக் கருதி, இறைவ னதற்கு வீரக் கழலைப் பரி சாக வழங்கினர் எனச் சான்றோர் கருதுதலின், † நமக்கும் கூற்றங் குதித் துய்யு மாறு அவ் வடி செய்யு மாதலின், அதுவே சிறந்த வுறுப் பெனக் கொண்டு, "கழலின் புகழ் பாடின்" என்றார் எனினு மாம். 13

14. வண்ணக் கிளிமொழியார் மாமைஅழ கெப்போதும்
உண்ணெக் குருகியிட ஒவியத்தும் பாராதான்
எண்ணின் நமைஅவன்தான் ஏன்றுகொளான் என்றெண்
கண்ணைப் பிசைந்து கவலைமேல் கொள்ளாதே [ணிக்
அண்ணல் பரசிவன்போல் அன்பர்க் கெளியவன்காண்
தண்ணளியால் வந்ததிருத் தாய்மார்க்கும் மெய்ஞ்ஞானக்
கண்ணளித்து வீடருளும் கண்ணியம்கொள் வீரேசப்
புண்ணியனை நீஅணுகிப் போற்றிடுவாய் எம்பாவாய்.

† புரத்தை வென்றந கைக்குமென் போதினேன்
சிரத்தை வென்றசெங் கைக்குஞ்சி லைமதன்
எரித்த கண்ணிற்கும் இன்றெனக் கூற்றடூஉத்
தரித்த வீரக் கழலொடு தாளுற. (சிவப் பிரகாச சுவாமிகள்)



(நா-பொ-ரை) எங்கள் பாவையே! வீர சேகர ஞான தேசிக மூர்த்தியானவர், "நாரியை யில்லா தார்க்குப் போகத்தி னலமெங் குண்டாம்" (வாசிட்டம் 1 வை. 84) என எண்ணி அழகிய கிளி போன்ற மொழியை மொழிகின்ற பெண்களின் மேனி யழகினை எப்போதும் மனம் கட்டுவிட் டுருகும்படி சித்திரத்திலுங் கூடப் பாராதவர். ஆதலால், அவர் பெண்களை வெறுக்கு மிந் நிலையை நோக்கினல், பெண் ணுருவங் கொண்ட நம்மை எப்படி ஏற்று அருள் புரிவார், அருள் புரிய மாட்டார் என்று நினைத்து கண்ணைக் கசக்கிக் கொண்டு கவலைப்படாதே. பெருமையிற் சிறந்த அவர் பரம சிவ னெனக் கருதப்படும் நிலையில், எவ் வாறு அன்பருக் கெல்லாம் எளி தாக நின் றருள் புரிவாரோ, அவ் வாறு அன் புடைய வருக் கெல்லாம் எளியவ ராக நின் றருள் செய்யத் தக்கவ ராத லால், அருள் பெறத் தந்தை யாகப் பாவித்துக் குழந்தைக ளாக வரும் நல்ல பெண்களுக்கு அவர் இம்மைக்கு வேண்டிய பயன்களைத் தருதலோடு, தத்துவ ஞான விழியை யளித்து முத்தியினையும், கொடுக்கும்படியான மேன்மை பொருந்தியவரும், மக்கள் செய்த புண்ணியப் பய னாக எழுந்தருளியவரு மாகிய அக் குரு பரனை, நாண மின்றி யடுத்துத் துதிப்பதற்கு இப் பொய்கை நீரிற் குளிப் போம் வருதி. எ—று.

பெண்கள் விடய மாக உண்டாகும் கேலி கீர்த்தநம் முதலிய எட்டு வகைச் செய்கையும், மனத்தொடு விட்ட மாணவ நோன்பினை யிறுகப் பிடித்தவ ராகையால், பெண்களின் அழகை இளம் பருவத் தன்றி பயிற்சி வயத்தால் முதிர் பருவத்தும் நோக்கார் என்பார், 'எப் போதும்' எனவும், பொது வாக ஒரோ வழி நோக்கினும்

சிறப்பாக ஒரு போதும் நோக்கார் என்பார், 'உன் னைக்கு யுருகி யிட' எனவும், சிறப் பாக ஓவியத்திற் றீட்டிய வுருவினை நோக்கினும், நெஞ்சத் திட்பத்தினை நெகிழும்படி செய்யு மாதலின், 'ஓவியத்தும்' எனவும், பாராமைக்கு அடைக ளாக மொழிந்தனர். காதல் காரண மாகப் பார்ப்ப தில்லை. யல்லாமல், அருள் செய்யு நிலையில், ஆண் எனவும், பெண் ணெனவும், வேற்றுமை கொண்டு, பெண் ணுயின் அருளாது விடான் என்பார், 'எண்ணி னமை...... கொள்ளாதே'' என்றனர். இது, வயது வந்த பெண்கள் பேசுவதைக் கேட்ட சிறுமியரும், அப்படியே பேசுவது வழக்க மாதலின், அவ் வாறு கருதிச் சொல்லுவரோ என்று உட்கொண்டு, தாய்மார் சொல்லு முறையிற் சொல்லிய தாகும். இவர் பரம சிவ னவதார மாகலின், பரம சிவ னருள்வது போலவே, இவரு மருள்வா ரென்பார்; ''அண்ணல் பரசிவன் போல் ......... எளியவன்காண்'' என்றனர். தண்ணளியைப் பெறுவதற்காகத் தந்தை யாக வெண்ணி வருதலின், ''தாய்மார்'' என்றனர். ஒரு பெண், தன் நாயகன் பரத்தையர்பால் சென்ற காலை அவனை நினைத் தூடல் மிக்கவளாய் வருந்தாமல், உலகத்தைக் காத்தற் பொருட்டு, அரசன் வாழ்க. விருந் தாற்றுதற் பொருட்டு நெல் மிகவும் விளைக. இரவலற் கீதற் பொருட்டு பொன் மிகவுஞ் செழித் தோங்குக. என இல்லறம் நடத்துதலிலேயே நோக் குடையவ ளாக இருந்தமையால், அவள் தோழி அவளைத், 'தாய்' எனக் கருதுகின்றனள் என ஐங்குறு நூற்றுள் வரும்,

''வாழியாதன் வாழியவினி
நெற் பல பொலிக பொன் பெரிது சிறக்க
என வேட்டோளே யாயே''

(ஓரம் போக்கியார் 511 வேட்கை பத்து)

என வரும் பா முதலிய பாக்களையும், அவ் வுரையையும், இங்கு, ''தாய்மார்'' என்பது நினைப்பிக்கின்றது. யாய் = தாய். கண்



உலகப் பொருள்களைக் காட்டுதல் போல, மெய்ப் பொருளை ஞாநம் விளக்குதலால், ''ஞானக் கண்'' எனவும், மனை, உடம்பினைச் சுகமாகத் தங்குவிக்கு மிட மாதலின், 'வீடு' எனப்படுதல் போலப், பிரத்திய கபின்ன பரம்பொருள், துன்பமே யில்லாத இன்ப வடிவாதலின், மனஞ் சென் றின் புரு வாகத் தங்க இட மாக இருத்தலின், வீடு எனவும், அத் தகைய உயர்ந்ததை யின்னு ரினியர் எனக் கருதா து எவருக்கும் வழங்கலின், 'கண்ணியங் கோள் வீ ரேசன், எனவும், அத் தகையான், நம் புண்ணியத்தால் தோன்றினன் என்பார், ''புண்ணியன்'' எனவும், அவனை, நீ ஆ ணுருக் கொண்டமையால், யாரோ என நினையாமல், தன்னையே தர வல்ல சற் குரு என நினைந்து, பெண்களுக் கியல்பான நாணத்தை நீக்கி அண்மையிற் சென்று போற்றலா மென்பார், ''நீ யணுகி'' எனவுங் கூறினர். விடல் = தங்குதல்; நிறுத்தல். வண்டியை விட்டான் என்புழி அப் பொருள் தருதல் காண்க. விடுதற் கிடமாவது எதுவோ, அது வீடு எனப்படும். இனி எல்லாவற்றையும் விடுதலாற் றோன்றுவது யாதோ, அது வீடு எனவு மாகும். இது முத்தி யொன்றற்கே பொருந்தும். 14

15. தார்மேவித் தாரணியில் தன்னைத் தரவல்ல
நார்மேவும் வீரகுரு நாதன்இவன் பார்ஆரும்
தேர்மேவு பிஞ்ஞகனே தேரின்என உள்கசிந்து
சீர்மேவும் அன்பர்எலாம் தேர்ந்துநனி வாழ்த்துகின்றூர்
ஏர்மேவும் முத்தியினை எய்திப் பிறப்பகற்றப்
பார்மேவி நல்தவங்கள் பண்ணுதலும் வேண்டாவே
கூர்மேவு மைவிழியாய் கொஞ்சுதுயில் விட்டவனை
நேர்மேவி வாழ்த்திடுவாய் நேர்ந்திடலாம் எம்பாவாய்.

(நா-பொ-ரை.) கூரிய மை பூசிய விழிகளை யுடையவளே! எங்கள் பாவையே! பூ வுலகத்தில் தத்துவ ஞான மாகிய வெற்றி மாலையைத் தரித்து வந்து, தன்னை வழிபட்டார்க்கு, பிறவி யாகிய

பெருந் துன்பத்தைச் செய்கின்ற அஞ்ஞான மாகிய அரசனையும்,
அவன் படைக ளாகிய காம முதலியவற்றையும், வெல்வதற்கு
ஞான விநோதனையும், அவன் படைக ளாகிய வைராக முதலிய
வற்றையும், செலுத்தி யழிக்கச் செய்து, பிரத்திய கபின்ன பிரம
மாகிய தன்னையும், கொடுத்துப் பேரின்ப மாகப் பிறங்கச் செய்
தலில், வல்லவ ராகிய அருளே வடி வாக அடைந்த வீர சேகர ஞான
தேசிகத் தலைவரை, விழுமிய அன்பு கொண்ட அடியவர்க ளெல்
லாரும் இத் தேசிகர்பா லுள்ள நற் குண, நற் செய்கைகளைக்
கொண்டு ஆராய்ந்தோமானால், இவர் பூமி யாகிய தேரின்மீ தேறித்
திரி புரத்தை யழிக்கச் சென்ற சிவ பெருமானே எனப் புலப்படு
கின்றனர் எனத் தெளிந்து, அவரை மிக மனம் கசிந்து வாழ்த்து
கின்றனர். ஆதலால், நீயும், உயர் வுடைய இன்பமே வடி வாகிய
வீடு பேற்றினைப் பெற்றுத், துன்பமே வடி வாகிய பிறவிகளை யொ
ழிப்பதற்கு, உறைகின்ற ஊரை விட்டு வேற் றூர்களையும், மலை
முதலியவற்றையும், அடைந்து கடின மான துற வற நோன்புகளைச்
செய்து வருந்துதலும் வேண்டாம். கூடிக் குலவுகின்ற (நன்கு
தானே வந்து பொருந்துகின்ற) தூக்கத்தை நீக்கி, அப் பெருமானை
நேரே யடுத்து வாழ்த்தினால், முத்தி யெய்துதலும், பிறவி யொழித்
தலு மாகிய இரண்டையும் அடைய லாம். ஆதலால், அவரை
வாழ்த்துவதற்கு முதலில் இப் பொய்கை நீரில் குளிப்போம்
வருதி. எ—று.

குருபரற்கு ஞானம் மாலை யாகும் என்றது, "ஞானமே திரு
மாலையும் சாந்தமும்" (அஞ்ஞ வதைப் பரணி 17 திரு அவதாரம் 7)
என்னும் தத்துவ ராய சுவாமிகள் திரு வாக்காற் புல னாகும்.
பூ வுலகில் அடியவர் பொருட்டு இறங்கியவர் (அவதரித்தவர்) என்
பார், "தார்மேவித் தாரணியிற் றன்னைத் தா வல்ல" என்றனர்.
தன்னையும், என்ற இறந்தது தழீஇய உயர்வு சிறப் பும்மை விகாரத்
தால் தொக்கது. நார் = அன்பு. அஃ தாகு பெயராய் அஃ தினும்



அரு ளாகிய குழவி மே னின்றது. முப் புரத்தை யெரிக்கப் புறப்
பட்ட மூர்த்தி யென்பார், "பாரூரும் தேர் மேவும் பிஞ்ஞகன்"
என்றனர். இதனால், இக் குருபரர் தம்மை யடைந்த மாணவர்கட்
குத் தூல சூக்கும காரண சரீரங்க ளாகிய முப் புரத்தையும், பந்தத்
திற் கேது வாகாமற் கெடுக்க வல்லவர் என்பதைக் குறிப்பித்தனர்
என்ப தாம். விழுமிய அன்புடையவர்க் கன்றி, மற்றையவர்கட்குக்
குருபரரைத் தெளிதல் அருமை யாதலால், "சீர்மேவு மன்பர்"
எனவும், இரண் டொரு அன்பர் வாழ்த்துதல் கொண்டு நா மெங்
ஙனம் நம்பி வாழ்த்துதல் கூடும் என்பதை நோக்கி, "அன்ப ரெல்
லாம்" எனவும், அன்ப ராயினர் பலருங் கூட, யாரோ சொல்வதைக்
கேட்டு ஒரோ வழி மயங்கி வாழ்த்துகினும் வாழ்த்தலாம், அது
கொண்டும், நாம் எவ் வாறு நம்பி வாழ்த்துதல் கூடும் என்பதை
நோக்கி, அவர் ஐயம் திரி பறத் தெளிந்து வாழ்த்துகின்றனர்
என்பார், 'தேர்ந்து' எனவும் கூறினர். இது, "இயற்கை குணஞ்
சோதித்து முன்னே பின்னே யாவையுமாம் பிரமநீ யென்னல்
வேண்டும், வியப்புறவா சையிலுழல்வார்க் கிவ்வா றோதின்
மீளாத நிரயகில் வீழ்த்த தாகும், தியக்குறுபோ கத்தாசை தீர்ந்து
புந்தி தெளிந்தவனைப் போல்வார்க்கே திகழத் தோன்றும்,
"மயக்கமற வுணர்த்தவல்ல குருவைக் கிட்டா வருந்தியுந்தன்
பிறப்பறுக்க மகனு மாங்கே" (வாசிட்டம் 4 திதிப் பிரகாணம் 4 தா
சூரன் கதை 12 கவி) என்பதை யடி யொற்றிக் கூறிய தாகும்.
"இன்பமே எந்நாளும் துன்ப மில்லை" (அப்பர்) என்னு முத்தி,
சாலோக முதலிய பத முத்திகளினு முயர்தலால், "ஏர் மேவு
முத்தி" என்றனர். ஏர் = எழுச்சி. "வலனேர்புதிரிதரு" (திரு
முருகாற்றுப் படை 1வது வரி) என்பது முதலியன கொண்டு
அஃ தப் பொருட் டாதலை யுணர்க. அஃ துயர் வாகிய பண்பின்
மேனின்றது. இம் முத்தியினைப் பிற சான்றோரும், "சீர்க் கதி"
(சிவப் பிரகாச சுவாமிகள்) என்பது முதலிய உயர்வு அடை
கொடுத்துக் கூறுதல் காண்க. "ஏர் மேவு முத்தி" என்னு மிது,

4

“சிறப்பீனும்” (வள்ளுவர் 4-1 32-1) என்பது முதலியவற்றைப் பின்பற்றி யெழுந்த தாகும். அங்குப் பரிமே லழகர், ‘எல்லா வற்றினும் சிறப் புடைய தாகலின், வீடு பேறு சிறப் பெனப் பட்டது” என எழுதிய வுரையையும் நோக்குக. “தந்தை தாய் முதலிய தமரைக் காண்குறில், வெந்துயர் விளை தலால் விருப்ப மே வலால், அந்தநன் னகரகன் றைம்பது யோசனை, மைந்தனே நீபா தேயம் வைதுவாய்” (சிவ ஞாந வள்ளலார் 8வது அதி ரக சியம் 41) எனச் சான்றோர் கூறியபடி, பற்றை யுண்டாக்கு தலால், துறவிகள் தன் னூர்க்கண்ணும், பக்கத்திலும், இருத்தல் பொருந்தா தாகையால், வேற் றூர்க்கண்ணும், மலை முதலிய வற்றின்கண்ணும் சென்று தங்குவார்கள் என்பார், “பார் மேவி”, என்றனர். வேறு என்பது; சொல் லெச்ச மாகக் கொண்டு வருவிக்கப்பட்டது. ஒரு சொல் எஞ்சி நிற்றலைச், சொல் லெச்சம் எனவும், பல சொல் எஞ்சி நிற்றலை, இசை யெச்ச மெனவும் கூறுவர் இய னூ லாசிரியர். நற் றவம் = துற வற நோன்பு. இது, “நற் றவஞ் செய்வார்க்கிடம்” (சீவக சிந்தாமணி நாமகள் இலம்பகம் நாட்டு வளம் 48) என வரும் திருத் தக்க தேவர் முதலியோர் வாக்காற் புல னாகும். இல் நிலையி னின்றூர் ஒழுக்கங் களும், ‘தவம்’ எனப்படினும், அது இம்மைக்கண் புகழும், மறுமைக் கண் துறக்கமு மாகிய பயன்களை யன்றி, உயர்ந்த வீடு பே றாகிய பயனை யளிக்காது. ஆதலின், அது, ‘நற் றவம்’ எனப்படாது. துற வற ஒழுக்க மாகிய உற்ற நோய் நோன்றல், உயிர்க் குறுகண் செய்யாமை முதலிய தவங்கள் வீடு பே றாகிய பயனை முக்கிய மாக அளிக்க வல்லவை யாகலின், “நற் றவங்கள்” எனப்பட்டன என்க. “இல்லற மல்லது நல்லற மின்று” (ஔவையார்) “அற னெனப் பட்டதே யில்வாழ்க்கை” (வள்ளுவர் 5-8) என்பன இயற்றுதற்கு எளிமை யுடைய தென்பது பற்றிக் கூறியன வன்றி, அளிக்கும் பயனை நோக்கிக் கூறியன வல்ல வென்க. இனி நற் றவங்கள் என்பதற்கு நிட்காமிய தவங்கள் எனப் பொருள் கூறினும்



பொருந்தும். சாமுத்திரிகா நூலிற் கூறிய இயல்புக ளனைத்தும் உடையவ ளாதலின், நீ நல்ல அறி வுடையவ ளாக இருத்தல் வேண்டு மன்றோ, அப்படி யிருந்தும் வாளா துயிலுதல் நன்றோ என்பார், “கூர் மேவு மை விழியாய்” என் றழைத்தனர். இது, “आकार सदृश प्रज्ञः (ரகு வம்சம்) “நுண்மா ணுழைபுலம் இல்லான் எழினலம், மண்மாண் புனைபாவை யற்று.” (வள்ளுவர் 41 கல் லாமை 7) என்பன முதலியவற்றை யுட்கொண்டு கூறப்பட்ட தாகும். தூக்கந் தானே வந்து தழுவும்படி நீ தமோ குணத்தினைக் கொள்ளுதல் தகா தென்பார், “கொஞ்சு துயில் விட்டு” என்றனர். 15

16. நாதன் திருக்களரான் நங்கள்வீ ரேசகுரு
ஏதம் வராதளித்து எம்தமையும் உள்கொண்டு
போதமதை தந்திரண்டு பற்றையுமே போக்கினன்காண்
மாதரசே கீதைபுகழ் மார்கழியில் நீர்மூழ்கிப்
போதலரும் போதினில்அப் புண்ணியனைப் பாடுவையேல்
வாதனைகள் மூன்றும் வறுத்தவிதை ஆகிவிடும்
சோதிமயம் ஆகத் துலங்கிடுவாய் அன்னவனைக்
காதலொடு பாடிக் கசிந்துநிற்பாய் எம்பாவாய்.

(நா-பொ-ரை.) மங்கையர்க் கரசியே! எங்கள் பாவையே! உலகத்திற் கபின்ன நிமித்த உபாதான காரண வடிவ ராக இருக் கின்றவரும், திருக் களரிலே எழுந்தருளி யுறைகின்றவரும், நம் குரு பரும், ஆகிய வீர சேகர ஞாந தேசிக மூர்த்தி யானவர், ஒன்றுக்கும் பற்றாத எங்களையும் ஒரு பொரு ளாக அருள் கொண்டு, திரு வுளம் பற்றித் தத்துவ ஞானத்தைக் கொடுத்து, ‘யான் எனது’ என்னும் இரு வகைப் பற்றையும், போக்கி விட்டு, இன்ப வடி வாக இலகச் செய்தார். ஆதலால், நீயும் வழிபடுதற் கேற்ற, ஏற்ற மான இந்த மார்கழித் திங்களில், தாமரை மலர் முதலிய மலர்கள் மலரும் விடியற் காலத்தில், இப் பொய்கையில் குளித்து, அந்தப்

புண்ணிய வடிவ மான குரு பரரை வாழ்த்துவையே யானால், உனக்கும் இரு வகைப் பற்றினை யொழிக்க வல்ல தத்துவ ஞான முண்டாகும். அது, திட மாகவே யுண்டாதலால், உலக வாசனை முதலிய மலின வாசனைகள் மீண்டும் பற்றினை யுண்டாக்குவதற் கியலாமையால், வறுத்த விதைகளைப் போல பய னின்றி யொழியும். அஃ தவ்வாறு ஒழிய, அத் திட ஞானத்தால் ஆவரணம் பங்க மாக, நீ பே ரொளி யாகத் தானே விளங்கி யின்ப வடி வாக இருப்பாய். ஆதலால், அக் குருபரரை அன்பு கொண்டு பாடி நிற்க, முதலில் இப் பொய்கை நீரிற் குளிப்போம் எழுந்து வருதி. எ—று.

உலகத்தைப் படைத்து அளித்து அழிக்க வல்லவ ராதலின், அடியவர் வேண்டுவன யாவுந் தருவார் என்பார், 'நாதன்' எனவும், அவர் அவ் வாறு தருவதற்காகவே, நாம் காண மனித வேடம், கொண்டு வந்தனர் என்பார், "திருக் களரான்" எனவும், அவ் வாறு மனித வேடந் தாங்கி வந்தன ராயினும், நா மெல்லாம் அச்ச மின்றி யணுகி வழிபாடு செய்தற்கு எளியவ ராக இருக்கின்றார் என்பார், "நங்கள் தரு" எனவும், அவர் யா ரென மயங்குதல் வேண்டா என்பார், 'வீரேச தரு' எனவும், அவர் அஞ்ஞானத்தை யழிக்க வல்ல மெய்ஞ் ஞானத்தைத் தர வல்லவரே என்பார், 'தரு' எனவும், அவர் எல்லாரையும் எற்றுக் கொள்வாரோ, கொள்ளாரோ, என் றையுறல் வேண்டாம். ஒன்றுக்கும் பற்றாத எங்களையும் அருள் மேற் கொண்டு ஒரு பொரு ளாகக் கருதி யேற்றார் என்பார், "அளித்து, எம் தமையும் உட் கொண்டு" எனவும், அவர் உங்களை யேற்று யாது புரிந்தன ரென்னல் வேண்டாம், அவர் எங்களை யேற்ற பேற்றினால், அவரை வாழ்த்துதல் முதலிய அவர்க் குரிய வழிபாட்டினை நாங்கள் செய்ய, உள்ள மாசு கழிதலின், சிரவண மனன நிதித்தியாசன வாயி லாக தத்துவ ஞானந் தோற்றுவித்து விக்ஷேப ஆவரண ரூப சித்த மலங்களையு மறிவித்துத். துன்ப மின்றிய அழி வறு மின்ப வடிவ சிவ மாக



என்று மிருத்தலை விளக்கினா ரென்பார், "எதம் வாராது, போத மதைத் தந் திரண்டு பற்றையுமே போக்கினன் காண்" எனவும் கூறினர். காண், முன் னிலை யசைச் சொல். அழகில் மட்டு மன்றி, அழகிற் கேற்ற அறிவிலுஞ் சிறந்தவளே என்பார், "மா தரசே" என்றனர். "பூ வேனப்படுவது பொறி வாழ் பூவே" (ஔவையார்) என்ப வாதலால், 'போது' என்பதற்குத், தாமரை மலர் முதலிய மலர் என வுரை வுரைக்கப்பட்டது.

போ தலரும் போது, அமிழ்த வடிவ மாகத் திகழ்தலினால், அப் பொழுதில் விழித்து நீ ராடினால் உடல் செம்மைப்படும். அது செம்மைப் படுதலால், உள்ளமுஞ் செம்மைப்படும். அச் செம்மை யுள்ளத் தோடு பொருந்தப் பாடுதல், அன்புடன் கலத்தலால், அவர் விருப் பாக ஏற்று அருள் புரிவா ரென்பார், "போ தலரும் போதினில் பாடுவை யேல்" என்றனர். புண்ணிய வடிவின ராகிய அப் பெருமானைப் பாடினால், பாடினவரும் புண்ணிய முடையவ ராகிப் பாப மாகிய மாசு நீங்கப் பெறுதல் வாயி லாக, மற்றைய மாசுகளும் நீங்கப் பெறுவார் என்பார், "புண்ணியனைப் பாடுவையேல்" என்றனர். அமுக்கிய அதிகாரிகளுக்குத் தோன்றும் தத்துவ ஞானத்தை, மலின வாசனைகள் மூன்றும் தடை செய்வது போல (அதிட மாக்குவது போல), அக் குருப ரருளால் முக்கிய அதிகாரி யாகு நினக்குத் தடை செய்யா என்பார், "வாதனைகள் மூன்றும் வறுத்த விதை யாகிவிடும்" எனவும், அகண்டாகார விருத்தி ஞானத்தால், ஆவரணம் பங்க மாகச் சுட்டப்படாமல், பிரத்திய கபின்ன பிரம மாய்த் தானே விளங்குவை யென்பார், "சோதி மய மாகத் துலங் கிடுவாய்" எனவும், பாடுதலால் அத் தகைய நிலை கைவரப் பெறுதலால், அன்பினா லுருகப் பெற்றுப் பாடுதல் நன் றென்பார், "காதலொடு பாடிக் கசிந்து நிற்பாய்" எனவும் கூறினர். "சோதிமய மாகத் துலங்கிடுவாய்" என்பது, பிரமம், விருத்தி வியாப்திக்கு விடயமாவ தன்றிப், பல வியாப்திக்கு விடய மாகாது என்பதைக்

குறிக்கின்ற தென்க. இதனை நாயக்கர் சுவாமிகள் முதலிய சான்றோர்கள், "சுட்டுக் கடங்காதடி கிளியே சுந்தரத்தின் பேருருவம்" என்பது போல, விளக்க மாகக் கூறுதலை நோக்கித் தெளிக. 16

17. வண்டொலிக்கும் சோலைமிக மன்னும் திருக்களரில்
பண்தழைக்கும் பாஞான சம்பந்தர் பாடல்பெறும்
திண்தடந்தோள் பாரிசா தேசுரக்குக் கோயிலதை
கண்டிரதம் ஐந்தியற்றிக் கண்டவர்கள் தாம்வியப்புக்
கொண்டமையக் கும்பாபி டேகம் குயிற்றித்தேர்
மண்டிவர ஈசரையே வைத்திழுக்கும் நேரமதில்
திண்தேர் நிலைக்கமகா தேவஎன வீரேசக்
கொண்டல்முத்தி கொண்டவிதம் கூறுகநீ எம்பாவாய்.

(நா-பொ-ரை) எங்கள் பாவையே! நீ வண்டுகள் முழங்கும் மலர்கள் மாறாத சோலைகள் மிக நிலைபெற்ற, திருக் களரென்னும் திரு வூரின்கண், பண்கள் வளரப் பாடும் பா வேந்த ராகிய திரு ஞான சம்பந்தப் பெருமானார் பாடிய, பா மாலையைச் சூடிய திண்ணிய தா ளளவும் நீண்ட திருக் கைகளை யுடைய பாரி சாத வனத் திறைவர்க்குத் திருக் கோயிலை யமைத்து, அப் பெருமான் அமிருத வல்லி என்னும் உமை யம்மையார் விநாயகர் முருகப் பெருமான் சண்டேசுரர்களோடு திரு வுலாப் போதற் குரிய ஐந்து தேர்களையும். புதிதாக அமைத்துப் பார்த்தவர்க ளெல்லாரும் வியக்கும்படி முறை தவறாமல் கும்பாபிடேகஞ் செய்து, அப் பாரி ஜாதேசுரரைத் தேரில் எழுந்தருளச் செய்து, தேரை யிழுத்து வரும் பொழுது, அத் தேர் திருவாச முனிவர் சந்நிதிக்கு நேரே வந்து இழுபடாது நின்றுவிட, அப் பொழுது மகா தேவ, மகா தேவ என்று அவ் வயரிய மறையினைத் திரு வாயால் மொழிந்து, பாவயப்பட்டு அவ் விடத்திலேயே விதேக முக்தியை யடைந்த, மேகம் போல கைம் மாறு செய்ய இயலாத, தன்னையே கொடுக்கும் பே ருதவியைச் செய்யும் வள்ள லாகிய, வீர சேகர ஞான தேசிக மூர்த்தின் பெருஞ்



சீர்த்தியை யெடுத் துரைப்பதற்கு, முதலில் இப் பொய்கை நீரிற் குளிப்போம் எழுந்து வருக. எ—று.

பன்னிரண்டு மாதங்களிலும், ஒன்று மாறினும், ஒன்று பூத்து நிற்கும், பல வகை மரஞ் செடி கொடிகளை யுடைய சோலை யென்பார், "வண் டொலிக்கும் சோலை" எனவும், அவ் வா றுள்ள சோலையும் பல வென்பார், "மிக" எனவும், அவையும் என்றும் நீர் வளத்தாலும், பூ வளத்தாலும், நின்று நிலவுகின்ற என்பார், "மன்னும்" எனவுங் கூறினர். சைவ சமயாச்சாரியர்கள் பாடல்க ளெல்லாவற்றினும் பல வகைப் பண்கள் பொதுள நிற்பனவும், வெவ் வேறு வகை யாக ஒரு பண்ணே பாடும் நிலையில் வளர நிற்பனவும், திரு ஞான சம்பந்தப் பெருமானார் திருக் கடைக் காப்பாகிய தெய்வத் தமிழ் மாலைகளே யாம் என்பார், "பண் டழைக்கும் பா ஞான சம்பந்தர்" என்றனர். பாரிசாத வனத்தி லுறைதற் கேற்ப, அன்பர்கள் வேண்டியவற்றை யெல்லாம் வாரி வாரிக் கொடுத்தலால் ¶ வலிய வாகின கைகள்; அத் தியாகத்தாலே மாலையும் பெற்றன என்பார், "ஞான சம்பந்தர் பாடல் பெறும் திண் டடந் தோள்" என்றனர். பஞ்ச மூர்த்திகளுக்கும் பண்டைக் காலத்து அரசர்கள் போல, ஐந்து தேர்களையும் புதியன வாக அமைத்தலின், "இரதம் ஐந் தியற்றி" என்றனர். ஐந்தும் என்னு முற் றும்மை விகாரத்தால் தொக்கது. 'இரதம்' என்னும் ஒரு மொழி, ஒழிந்த இன மாகிய வாகனம் சகட முதலியவற்றையும் அவர் செய்தார் எனக் கொள்ள நின்றது. கும்பாபிடேகத்தைச் சிறப் பெல்லாம் அமையச் செய்தமையாலும், உலகத்தி லுட லெடுத்து வந்த செயல்களை முடித்தோம், இனி இருத்தல் ஒல்லா

---

¶ பரிசிலர்க் கருங்கல நல்கவும் குரிசில்

வலிய வாகு நின் றடோய் தடக் கை" (புற நா னூறு 936-14 கபிலர்) என வருதலை நோக்குக.

தெனக் கருதி சித்திரைத் திங்களில், அடுத்த ஆண்டில் நிகழ்த்த
வேண்டிய திரு விழாவைக், கும்பாபிடேக முடிந்தவுடன் நா ளில்லை
யென, வைகாசியிலேயே திரு விழாவைத் துவக்கித் திருத் தேர்த்
திரு நாளில், பூத வுடலை நீத்துப் பொன்றாத மெய்ப் பொரு ளாக
இருந்தபடியே இருக்கு நிலைமை பூண்டமையாலும், "கண்டவர்
வியக்க ......... கொண்டல் முத்தி கொண்ட விதம் கூறுக"
என்றனர்.

17

18. நம்மையும் ஓர்போருளா நாடி நமஆன
போய்ம்மைஉடல் ஆவிபோருள் போதும்எனக் கோண்டு
மேய்ம்மைஆ நந்தஉரு மேவ நமக்களித்த [தன்
சேம்மை அருளாளன் தேய்வ சிகாமணியாம்
தம்மை அறிந்தவர்க்குத் தாமாய் அமர்ந்தகுரு
இம்மை மறுமைஎலாம் ஏகபரம் என்றருள்வோன்
போய்ம்மை அகலப் போலியும் நறும்சோதி
ஐம்மைகோளும் வீரேச அண்ணலைப்பா டேம்பாவாய்.

(நா-பொ-ரை) எங்கள் பாவையே! இவ் விழிந்தவரை
ஆளுதலே சிறப்பாகு மெனக் கருதிச் சாதனங்கள் சிறிது மின்றிய
நம்மையும், ஒப் பற்ற முத்தி விருப்புடைய மாணவர்களோ டொப்பக்
கொண்டு, நம் முடைய நிலை யற்ற உடல் முதலிய முப் பொருளையும்,
போது மென்று தம் முடையன வாக்கிச், சச்சிதாநந்த நிச வடி
வத்தை நம் வடி வாக நா முணரும்படி நமக்குத் தத்துவ ஞானத்
தைத் தந்தருளிய நேர்மையான அருள் படைத்தவரும், தம்மை
சற் குரு வெனத் தெளிந்து வந் தடைந்த மாணவர்களுக்குப்
போதக வேதக சூசக வாசக காரக ரென்னும் எல்லாக் குருபாருந்
தாமே யாக எழுந்தருளி, முன்னர் சுருதி முதலியவற்றின் பொரு
ளைச் சிரவணிக்கும்படி போதித்தும், அதன் வாயி லாக எப்போதுந்
தானுகவும், தனக் கன்னிய மாகவும், ஒரு கால் தா னுகவும், தனக்
கன்னிய மாகவும், விளங்குகின்ற தத்துவ மிது, இவை, இவைக



ளென விளக்கியும், விளக்கும் வாயி லாக நித்திய மின்னது அநித்திய
மின்னவை யென அறியும் விவேகத்தை யுண்டாக்கி, அதன் வாயி
லாக, இக லோக பர லோகங்களி லுள்ள இன்பங்களில் வெறுப்
பையும், சம முதலிய ஆறு குணக் கூட்டங்களின் அடைவையும்,
பெறச் செய்து, ஆன்ம விருப்பையு முண்டாக்கித், தத்துவமஸி
மகா வாக்கி யுபதேசத்தால், சிவ சீவ ஐக்கிய ஞானத்தையு முண்
டாக்கிப், பின்னர் மலின வாசனையால், இக லோக பர லோக
சுகங்கள், அவ் வப் பொருள்களி லிருந்து உண்டாவன வென
மயங்காதபடி, அவை யெல்லாம் அத்துவிதீயப் பரம் பொரு ளாகிய
ஆத்மாநந்தத்தின் லேச மெனக் காட்டித், தத்துவ ஞானத்தால்,
ஆவரணம் பங்க மாகத், தானே சொப்பிர காச மாக விளங்கும்
சித் வடிவமே பரிபூரண பரமாநந்த மாக இருப்பது என, உண்மை
நிலையினைத் தெளிவுறக் காட்டுவதற்குக் காரணப் பிரமத்தி னவ
தார மாகத் தங்கிய, விகித குருபாராகிய மைத்திரி முதலிய எழி
லாரும் வீர சேகர ஞான தேசிக மூர்த்தியை, நமக் குண்டாகிய
மெய்ஞ் ஞானந் திட மாதற் பொருட்டுப் பாடி வழிபடுதற்கு,
முதலில் இப் பொய்கை நீரிற் குளிப்போம் வருதி. எ—று.

தெய்வ சிகாமணி = காரணப் பிரமம். காரிப் பிரமங்களுக்கு
எல்லாஞ் சிறந்த சிரோ மணி போன்ற பொருள் என்ப தாம்.
மறையின் முடியினால் சொல்லப்படுகின்ற சுத்தப் பிரமமே, உலக
சிருட்டியி னிமித்தம் மாயா சபளித காரணப் பிரம மாகவும்,
அதுவே, முத்தி விருப்புடையார்க்கு உண்மையை விளக்க அடியவர்
கண்மணி போலச் சிறந்த குருபாராகவும், பின், அக் குருபார் வாயி
லாக ஆவரணத்தை யழிக்க வலல தத்துவ ஞான மாகவும், முதலில்
வழிபடத் தக்க காரியப் பிரம மாகவும் உண்டாயது (உபாதிகளால்
வேறுபட்டது) என்பா ராக, "சீர் கொண்ட அருமறையின் முடி
மணியைத் தெய்வ சிகாமணியை யடியவர் தங் கண்மணியை
மாயைப், பேர் கொண்ட இருளிருக்குந் தினமணியை முக்கட்

பெருமணியை'' என (வேதாந்த சூடாமணிப் பாயிரம்) முறைப் படுத்திய நிலையினை நினைப்புறுத்திக், குருபா ரக் காரணப் பிரமத்தி னவதார மென அறிவுறுத்த, ''தெய்வ சிகா மணி'' யென்றனர். 'நம்மையும்' என்றதில் உம்மை, இழிவு சிறப் பும்மை. போதும்= அமையும். நம ஆன=நம் சம்பந்த மான. 'நம' என்பதில் அகரம் ஆறும் வேற்றுமைப் பன்மை யுருபு. ''தம்மை யளித்தவர்க்கு; குரு, தாமாய், இம்மை மறுமை யெலாம் ஏக பரம் என்று, பொய்ம்மை யகலப் பொலியும் நறுஞ் சோதி என்று, அருள் வோன் (ஆக) தெய்வ சிகா மணியாம் ஐம்மை கொளும் வீரேச அண்ணல்'' எனக் கொண்டு கூட்டிப் பொரு ளுரைக்கப்பட்டது. 'ஆக' என்பது சொல் லெச்ச மாகக் கொண்டு, 'அருள்வோன் ஆக' என வைத்து, அருள்வதற்கு எனப் பொரு ளுரைக்கப்பட்டது. 'என்று' என்பது வேறிடத்துங் கூட்டப்பட்டது. 'பரிபூரண பரமானந்த மாக இருப்பது' என்பது முதலிய தொடர்கள் இசை யெச்ச மாகக் கொண்டு வருவிக்கப்பட்டன என்க.

இம்மை மறுமை என்பன ஆகு பெய ராக, அவ் வவ் வின்பங் களை யுணர்த்தின. பொய்ம்மை=அநிர் வசநீய அஞ்ஞாநம். ஐம்மை=அழகு. அஃது மைத்திரியாதி அழகைக் குறித்து நின்றது, ''எழிலாரும் ஞாநி'' (சசிவந்ந போதம் 3) என்புழிப் போல. அண்ணல்=பெருமையிற் சிறந்தோன். 18

19. வாழைஎனும் புல்லில்உறும் மட்டைஎலாம் நீக்கிநடுக்
காழ்அமைந்த தண்டைக் கதுவல்என மேல்மேலாச்
சூழுகின்ற கோசம்எலாம் சூழ்ந்தொதுக்கத் தோன்றுகின்ற
பாழினையும் நீக்கப் பயில்கரிநான் ஆவன்என
ஆழும்அந்த நல்உணர்வும் அற்பம்என விட்டகமே
பேதைப் பிரமம்எனப் பேசும்நெஞ்சும் தான்நழுவ
வாழ்கஒன்று என்றுரைத்த மன்வீர சேகரனை
ஏழுபவம் தொலைய ஏத்திடுவோம் எம்பாவாய்



(நா-பொ-ரை.) எங்கள் பாவையே! எழு வகைப் பிறப்பும் நமக்கு வாராமல் அடியோடு ஒழியும்படி, ஸ்ரீ வீர சேகர ஞாந தேசிக குருபரர் திரு வாக்கின்படி, நாம் ஒவ் வொருவரும் வாழை யென்று வழங்கப் பெறும் புல்லின்கண்ணே ஒன்றற்கு மே லொன் றாக மேலே சூழ்ந் தடுக் காக அமைந்த மட்டைக ளெல்லாவற்றையும், ஒவ் வொன் றாகப் பிரித்து நீக்கி விட்டு, நடுவே யுர மாக அமைந்து கிடக் கின்ற தண்டினைப் பய னாகக் கொள்ளுதல் போல, (தண்டினைக் காணுத லென) ஒன்றற்கு மே லொன் றாக அமைந்து மறைக்கின்ற அன்னமய கோச முதலிய ஐந்தனையும், (நான் பருத்தேன் இளைத் தேன் சீவித்தேன் என்பன போலத், தா னாக வுணரப்படினும், என் தேகம் பருத்தது, இளைத்தது, என் பிராணன், என் மனம், என் புத்தி, என் அறியாமை யெனத் தனக் கன்னிய மாக உணரப்பட லானும், பொய் அறியாமை துன்ப வடி வாகக் காணப்படலானும், இவை யா னல்ல வென) ஆராய்ந்து, நாம் ஒதுக்கி நோக்கு மிடத்து, நமக்குச் சூனியந் தோன்ற, அச் சூனியத்தை, ''நான் நான்'' என்று நாம் மயங்காதபடி, அச் சூனியமும், ''நீ யன்று நீ யன்று'' என்று என ஒவ் வொருவருக்கும் உரைத்து, அவை யெல்லாவற்றையும் அறிந்து கொண்டு, ஒன்றிலும் பற்றாது மூன் றவத்தையினும் நிலை பெறுகின்ற சான்றே நீ நீ என் றுரைக்க, அச் சான்றே, ''நான் நான்'' என ஒவ் வொருவரும் நா முணர, இவ் வுணர்ச்சியும் பந்தத் திற்குக் காரண மன்றாயினும், புருடார்த்த சாதன மன்றாதலால் போதாது, பிரத்திய கபின்ன பிரமமே யான் யா னென வுணரல் வேண்டும் என் றுரைக்க, பிரத்திய கபின்ன (தேச கால வத்து பரிச்சேத மின்றிய) பெரிய பிரமமே, ''யான் யான்'' என நா முணரும் போது, அவ் வகண்ட பிரமாகார விருத்தியும் (ஞாந மும்) புருடார்த்த சாதன மாயினும், அத்வைத அவஸ்தாந வடிவ சாத்திய நிர்விகற்ப அநுபவத்திற்குத் தடையாக இருத்தலால், அவ் விருத்தியும் நீங்குதல் வேண்டும், அது நீங்க, மனம் பிரமாகார மாக நிர்விகற்ப நிலை பெற, அகண்டைக ரசப் பே ரின்பப் பெரு வெள்

ளத்தில் மூழ்கி நிலை பெறுக, நிலை பெறுக என, நமக் குரைத்து நிலை பெறச் செய்த, அப் பெருமானை வாழ்த்திடுவோம் இப் பொய்கை நீரில் முழுக எழுந்து வருதி. எ—று.

இப் பாவை, ''தஞ்சமாங் குருவுஞ் சொன்ன தத்துவ வழிதப்பாமல்
பஞ்சகோ சமுங்க டந்து பாழையும் தள்ளி உள்ளில்
கொஞ்சமாம் இருப்பும் விட்டுக் கூடஸ்தன் பிரமம் என்னும்
நெஞ்சமு நழுவி ஒன்றாய் நின்றபூ ரணத்தைக் கண்டான்''
(கைவல்லிய நவ நீதம் தத்துவ விளக்கப் படலம் 76) என்பது முதலியவற்றைக் கொண்டு நோக்கிப் பொரு ளுணர்க.

நீள வழி தப்பாமல், மற்றை புல், மரங்கள் போலாது, 'வாழை' வாழுதலின், வாழை யென, 'கதலி' கூறப்படுகின்றது. அதனை, 'வாழை மரம்' என வுலகத்தா ரிடைத் தெரி வின்றி வழங் குதலை நீக்க, புறக் கா ழுடைமையால், 'புல்' எனவே படும் என வுணர்த்துபவராக, ''வாழை எனும் புல்'' என்றனர். முஞ்சிப் புல் சிறியது, வாழைப் புல் பெரியது, இரண்டும் 'புல்' எனவே படும், 'மரம்' எனப்படா; ''புறக் காழனவே புல் லென மொழிப'' (தொல்காப்பியம் பொரு ளதிகாரம் 1585-85) என மா பிருத்த லால் என்க. உள் தண்டு, மட்டைக்கு வே ளுக இருத்தலால், அது கொண்டு 'மரம்' என்ன லாம் என்னல் சாலாது. அங்ஙன மாயின், முஞ்சியையும் மா மென்னல் வேண்டும். பிரிக்கப்படாமல் அகக் கா ழுடைய தாயின், அது 'மரம்' எனப்படும், வேம்பு முதலி யன போல. காழ்=உரம்; வயிரம்.

ஐந்து கோசங்களுள், அன்ன மயத்தை நோக்கப் பிராண மயம் ஆந்தர மாகவும், அப்படியே, பின் பின் ஒவ் வொன்றை நோக்க, மற்றையன ஆந்தர மாகவும், இருப்பதால், ''மேன் மேலாச் சூழு கின்ற கோச மெலாம்'' என்றனர். இதனை,



''யாதொன் றெலும்பு நரம்புமுதல் இந்த உடம்ப தன்னமயன்
ஓது பிராண மயனத்துக் குள்ளாய் வேறு யேயொளிரும்
ஓது பிராண மயற்கயலாய் உள்ளாய் ஒளிரும் மனோமயனன்
நீதி உறவிஞ் ஞானமயன் அவனுக் குள்ளாய் நிகழுமால்''
(பிரம கீதை 3-21) என்பது முதலியவற்றால் நன்கு அறிய லாம்.

பஞ்சகோசங்களையும், அவற்றி னிலைமைகளையும், இவை யென நன் கறிய விரும்புவோர் கைவல்லிய நவநீத முதலிய நூல்களை நோக்கித் தெளிக.

பஞ்ச கோசங்கள் முழுதும், மூன் றவத்தைகளிலும் நிலை பெறாது நிற்க, 'சான்று' மூன் றவத்தைகளிலும் நிலை பெற்று மிளிர்தலால், 'பயில் கரி' என்றனர். பேழை=பெரிது. இலக் கணையால், 'பேசுதல்' என்பது, உணர்தல் மே னின்றது. நெஞ்சம் என்பது ஆகு பெய ராக, அகண்டப் பிரமாகார விருத்தியை யுணர்த் திற்று. விருத்தி, எண்ணம், என்பன ஒரு பொருட் சொற்கள்.

முன்ன ரெழுந்த பாக்களில், குருபார் முத்தி சாதன மான தத்துவ ஞான நிலையினையும், அதனால், பிறப் பிறப்புக்களும், அவற் றால், வரும் துன்பங்களும் அழியு மென்பதையு முணர்த்திய தாக வுணர்த்தி, இதன்கண், இவ் வா றுண்டாவது தான், முத்தி சாதன மான தத்துவ ஞானம் என்பதையும், உண்டாகிய அவ் வுணர்ச்சியும் நழுவிய இடத்திற் றான் பே ரின்பம் பெருகு மென்பதையும், உணர்த்திய தாக விளக்கினா ரென்க. 19

20. தேவர்எலாம் போற்றும் திருக்களர்வீ ரேசன்தாள்
ஆவலோடு பாடி அடைந்தடியம் என்றைக்கும்
ஓவல்இன்றி வீணே உழன்று கவல்மநத்தைத்
தாவாப் பிரமத்தே தான்நிலைக்க வேவைத்துத்

தேவர் எனஉலகர் தேற நிலைத்துநின்ருல்
சாவும் பிறப்பும் தவிர்ந்த சோருபமதா
ஆவதுமெய் என்ன அறிந்தவன்தாள் பாடியுறப்
பூஅலரும் போய்கைபடிந் தாடுகம்வா எம்பாவாய்.

(நா-பொ-ரை.) எங்கள் பாவையே! தேவர்கள் எல்லாரும் வந்து வழிபடுகின்ற சிறப் புடைய திருக் களரென்னும் திரு ஆரி லெழுந்தருளியிருக்கின்ற, ஸ்ரீ வீர சேகர ஞாந தேசிக மூர்த்தியின் திரு வடிகளை, அடியேம் ஆகிய நாம், ஆராத அன்புடன் அடைந்து புகழ்ந்து, புகழ்தல் வாயி லாக, நல் லுணர்வு முதலியன கைவரப் பெற்று, எப் பொழுதும் வீணுக அலைந்து துன்புறுகின்ற மனத்தினை அழி வின்றிய பிரத்திய கபின்ன பிரமத்தின்கண் நிலைக்கும்படி நிறுத்தி, நிறுத்திப், பயிற்சியால், இவர்கள் செம்மாந் திருக்கும் மெய்ஞ் ஞானிகளே என்று எவரும் தெளியும்படி, 'வீடும் வேண்டா' விறலின ராகி, ஒய்வுறும்படி செய் தமைந்தால், தோற்றம் ஒடுக்க மின்றிய பிரம சொரூப மாக அம் மனம் அமையும். அமைதலால், சீவன் முத்திப் பே ராநந்தம் பெருகுதல் உண்மை யென்ன, அவ ரருளாலேயே தெரிந்து, அப் பெருமா னுடைய திரு வடிகளை, அந் நிலை கைவருதற்கு, வா யாரப் புகழ்ந்து நிற்பத், தாமரை மலர் முதலிய பூக்கள் இரவும் பகலும் பூத்து நிற்கும்படியான, இப் பொய்கை நீரில் முதலிற் குளிப்போம் வருதி. எ—று.

பிரமா விண்டு முதலிய காரியப் பிரமத் தேவர்களும் என்பார், "தேவ ரெலாம்" என்றனர். மேவன செய்தற்கு இயலுதலின், 'தேவர்' என்றனர். எல்லாம் என்பது, 'எலாம்' என இடைக் குறையாக நின்றது பாவின்கண்ண தாதலின். ஆராத அன்பு என் பார், 'ஆவல்' என்றனர். மந்த மாகிய அன்பினுற் பய னில்லை யென்ப தாம். பரம்பரை யாக அடிமை யாக வரும் குடியிற் பிறந் தோம் என்பார், 'அடியம்' என்றனர். "உண்பது நாழி உடுப்பது நான்குமுழம், என்பது கோடிநினைந் தெண்ணுவன, கண்புதைந்த,



மாந்தர் குடிவாழ்க்கை மண்ணின் கலம்போலச், சாந்துணையுஞ் சஞ்சலமே தான்" (ஔவையார் நல் வழி 28) என்றபடி இவ் வுலக வாழ்க்கையை முன்னிட்டு அலைதலோடு மறுமை வாழ்க்கையையும், எண்ணி யலைந்து, இன்ப மின்றித் துன்பமே யுறுதலால், 'ஓவ லின்றி வீணே யுழன்று கவல் மனம்' எனவும், நனவிலே யன்றிக் கனவிலும், நனவுப் பழக்கத்தால், புலன்களை யெண்ணியே அலைத லானும், சுழுத்தியிலும், தூல உட லின்றிய காலத்துப் பிரகிருதியில் அடங்கி நிற்கும் பொழுதும், சுழற்சி கவற்சிப் பழக்கத்துடன் அடங்கியே கிடத்தலானும், "என்றும் ஓவ லின்றி" எனவும் கூறி னர். பிரமம் மூன்று காலத்தினும் கெடாது நிலவலால், "தாவாப் பிரமம்" என்றனர். தாவா என்பது ஈறு கெட்ட எதிர் மறைப் பெய ரெச்ச மாகும். 'தா' பகுதி. 'தாவு' பகுதி யென்பாரு முளர். 'தான்' என்பது அசை நிலை. வேறு எண்ணம் இன்றி, யெழுகின்ற எண்ண மெல்லாம், 'அகம் பிரமாஸ்மி, பிரமைவாகம்' என இடை விடாது எழச் செய் தென்பார், "நிலைக்க வைத்து" என்றனர். அவ் வாறு நிலைக்கச் செய்தால், அந் நெஞ்சம், அவ் வெண்ணமு மின்றிப் பிரத்திய கபின்ன பிரமாகார மாக ஒய்வுறும், அதனுல், சீவன் முத்திப் பே ராநந்தம் பெருகும். இஃது துண்மை யென்பார், "நிலைத்து நின்றல் சோருபமதா ஆவது மெய்" என் றனர். நிலைத்து நிற்றல் = நிர்விகற்ப மாக நிட்டை கொள்ளல். ஆவது = இன்பம் பெருகுவது. ஈண்டு ஆக்கம், பெருக்கத்தின் மே னின்றது. "கேடு மாக்கழும்" (பெரிய புராணம்) என்புழிப் போல. தேவர் புலவர் என்பன ஒரு பொருட் கிளவிக ளாதலின், 'புலவர்' என்பார், 'தேவர்' என்றனர். புலம் = அறிவு. அதனை யுடையார், புலவர். அஃ தீண்டுத் தூய மெய்ஞ் ஞானிகளை யுணர்த்து மாறு வைத்தனர்; "இவர்தேவர் அவர்தேவர் என்றிரண் டாட் டாட்டாது" (திரு நாவுக் கரசு சுவாமிகள்) என்புழிப் போல.

இப் பாவினால், சவிகற்ப சமாதியையும், நிர்விகற்ப சமாதியையும், அவற்றால், சீவன் முத்தி யாநந்தஞ் செநிக்கும் என்பதையு முணர்த்தி, "முடிந்தது முடித்தல்" என்னு முத்தியால், அவற்றிற் கெல்லாம் வாயில், குருபாரை வாழ்த்துதல் முதலிய வழிபாடே யென எடுத்துக் கொண்ட பழிச்சு பாடலுக் கேற்பக் கூறி முடித்தனர். ஈண்டுப் பொய்கை யென்பது, திருக் கோயில் முன்பு திகழும் பொய்கையா மென்க; அது தீர்த்த மாதலின். இப் பாவில் வரும், "பொய்கை படிந் தாடுகம் வா" என்பதை, மேலே பல பாக்களில், அநுகர்ஷ மாகக் கொண்டு வைத்து உரை உரைக்கப்பட்டிருந்தலைப் பார்த்துத் தெளிக. அநுகர்ஷம் என்பது, பின் னுள்ள தனை முன்னே கொண் டுய்த்த லாம். 20

21. பாவலர்கள் நாளும் பதமலரைப் போற்றிநிற்க
நாவலர் மெய்ம்மைதன்னை நன்குரை செய்கநன்றே
தேவர்கள் உள்உவப்பத் திங்கள்மும் மாரிபெய்க
காவலர் பூமிதன்னைக் காக்கவே தாந்தம்எங்கும்
ஓவுதல் இன்றிஎன்றும் ஓங்குக மெய்யுணர்வை
ஏவரும் கொள்ளவந்த எங்கள்வீ ரேசன்நல்ல
பூஅடி வாழகஇன்பம் பூத்திட என்றுரைத்து
நாவினால் வாழ்த்த நயந்தெழுவாய் எம்பாவாய்.

(நா-பொ-ரை.) எங்கள் பாவையே! பாப் பாடுதலிலே வல்லவ ராகிய பாவாணர்கள், பா மாலையைச் சூடிக் குருபார் திருவடி மலரைப் புகழ்ந்து நிற்பா ராக. நாவினால் வழு வின்றி யுரைக்க வல்லவ ராகிய புலவர்கள், அறம், பொருள், இன்பம் இவைகளின் உண்மை நிலையினை, மக்க ளெல்லாரும் தகுதிக் கேற்ப அறிந்து அடையும்படி பெரிதும் விளக்கு முற எடுத் துரைப்பார்க ளாக. அவர்கள் நெறி வழுவாது நிற்றலால், தேவர்க ளெல்லாரும் (தெய்வங்க ளெல்லாம்) உள்ள மகிழ்தலால், மாத மூன்று மழை



பொழிவ தாகுக. அவ் வாறு, மழை பொழியவும், மக்கள் நன்னெறி நிற்கவும், தேவர்கள் உள்ள மகிழவும், ஆளுவோர், செங்கோல் செலுத்தித் திரு மா லென்று சொல்லும் வண்ணம் நல்லவை யி னின்று நீங்காமலும், அல்லவையிற் செல்லாமலும், பூ வுலக மக்களைக் காப்பா ராக.

அத் தேவராலும், மழையாலும், காவலராலும், வரு மின்பம் சிற் றின்ப மாதலால், பே ரின்பம் தர வல்ல வேதாந்த நூல்க ளெல்லாம், தலை சிறந்து எங்கும் குறை வுறாது விளங்குக. அந்த வேதாந்த நூல்கள் கூறும், மெய்ப் பொருளை யறிதற் குரிய தத்துவ ஞானத்தை யளிப்பதற் கென்றே, எழுந்தருளி வந்த எங்கட் குரிய வீர சேகர ஞாந தேசிக மூர்த்தியின் தாமரை மலர் போன்ற திரு வடி வாழ்வன வாக. அவர் எழுந்தருளிய தன்மையால், மக்கள் துன் பின்றிச் செழிப் புற்றிருக்கவும், முமூட்சுக்கள் பிறப் பற் றிருக்கவும், இம்மை மறுமை யின்பங்களும், அழி வறு மின்பமும், பொலிவன வாக. என்று சொல்லி அக் குருபாராலேயே, இவை யெல்லாம் ஆகு மென்று, வாழ்த்துவதற்கு விரும்பி எழுந்திப் பொய்கையில் முதலில் குளிக்க வருதி. எ—று.

இதனால், இறைவனையோ, இறைவ னவதார மாகிய குருபாரையோ, வாழ்த்துதல் முதலிய வழிபாடு ஒன்றாலேயே இம்மை, மறுமை யின்பங்களும், அழி வறு மின்பமும், பெற லியலும் என்பது ஒருதலை யாதலால், முதலில், "பா வலர் நாளும் பத மலர் போற்றி நிற்க" எனத் தொடங்கினார். இப் பாவினால், வழிபாடு செய்தால், உலகத்தின்கண்ணே, அறம் பொரு ளின்பங்களின் மெய்ம்மையை உள்ள வா றுணர்த்தும் சான்றோர்கள் தோன்றுவார்கள். அவர்களுரைத்தபடி நடப்பின், உலக பாலகர்க ளாகிய தேவர்கள் மகிழ்வார்கள். அவர்கள் மகிழ் வெய்தி எவ, மழை ஒவ் வொரு மாதமும், மும்மாரி யாகப் பொழியும், அதனால், வளம் பெருகும். பெரு

கவே மக்கள், நல்லவையினின்றும் நீங்காமலும், அல்லவையிற் செல்லாமலும், ஆளுவோர் காவல் புரிவர். அக் காவலால், இம்மையில் இன்புறுதலே யன்றி, மறுமையிலும் இன்பத்தைச் சென்றுதுய்ப்பர். இவையே யன்றி, வீ டடையக் கருதுவார்க்கு மெய்ப்பொருளை யுணர்த்த வல்ல நூல்கள் அழியாது என்றும், தலைசிறந்து ஓங்கும், அதனால், மெய் யுணர்வை யறிவிக்க வல்ல குருபார் தோன்றுவர், தோன்றி, மெய் யுணர்வை யுண்டாக்கி, அழி வறுமின்பத்தை யளிப்பர். இவ் வாறு, வாழ்த்துதல் முதலிய வழிபாடு, அளித்தலால், வாழ்த்துதற் கெழுவா யென, வாழ்த்துதல் முதலிய வழிபாட்டைச் சிறப்பித்தன ரென்க.

இங்குப், 'பூ வலநும் பொய்கை படிந் தாடுகம்' என்பது அநுவர்த்திக்கப்பட் டுரை யுரைக்கப்பட்டது. அநுவர்த்தநம் = முன்னே யுள்ளதைப் பின்னே (பின் பாக்களிலே) கொண்டுவருதல்.

இப் பா, "வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல் லாமரன் நாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே" (திரு ஞாந சம்பந்த சுவாமிகள் பொது 1) என்பதை நினைப்பிக்கின்றது.

"நன்று பெரிதாகும்" (தொல் காப்பியம் உரியியல் 825-45) என்பதனால், 'நந்து' என்பதற்குப், 'பெரிதும், என வுரை வுரைக்கப்பட்டது. இனி மனதிலே கொள்ளும்படி விளக்க மாக என வுரைப்பினு மமையும்.

தங்கள் தவ வன்மையினால், கேட்டாரை பிணிக்கவும், கேளாரைக் கேட்பதற்கு விரும்பவும், செய்ய வல்லன வாக, உரைகளை யுரைப்பா ராக என்றபடி யாம். வீர சேகர ஞாந தேசிக மூர்த்தியெழுந்தருளி வந்தமையால், மறம் அஃகி, அறம் பெருகுதலால்,



வேதாந்த நூல்களைக் கற்பார் பல்குக என்பார், "வேதாந்த மெங்கும் ஓவுத லின்றி யென்றும் ஓங்குக" என்றன ரெனினு மாம். சாதன நான்கனையும் குறை வறப் பெற்றவரே யன்றிக், குறை வாகப் பெற்றவரு மென்பார், 'ஏவரும்' என்றனர்; குறை வுடையாரையும் அருளால் நிறை வுடைய ராக்குவர் ஆதலின். 'பூத்திட' என்பதிலுள்ள அகரம் வியங்கோள் விகுதி யாதலின், "பொலிவன வாகுக" என் றுரை யுரைக்கப்பட்டது. வாழ்த்துதற் கென்றே, 'நா' படைக்கப்பட்ட தென்பார், 'நாவினால் வாழ்த்த' என்றனர். இது, 'வாயே வாழ்த்து கண்டாய்' (திரு நாவுக் கரசு சுவாமிகள்) என்பதனாற் புல னாகும். அன்புகொண் டெழுவாய் என்பார், "நயந்து எழுவாய்" என்றனர்.

அன் பின்றிய செய்கை யொன்றும் பயன் தரா தாதலின், அங்ஙனங் கூறினர் என்க. 21

கோயிலூர் மரபு, திருப் பூ வணம்
**ஸ்ரீ காசிகாநந்த ஞாநாச்சாரிய சுவாமிகள்**
இயற்றிய, ஸ்ரீ வீர சேகர ஞாந தேசிக சுவாமிகள்
**திரு எம் பாவைக்கு,**
கோயிலூர் மரபு, திரு வை யாறு
**பண்டித - சித. சங்கத்து நாராயண சுவாமிகள் உரைத்த**
**மணி மாலை என்னும் உரை முற்றியது.**
பொங்கும் மங்களம் எங்கும் தங்குக.

உ
சிவமயம்.

# திருப் பள்ளி எழுச்சி.

## 'சிறு சுடர்' என்னு முரை.

---

1. சூரியன் கிழக்கினில் தோன்றினன் நன்றே
   தூயநல் மரைமலர் விரிந்தன துணைந்தே.
ஆரியன் திருஅடி பழிச்சினர் அடியார்
   அகிலமும் விளங்கவே பறைந்தன மறைகள்,
காரியம் காரணம் அன்றியின் றேனவே
   கண்டனர் களிப்புறக் காட்சிய தாகத்,
தேரியல் திருக்களர் திகழுநற் குருவே
   திருஅடி தாரப்பள்ளி எழுந்தரு ளாயே.

(நா-பொ-ரை) ஞாயிறு என்பது கிழக்குத் திசையில், கட் புலப்படும் எல்லாப் பொருள்களும் நன்கு புலப்படும்படி தோன்ற (வெளிப்பட) த் தொடங்கிற்று. மா சற்ற தாமரை மலர்களும், ஞாயி றாகிய தம் நாயகன் வரவினை யுணர்ந்து, விரைந்து மலரத் தொடங்கின. அடியவர்கள் பொழுது விடியு மென வுணர்ந்து, நீ ராடி வந்து பூசிக்கத் தக்கவ ராகிய தேவரீ ருடைய திரு வடிகளைப் புகழத் தொடங்கினர். வேதங்கள் அந்தணர்கள் ஓதுத லால், முழங்கத் தொடங்கின. (தேவார முதலிய பஞ்சப் புராணங் களும், திரு வாய் மொழி முதலிய ஆழ்வார்கள் திருப் பாசுரங் களும் ஆகிய தமிழ் மறைகள் ஓதுவார்களும், அறையர்களும், ஓதுதலாலும், அறைதலாலும், முழங்கத் தொடங்கின.) (இவ் வாறு ஞாயிறு தோன்றுத லாகிய காரண மாகத் தாமரை மலர்கள் மலர்தல் முதலிய காரியங்கள் நிகழத் தொடங்குவதால்) காரியங்க ளானவை யெல்லாமும், காரணங்க ளின்றி நிகழ மாட்டா வென்



பதைக் கண்கூடாக (பிரத்தியக்ஷமாக) மக்கள் களிப்போடு கண் டார்கள். (எங்கள் பிறவித் துன்பங்கள் நீங்குத லாகிய காரியம் நிகழ்வதற்கும், தேவரீ ருடைய திரு வடிகளைத் தொழுதல், சிறந்த முன்னிலை (காரணம்) ஆகு மன்றோ! ஆதலால், அன்புடன் வந்து தரிசித்தவர்களின் பிறவித் துன்பத்தை வே றறுக்க வல்ல தேவரீ ருடைய) திரு வடிகளைத் தொழும்படி (வந்தித்துச் சிந்தித்து வா யாரப் புகழும்படி) திரு வருள் புரிவதற்குத் தேவர்கள் பல இயங்கும் படியான செல்வ மலிந்த திருக் கள ரென்னுந் திரு வூரி லெழுந் தருளி யிருக்கின்ற வீர சேகர ஞான தேசிக மூர்த்தி யென வழங்கப் பெறுகின்ற நல்ல குருபரரே! திருப் பள்ளியினின்று மெழுந் தருள்வீ ராக. எ—று.

குருபரரைத் திருப் பள்ளியி னின்றும் எழுப்பி, அவருடைய திரு வடிகளை வழிபடும்படி அருளைப் பெற வேண்டு மென்ன விரை யும் வேட்கைப் பெருக்கால், தொடக்கச் செய்திகளை யெல்லாம், தோன்றினன், மலர்ந்தன, பழிச்சினர், முழங்கின என முடிந்த செய்திக ளாகக் கூறினர். இவ் வாறு கூறுதல்,

"கதிரவன் குணதிசைச் சிகரம் வந் தணைந்தான்" (தொண்ட ரடிப் பொடி யாழ்வார்) எனவும், "போற்றி யென் வாழ்முத லாகிய" பொருளே புலர்ந்தது" (மணி வாசகப் பெருமான்) எனவும், வரும் சான்றோர்கள் திருப் பாசுரங்களிலு முண்டு. இது, "வாராக் காலத்தும், வருஉங் காலத்தும், ஓராங்கு நிகழும் வினைச்சொற் கிளவி, யிறந்த காலத்துக் குறிப்பொடு கிளத்தல், விரைந்த பொருள என்மனார் புலவர்" (தொல்—சொல் 725 வினை இயல் 44) என்பதனு லமையு மென்க. सूर्यः (சூர்ய:) என்பது புல் லிங்க மாக (ஆண் பா லாக) ஆரிய மொழியில் வழங்குதலால், "வடசொற் கிளவி வட வெழுத் தொரீஇ, யெழுத்தொடு புணர்ந்த சொல்லா கும்மே" (884 எச்ச இயல் 5), "சிதைந்தன வரினு மியைந்தன வரையார்"

(தொல்-சொல். 884-6) என்பனவற்ருல், 'சூரியன்' என வட மொழி யாக்கினர். தமிழ் வடிவங் கொண்ட ஆரிய மொழியை வட மொழி யெனக் கொள்ளுதல், இய னூலார் துணிபு. தொல் காப்பியத்தில் ''தெய்வஞ் சுட்டிய பெயர் நிலைக் கிளவி ........ உயர்திணை மருங்கிற் பால்பிரிந் திசைக்கும்'' எனத் தெய்வங்கள் உயர் திணையி லடங்கும். அவைகளை யுணர்த்துஞ் சொற்களும், உயர் திணைச் சொற்க ளாகும். ஆகவே, அவை அவற்றிற்குரிய பால் வேறுபாடுகளையு முணர்த்து மெனக் குறிப்பித்தன ராயினும், பின்னர், ''கால முலகம்'' (540 கிளவி ஆக்கம் 57) என்னுஞ் சூத்திரத்தால், சில தெய்வஞ் சுட்டும் பெயர்கள் உயர் திணைச் சொற்க ளாயினும், அஃறிணையை யுணர்த்தும் சொற்கள் போல, இயங்கு மெனக் குறிப்பிடலால், ''சூரியன் தோன்றினன்'' என்பதற்கு, ஞாயிறு என்பது தோன்றத் தொடங்கிற்று என உரை யுரைக்கப்பட்டது என்க. सूर्यः (சூர்ய:) என்பது, "षूभू प्रेरणे" என்னும் தாதுவி னடியாகப் பிறந்த மொழி யாகும். ஆதலால், सुवति-प्रेरयति, व्यापारेषु ईति सूर्यः என்பது அதன் பொரு ளாகும். அதாவது, உயிர்களைத் தொழில் செய்யும்படி இயக்கு பவன் எவனே, அவன் சூரியன் எனப்படுவான் என்ப தாம். இவ் வாறு, பொரு ளிருத்த லால், தொடக்கத்திலேயே ஞாயிறு உயிர்களின் தொழில் நிகழ்ச்சிகளுக்கு ஓர் காரணம் என்பதை அடக்கி, 'சூரியன்' என்னு மப் பெயராலேயே குறிப்பித்துப், பின்னர், அவன் தோற்றத்தால் மலர்ந்தன, பழிச்சினர், முழங்கின எனப் பல தொழில்க ளாகிய காரியங்கள் நிகழத் தொடங்கின என்று காரண காரியத் தொடர்பினைச் சிறிது தோன்ற விளக்கிப், பின்னர்க், 'காரியம் காரண மன்றி யின் றெனவே கண்டனர் களிப்புற' என நன்கு விளங்க எடுத்துரைத்தனர். இக் கருத்து, காலை யரும்பிப் பக லெல்லாம் போ தாகி மாலை மலரும் மலர் போல விளக்கப்பட்டது. இது, பா வாசிரியரின் புலமைத் திறத்



தைப் புலப்படுத்துகின்றது என்ன லாம். இங்ஙனங் கூறுதல் கொண்டு, பிறவித் துன்பங்கள் நீங்குத லாகிய காரியம், குருபார் திரு வடி தொழுத லாகிய காரண மின்றி நடவாது என்பதை வலி யுறக் குறிப்பித்தன ரென்ப தாம். நூல்களால் மட்டு மன்றிக் காட்சி யளவையானு மறிந்தனர் என்பார், 'காட்சியதாக' என்றனர். ஆரியன் = பூசிக்கத் தக்கவன். ஆரியன் என்பதற்கு அடுத்த பத மாக, 'நின்' என்பதைச் சொல் லெச்ச மாக வருவித்து, 'ஆரிய னாகிய தேவரீ ருடைய திரு வடி' என உரை உரைக்கப்பட்டதென்க. ஆரியன் என்பது பூசிக்கத் தகுந்தவன், சிரேட்டன், தார்மீகன், (அறவோன்) என உயர் பொருள்களைக் குறிக்கு மென்பது, "आर्यस्तु मारिषः", "आर्या", "आर्यावर्तः पुण्यभूमिः" என்னும் அமர நிகண்டினு லறியப்படு மென்க.

'ஆரிய' என்னு மொழிக்கு, இவ் வுயர் பொரு ளிருத்தலாற்றான், "अनार्यजुष्टम्"(பகவற் கீதை) எனப் பகவான், "आर्य" என்பதற்கு மேலே நஞ்நு கொடுத்துத் தாழ்ந்தவர்களை யுணர்த்து மாறு செய்தனர். சான்றோர்கள் குருபாரை யுணர்த்துவ தாகவுங் கொண்டனர். आर्या (ஆர்யா) என்பது சிரேட்ட மான அம்பாளுக்குப் பெய ராகும். உமை யம்மையார் எல்லாத் தேவர்க ளாலும், மக்களாலும், பூசிக்கத் தக்கவ ளாதலாலும், அறம் வளர்த்தலால். அறம் வளர்த்தாள் என வழங்கப்படுதலாலும், அறவ வடிவ மாக இருத்தலாலும், ஆரியா (आर्या) என வழங்கப்படுகின்றனள் என்க. 'கிழக்கு' என்பது, கீழ்த் திசையினைக் குறிக்கின்றது. கீழ் கிழக்கு என்பன ஒரு பொருட் கிளவிக ளாகும். அது, செருநரைக் காணிற் சுமக்க, இறுவரை காணிற், ''கிழக்காந்தலை'' (வள்ளுவர் 41 காவம் அறிதல் 8) என்னு மிடத்தும், பிற விடத்தும், 'கீழ்' என்னும் பொருளில் வருதல் காண்க. ஞாயிறு கீ ழிருந்து எழுந் திக் காதலின், அத் திக்குக் கிழக்கு எனப்பட்டது என்க. ஞாயிறு கீ ழிருந் தெழுகின்றது, மே லிருந் திறங்குகின்றது

என்னுங் கருத் துண்மை, "படி ஞாயிறு" என்னும் வழக்கினால் வெளிப்படு மென்க. படி ஞாயிறு என்பது மேற்குத் திசை யாகும். ஞாயிறு மே லிருந்து கீழே படியுந் திசை யாதலின், அங்ஙனம் வழங்கப்படுகின்றது. மலை நாட்டினர், 'படி ஞாயி றென்பதை' படி ஞாறு என மரூஉச் சொல் லாக வழங்குகின்றனர். தாமரை மலர், தெய்வங்கள் வாழுந் திரு வுடைமையாலும், அந்தணர் சூடும் அணி மல ராக இருத்தலாலும், 'தூய நன் மலர்'' எனப்பட்டது. இம் மலர் இம் மேன்மை தாங்கியதா லன்றோ, "கடவுள் ஒண்பூ" (பெரும்பாண் ஆற்றுப் படை) எனச் சான்றோர்களும் கூறலாயினர் என்க.

துனைதல் = விரைதல். செல்வச் சிறப்பினை யுணர்த்துவதற்கு, "நடைத்தே ரோலி கறங்கு நாடு" (புறப் பொருள் வெண்பா மாலை) எனக் கூறுவது போல, "தேரியல் திருக் களர்" எனக் கூறப்பட்ட தென்க. அகர்த்த நிவிர்த்தி யாநந்தப் பிராப்தி வடிவ வீடு பே றளித்தலின், "நற் றரு" என்றனர். பிறவித் துன்பங்களை நீக்குதற் குரிய காரணங்கள் பலவற்றுள்ளும், அரு ளிறை வழிபாடு, மிக ஏற்ற முடைய தாகும்; ஆத்த முதலிய நான்கு பணிகளையும் புரிபவர். மல விக்ஷேபக் குற்றங்க ளறுதலையும், அவ ருளங் கனிந்து மெய்ம்மையினை மொழிந் தருள, அஞ்ஞானப் பகை யாகிய மெய்ஞ் ஞானத் தோற்றத்தினையும் பெறுதலின் என்க. இதனா லன்றோ, இப் பா வாசிரியர், தம் மாசிரியரை நோக்கித் தேவரீ ருடைய திரு வடிகளை வழிபடும்படி யருள்தர எழுந்தருள்வீராக என வேண்டின ரென்க.

அரு ளிறை = குருபரர். "கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவ, னற்றா டொழாஅ ரெனின்" (வள்ளுவர் 1-2) எனச் சான்றோர் கூறுதலால், வழிபாடு ஏற்ற முடைய தென்பதை நன் குணரலாம் என்க.





2. ஊறியல் உடல்களாம் மூன்றையும் தள்ளி
உன்உரு அறிவென உணர்த்திய நாளும்,
மாறியல் பின்றிய மக்களுக் கருளி
வல்இருள் அகற்றிய மாசறும் மணியே,
ஆறியல் பங்கமும் அளவிடற் கரியாய்
அருணனும் விசும்பிடை அடைந்தனன் நன்றே,
பாறியல் பின்றிய வீரசே கரனே
பதந்தரத் திருப்பள்ளி எழுந்தரு ளாயே.

(நா-பொ-ரை) வீடு பேறு பெறக் கருதி வழிபாடு செய்த லாகிய நல் வழியில் நிலைபெறும் இயல்பினை யுடைய மக்களிடத்து அருளைப் பெருக்கி, துன்பங்களைத் தரும் இயல்பினை யுடைய தூல சூக்கும காரண மென்னு மூன் றுடல்களையும், 'யான் எனது' என அபிமானிக்கும் மூ வித அபிமானங்களையும், நீக்கி, அந் நீக்குதல் வாயி லாக, "இல்லை இலங்கிற் றில்லை" என்னும் வடிவ வலிய அஞ்ஞான இருளை யொழிப்பதற்குத் தனித் தனி ஒவ்வொருவரை யும் நோக்கி, யுன் வடிவம் அறிவு வடிவ மாகும் எனத் திடம் பெற என்று முணர்த்தியருளுகின்ற குற்ற மற்ற மாணிக்கமே! ஆறு வகையான இயல்பினை உடைய வியாகரண முதலிய ஆறு அங்கங்களைக் கொண் டுணரத் தக்க, நாலு வேதங்களாலும், அறிதற் கரிய பெருமானே! ஆக்கத்தினை யளிக்கும் மைத்திரி முதலிய நறுங் குணங்களைக் கொண்ட வியல்பினை யுடைய வீர சேகர ஞான தேசிக மூர்த்தியே! செந் நிறம் வாய்ந்த சூரியனும் விளக்க மாக வான வீதியை யடைந்து விட்டான். ஆகையால், தேவரீ ருடைய திரு வடியைத் தொழும்படி அடியேங்கட் கருள் புரிய திருப் பள்ளி யினின்றும் எழுந்தருள்வீராக. எ—று.

ஊறு = துன்பம். உடல்கள் என்பது அவற்றி னமைந்த அபிமானங்களை யுணர்த்தின. சிறிதும் எஞ்சாதபடி நீக்கி யென் பார், 'தள்ளி' என்றனர். மெய்ப் பொருளை மறைத்தலினாலும்,

இன்ன தென துணியப்படாமையாலும், ‘இருள்’ எனவும், தத்துவ
ஞானத்தா லன்றி வே றெதனாலும் நீங்காமையின், ‘வல் லிருள்’
எனவும், அஞ்ஞானம் கூறப்பட்ட தென்க. மாறு இயல்பு, அல்
வழியிற் செல்லு மியல்பு. அல் வழி = தீய வழி என்பன ஒரு
பொருளன. மனம் இயல் பாகச் சத்துவ குண முடைய தாதலால்,
நல் வழியிற் செல்லுதல் வேண்டும். அது, இராசோ தமோ குணக்
கலப்பால், தீய வழியிற் செல்ல நிற்றல் பெரும் பான்மையினர்
தன்மை யாகும். அங்ஙனம் செல்லாது, சத்துவ குண மாகிய உரி
மைக் குணத்தால், அது வழிபா டாகிய நல் வழியிற் செல்ல நிற்பார்
என்பார், ‘மாறியல் பின்றிய மக்கள்’ என்றனர். மனம் அதற்
குரிய சத்துவ குணத்தோடு நிற்கச் செய்பவரே மக்க ளாவர்
என்பார், “மா றியல்பின்றியவர்க் கருளி” என்னாது, ‘மா றியல்பின்
றிய மக்களுக்கருளி” என்றனர். பாறியல் பின்றிய என்பது,
பாறு இயல்பு இன்றிய எனப் பிரியும். பாறுதல் = கெடுதல். கெடு
தலைத் தரு மியல்பு, அழுக் காறு முதலியன. அவ் வியல் பின்றிய
எனவே, ஆக்கத்தைத் தரும் இயல்பு எனப் பொருள் கொள்ளப்
பட்ட தென்க. நல் வியல்பு, ஆக்க இயல்பு என நேரே குறிப்பிடின்,
அவை மாறியல்புடனும், பாறியல்புடனும், கலந்திருக்கினு மிருக்குங்
கொல் என்னும் ஐய மகற்றுவதற்காக, “மாறியல் பின்றிய, பாறியல்
பின்றிய” என எதிர் மறை முகத்தா னுணர்த்தினர்; அவை
தனித்தே நிற்கு மெனத் தெளிவிக்க என்க.

குருபரரை இறைவனது அவதார மெனத் துணிந்தவ ராத
லின், அவ ரியல் பாக மெய் யுணர் வுடையவ ரென்பதையும், மாற்ற
மனங் கழிய நிற்பவ ரென்பதையும், விளக்க, நந்தா தொளிரும்
மா சற்ற மாணிக்க மென வுருவகித்து, ‘மாசறு மணியே’! எனவும்,
“ஆறியல் பங்கழ மளவிடற் கரியாய்” எனவும், விளித்தன ரென்க.
‘அகற்றிய’ என்பது செய்யிய என்னும் வாய்பாட்டு வினை யெச்சம்.
‘உணர்த்திய’ என்பது பெய ரெச்சம். ‘மூன்றையும்’ ‘அங்கமும்’



‘நாளும்’ என்பவற்றுள் உம்மைகள் முற் றும்மைக ளாகும். அங்க
மென்பது, அவற்றை யுடைய வேதங்களை யுணர்த்தின. அங்கி
யாகிய அவற்றை விட்டு நில்லாமையி னென்க. ‘அருணனும், என்
பதன்கண் ணுள்ள உம்மை உயர்வு சிறப் பும்மை யாகும்; பொழுதினை
யறிவித்தலிற் சிறந்த கருவி யாக இருத்தலின் என்க. ‘உன் னுரு’
என ஒருமை யாகவும், “மக்கள்” எனப் பன்மை யாகவும், கூறினர்.
இவை யிரண்டும், “ஏவ லிளையர் தாய் வயிறு” என்பது போல
அமைந்து பொரு ளுணர்த்தின என்க. 2

3. சீர்தரும் திருவருள் தனைப்பெறக் கருதிச்
சிறப்புறும் அடியவர் சங்கமொ டடைய,
ஏர்தரும் மறைகளின் முடிவினைக் கொள்ள
இங்குவந் தனைகொலென் றிசைத்திடத் தொழவும்,
ஆரிய அடிமலர் தலைமிசை வைத்தே
ஆவியொ டாக்கைகொண் டாட்கொளும் குருவே,
வீரசே கரதவ விடிந்தது பிறப்பு
விளிவுறத் தொழப்பள்ளி எழுந்தரு ளாயே.

(நா-பொ-ரை.) சாதனச் சிறப்பு வாய்ந்த அடியவர்கள்,
புதியவர் புதியவ ராக வந்து, பழ வடியார் திருக் கூட்டத்தைத்
துணை கொண்டு விழுமிய திரு வருளின் வாயி லாகத் துன்ப வொழி
வினைப் பெறுதல் கருதித் திரு முன்பிற் புக, அவர் வந்த குறிப்
பினைச் சொல்லாமலே, திரு முக நோக்கி நிற்றலால், தெரிந்து,
உயர் வுடைய மறைகளின் முடி வாகிய உபநிடதங்களினால் விளக்
கப்படும் மெய்ப் பொருளை யுணர்ந்து, ‘இன்னல் ஒழிய வந்தனையா’
என்று வந்த ஒவ் வொருவரையும் வினவ, அவர் வாயா லன்றி
வணக்கத்தால் தெரிவிக்கவும், அவர்களின் உடல் பொரு ளாவி
மூன்றனையும், தன்பால் அற்பிக்கச் செய்து, பூசிக்கத் தக்க திரு
வடித் தாமரை மலரை அவர்கள், தந் தந் தலையிற், சூடி வழிபடச்
செய்து, தம் மடியவ ராக்கி, அவர் பிறப்பினை யகற்றி, அழி வறு

மின்ப வடி வாக அவரை யாக்குகின்ற மெய்க் குருபரரே! வீர சேகர ஞான தேசிக மூர்த்தியே! அடியவர் தவப் பய னுக எழுந்தருளிய பெருமானே! இருள் விடிந்து விட்டது, அடியே னுடைய பிறப் பிருள் ஒழிவதற்கு, அடியேன் தேவரீ ருடைய திரு வடிகளைத் தொழுது வழிபடும்படி, திரு வருள் பாலிக்கத் திருப் பள்ளியினின் றும் எருந்தருள்வீராக. எ—று.

துன்ப வொழிவினைத் தரும் அருளாதலால், "சீர் தரும் அருள்" என்றனர். எல்லாவற்றையும் அறிந்துணர்த்தலின் 'எர் தரு மறை, என்றனர். 'ஆவியோடாக்கை' என்பதனால், ஒழிந்த 'பொருளும்' கொள்ளப்பட்டது; "ஒரு மொழி யொழிதன் னினங் கோளற் குரித்தே" (நன் னூல்) என்பதனு லென்க. புதிதாகச் செல்லும் அடியவர் செல்லும் விதமும், அவர் வினவப் பதி லுரைக் கும் விதமும், கோவிலூர் மரபு முதலிய சான்றோர்கள் மரபும் விளங்க, 'சிறப்புறு மடியவர் சங்கமோ டடைய'', 'இங்கு வந்தனை கொல் லென் றிசைத்திடத் தொழவும்' என்பவற்றல் விளக்குதல், அழகு பயந்து நிற்கின்ற தென்க. விளிவுறல்=ஒழிதல். 'ஆரிய அடி மலர்' என்பது பெய ரெச்சத் தொடர். ஆரிய என்பதற்கு நல் லிலக்கணங்கள் நிறைந்த எனப் பொருள் கூறினு மமையும். 3

4. திருவுறை கோவிலூர்த் திருப்பதி மருவிச்
சேகம்எலாம் புகழ்ந்திடத் திருக்களர் சென்று.
எருக்கணி பாரிசா தேசுரர் தமக்கும்
எங்கள்தா யாகிய அமிர்தவல் லிக்கும்,
பேருநகர் அமைத்தநல் பேருமையைப் பாடிப்
பேருந்தவப் பேரியரோ டடியனும் அடைந்தேன்.
திருக்களர் வீரசே கரகுரு தேவே
திருஅடி தரப்பள்ளி எழுந்தரு ளாயே.

(நா-பொ-ரை.) திருமக ளானவள், (தன் செல்வம் நல் வழிக் காகுதலால்) என்றுந் தங்கும்படியான கழனி நக ராகிய



கோயிலூரின்கண் உலக மெல்லாம் புகழும்படி அத்வைத பரமா சாரிய ராக எழுந்தருளி யிருந்து, திருக் கள ரென்னுந் திரு வூருக்கு (அடியவர் வேண்ட) எழுந்தருளி, அங்குத் திருக் கோயில் கொண் டெழுந்தருளியிருக்கும் வெள் ளெருக்கம் பூ மாலை புனைந்த பாரிசாதேசுரர் என் னுந் திருப் பெயர் பூண்ட சிவ பெரு மானுக் கும், எங்களுக் கெல்லாம் மெய்த் தா யாக விளங்கும் அமுத வல்லி யென்னுந் திருப்பெயர் பூண்ட உமை யம்மையாருக்கும், பெரிய கோயிலை யமைத்துக் (கும்பாபிடேகஞ் செய்து, திரு விழா நடத்தித் திருத் தேர் விழா வன்று, துருவாசர் திரு முன்பில், தேர் நின்றுவிட 'மகா தேவ' என் னுந் திரு மறையினைச் சொல்லி விதேக கைவல்லிய மடைந்த) பெரிய பெருமையினை யெடுத்து வா யாரப் பாடிக் கொண்டு, பெருந் தவச் செல்வர்க ளாகிய அடியவர்களுடன், ஒன்றுக்கும் பற்றாத அடியேனும் அடைந்தனன். திருக் கள ராண்ட வர் என வழங்கப் பெறும் வீர சேகர ஞான தேசிக மூர்த்தி யாகிய தேவே! தேவரீ ருடைய திரு வடியைத் தொழுவதற்கு அருளைப் பாலிக்கத், திருப் பள்ளியினின்றும் எழுந்தருள்வீராக. எ—று.

'திரு' என்பதற்கு, அறிவுச் செல்வம், முத்திச் செல்வம் தவச் செல்வ முதலிய உயர் செல்வங்கள் தங்கும் எனப் பொரு ளுரைப்பினும் பொருந்தும் – கோயிலூ ராகிய திருப் பதி என்க. திருப் பதி = திருத் தலம், கோயிலூரின்கண் பொன்னும், நெல்லும், தவமும், சிவமும், மன்னி மிளிர்தலால், "திரு வுறை கோயிலூர்த் திருப் பதி" என முன்னும் பின்னும், 'திரு' என்னு மடை கொடுத் தோதினர்; "வாழ் மயி லேறும் பெருமாள் மகிபதி" (இலக்கணக் கொத்து) என்புழிப் போல என்க. "जगत्" என்பது, 'சகம்' என வட மொழியாதலோடு அமை யாது, 'செகம்' என, முத லகா மெகா மாகத் திரிய நின்று, மக்களை யுணர்த்திற் றென்க. அக் காலத் திருந்த மக்களும், இனி வருங் காலத்து மக்களு மென்பார், "சேகமேலாம்" என்றனர்.

மூன் றுலகத்து முயர் திணை யெனப்பட்டா ரெல்லாரையுங் குறிக்கச் செக மெல்லா மென்றனர் எனினு மாம். சகம் என்பது தோன்றி யழிவது என்னும் பொருட்டாதலின், இவர் மாணவர்கள், தோன்றி யழியாத நிலைமையை யெய்தினமையால், தோன்றி யழியு நிலைமையை யுடையவ ரெல்லாம் நமக் கிந் நிலைமை யில்லையே யென புகழ்ந்தனர் என்பதைக் குறிக்க, செக மெலாம் புகழ்ந்திட என்றா ரெனலு மொன்று. **जगत्** (சகத்) என்பது, ‘**जनिप्रादुर्भावे**,’, ‘**गम्लृ गतौ**’ என்னு மிரு தாதுக்களி னடியாகப் பிறந்த சொல்லாதலின், தோன்றி யழிவது என்னும் பொருளைத் தருவ தாகு மென்க. பாரிசாதேசுரர் = பாரிசாத வன மாகிய திருக் களர் இறைவர். இறைவர் நல்லதி னலனையும், தீயதின் தீமையையுங் கருதாதவர். அதாவது, விருப்பு வெறுப் பற்றவ ரென்பார்; எருக்கணி பாரிசாதேசுரர்’ என்றனர். என்றது, அவர் தம்மை யடுத்த வரையும், விருப்பு வெறுப் பின்றி யமரச் செய்து, எப் பொழுது மிடும்பைக்கு ளாக்காமல், இன்புறுத்தவ ரென்பதைக் குறிப்பிடுதற் காகு மென்க? அதற் கேற்ப, “அமிர்த வல்லி” என்றனர். அழியாத நிலையினை யளிப்பவள் என்பது குறிப்பு. எனவே, திருக் களரி லெழுந் தருளியிருக்குஞ் சிவ பெருமானும், உமையம்மையாரும், தம்மை யண்மியவருக்கு, வேண்டல் வேண்டாமை என்னும் பிணியை வே ரறுத்து அழியா இன்ப மளிக்கச் செவ்வியுடையவ ராக இருப்பதை யறிந்து, அவர் என்று மகிழ்வுட னமரத் திருக் கோயி லமைத்தன ரெனக் கருதிக் கூறினர் என்பது பெறப்படுகின்ற தென்க. உற்ற நோய் நோன்றலும், உயிர்க் குறுகண் செய்யாமையு மாகிய தவம், “பெருந் தவம்” எனப்பட்டது என்க. அடியனும் என்றதி லும்மை இழிவைச் சிறப்பித்து, இறந்தது தழீஇ நின்றது. நகர் = கோயில்.





5. ஊரண நாபியை உவமைகொண் டிந்த
உலகினைத் தோற்றிநின் றழிதரச் செய்யும்,
ஆரணத் தமர்ந்திடும் ஐக்யமா வாக்கியம்
அவன்இவன் என்பதை அறிகெனத் தினமும்,
காரண போதம தளித்திடும் குருவே
கண்டுன தடிதொழத் தவத்தினர் புகுந்தார்,
ஏர்அண உருவனே எழில்பள்ளி இரிந்தே
எழில்வீர சேகர எழுந்தரு ளாயே.

(நா-பொ-ரை.) சிலந்திப் பூச்சியை ஒப்பாகக் கொண்டு, (சிலந்திப் பூச்சியை யொத்து, அபிந்ந நிமித்த உபாதான காரணமாக நின்று) இங்குத் தோன்றுகின்ற மண் ணுலக முதலிய உலகங்களை யுண்டாக்கி, அவைகள் நிலை பெறவும், அழியவும், செய்யத்தக்க (உலக கருத்த ராவதுடன்) சாம வேத சாந்தோக்கிய உபநிடதத்தில் விளங்குவ தான சீவேசுரர்கள் ஒன்று என்னக் கூறும் உபதேச மகா வாக்கியமான, ‘தத்துவமஸி’ என்னும் மகா வாக்கியம், (பாகத்தியாக இலக்கணையால்) ‘தத் பத இலக்கியார்த்தமான பிரமமே, துவம் பத இலக்கியார்த்த மாகிய கூடஸ்த னாகிய நீ யாவை’ என்பதை யுணர்த்துகின்றது. இஃ துண்மை யாகும். இதனை, நீ யறிந் தின்னல் ஒழிவா யா கென்று அடைந்த முமூட்சுக்களுக்கு அஞ்ஞான நீக்க மாகிய காரியத்தை யுண்டாக்குங் காரண மாகிய திடாபரோட்ச ஞானத்தை நாள் தோறும் கொடுக்கின்ற மெய்க் குருபரா! (கண்டவர்களுக்கு மனச் சாந்தியை யளிக்க வல்ல) அழகொடு மருவிய திரு மேனியை யுடையவரே! (திருக் களரி லெழுந்தருளியிருக்கும்) அழகிய வீர சேகர ஞான தேசிக மூர்த்தியே! தேவரீ ருடைய திரு வடிகளைக் கண் குளிரக் கண்டு வழிபடுவதற்கு, முற் றவத்தினால் முத்தி வேட்கையை யுடைய தவச் செல்வர்கள், தேவரீ ருடைய திரு மட வாயிலை விரைந்து

அணுகிநிற்கின்றார்கள். (அடியேனும் பூவோடு நா ரணுகினாற் போல அணுகிநிற்கின்றேன் எங்களுக்குத் திரு வடியைக் கண்டு தொழும் படி திரு வுளம்பற்றி) அழகிய திருப் பள்ளியினின்றும் நீங்கிக் காட்சி கொடுத்தருள்வீராக. எ—று.

'ஊர்ண நாபி' என்பது, 'ஊரண நாபி' எனத் திரிந்து வட மொழி யாயிற்று 'சிலந்தி பூச்சி' என்ப தாம். இப் பூச்சி யொன்றே நூலுக்கு, உடலால் உபா தானமாகியும், புத்தியால் நிமித்த மாகியு மிருப்பது போல, இவ் வுலகத் தோற்றத்திற்குக் காரணப் பிரம மாகிய இறைவன், மாயை யாகிய உபாதி பாகத்தால், உபா தான காரண மாகவும், சேதன பாகத்தால், நிமித்த காரண மாகவும், ஆவன் என்ப தாம். குரு காரணப் பிரமத்தின் அவதார மெனக் கொண்டதால், குருபரரைச் சகத் காரண ராகக் கொண்டு படைத் தளித் தழிக்க வல்லவ ரெனவும், அங்ஙனம் படைத்த உலகத்திடை யுயிர்கள் வினைக்கீடாக நின்று மெய் யெனக் கருதி மயங்கி யுழலும் படி திரோபவிக்க வல்லவ ரெனவும், பக்குவ முடைய உயிர்களைத் தத்துவ ஞானத்தைக் கொடுத்து அநுக்கிரகிக்க வல்லவ ரெனவும், கூறிய படி யாகும். செய்யும் அளித்திடும் என்னும் பெய ரெச்சங்கள், 'குரு' என்னும் பெயர் கொண்டன. 'உலகு' என்பது 'அழிவது' என்னும் பொருள் தருவ தாகும்; 'உல' என்னு முத னிலையடியாகத் தோன்றிய தாதலின். இது, 'அழிவது' என்னும் பொருள் தரு மென்பதை, 'உலவாக் கிழி' என்பதனு லறிக. அழகு, பிறர் நெஞ்சத்தைத் தன் வயப்படுத்துவதாதலின், மைத்திரி முதலிய குணங்களும், அழகு போல, பிறர் நெஞ்சத்தைத் தன் வயப்படுத்தி நன்மை யளித்தலின், 'எழில்' எனப்பட்டது. நன்மை யளியாத அழகுகள் அழ கெனப்படா. அது, "குஞ்சி யழகுங் கொடுந்தானைக் கோட்டழகும்" (நா லடியார்) என்பதனாற் புலனாகும் என்க. ஏர் = அழகு. இரிதல் = நீங்குதல்.





6. திங்களும் மழுங்கிடத் திநகரன் புகுந்தான்
 செப்பரும் சீவர்கள் திமிரம தொழிய,
மங்கள ஆரியன் எனநின்று பெயரும்
 வடிவுமி லாதசெம் சொருபம தருள,
மங்கையர் மகவுபொன் மயககம தொழித்தே
 மண்ணிடை மனிதனுய் வந்துநல் வளத்தால்,
பங்கமில் திருக்களர் உறைவீர குருவே
 பதம்தரத் திருப்பள்ளி எழுந்தரு ளாயே.

(நா-பொ-ரை.) (மக்களின் உள்ளத்திற்குக் களிப்பூட்டும் எனக் கருதும்) சந்திரனும் (சந்திரனைச் சூழ்ந்த மீ னினங்களும்) ஒளி மழுங்கிக் களிப் பூட்ட லின்றி மறையச் சூரியன் வெளிப் பட்டனன். மண் ணுலகத்தின்கண், மறை சொல்லும் பொருள் மனித வடிவந் தாங்கி வந்து நன்மையைத் தரும் ஆச்சாரியன் என்று புகழும்படி நிலைபெற்று, மனைவி, புதல்வர், பொருள் என்னு மிவை இன்பந் தருவன என மயங்கும் மயக்கத்தை நீக்கி, வேறு பெயரும் வடிவு மின்றி, இன்பமே வடி வாக இருக்கும் மாற்ற மனங் கழிய நின்ற தம் மெய்ச் சொருபத்தை ஒவ் வொரு பக்குவரும் அஞ்ஞான அந்தகார மழிவதற்குக் காரண மாக உணரும்படி உப தேசித்தருள, காற்று வளம், நீர் வளம், பூ வளம், நெல் வளம், முதலிய வளங்க ளெல்லாம் பெருகுதலால், அல்லல் இல்லாதபடி திகழ அருளே வடி வாகத் திருக் கள ரென்னும் திரு வூரி லெழுந் தருளி யிருக்கும் வீர சேகர ஞாந தேசிக மூர்த்தியே! அடியேனும் தேவரீ ருடைய திரு வடியைத் தொழுது பக்குவி யாகி மெய்ச் சொருபத்தை யுணர்ந்து இன்ன லற்று இன் புரு வாக அமருவதற் கருளைத் தாத் திருப் பள்ளியினின்றும் எழுந்தருள்வீராக. எ-று.

திங்களும் என்றதில், உம்மை உயர்வு குறித்து நின்றது. சீவர்கள் என்றது, பக்குவிக ளாகிய முத்தி வேட்கையினரைக்

குறித்து நின்றது. 'செப்பரும் செஞ் சொரூபம், எனக் கூட்டுக. துன்ப வடிவினது, நேர்மை யற்ற தாதலின், இன்ப வடி வாகிய ஆன்மா, சேஞ் சோநுபம்' எனப்பட்ட தென்க. இல்லக் கிழத்தி, காமக் கிழத்தி, காதற் பரத்தை, யெனப் பலர் மனைவிய ராக இருத் தலின், 'மங்கையர்' எனப் பன்மை யாக மொழிந்தனர். மகவு, பொன், என்பன பன்மை குறித்து நின்றன. "அல்லல் அரு ளாள் வார்க் கில்லை வளி வழங்கு, மல்லல் மா ஞாலங் கரி" (வள்ளுவர் 25 அரு ளுடைமை 5) "எவ் வழி நல்லவ ராடவர் அவ் வழி நல்லை வாழிய நிலனே" (புற நா னூறு) "வளி வலம் கோட்ப மாதிரங் கெழும்" (பெரும் பாண்) என்பன முதலியன கொண்டு 'நல் வளம்' என்பதற்கு அங்ஙனம் பொரு ளுரைக்கப்பட்ட தென்க. நல்லோ ருறைவதாற் பெருகும் வளம், தீய வழியிற், புகுத்தா தாதலால், 'நல் வளம்' எனப்பட்டது. இனி 'நல் வளம்' என்ப தற்குக், கல்வி வளம் எனப் பொரு ளுரைத்தலு மொன்று; 'கற்பக் கழி மட மஃகும்,' "கல்வியினூங் கில்லைச் சிற்றுயிர்க் குற்ற துணை" யென்ப வாகலின். 6

7\. தாரகம் ஆயதோர் பிரமத்தை அறிய
தயக்கம தின்றிய சமயமீ தேனவே,
நாரகம் கோண்டுனை நம்பிவந் தடைந்தேன்
நாயக வீரசே கரதவ நாயேற்,
காரண முடியினில் அமர்தரும் அதனை
அறிந்தினல் ஒழிவின்ப அடைவினை அடைய,
தாரணி தனில்ஒரு விரகினைத் தரவே
தயைஉறும் குருபள்ளி எழுந்தரு ளாயே.

(நா-பொ-ரை.) அஞ்ஞான அஞ்ஞான தத் காரியங்க ளனைத் திற்கும் அதிட்டான மாக இலகும் பிரமத்தை உள்ளபடி யுணரு வதற்காகப், பூர்வ புண்ணிய பரிபாகத்தா லெண்ண முண்டான



போதே' இது தடை யற்ற நல்ல பொழுதாகு மென்று கருதி, அன்பை யுள்ளத்திற் கொண்டு, தேவரீரே அதனை உணர்த்தத் தக்கவர், அருளா லெளிதி லுணர்த்துவர் என்று நம்பித் தேவரீரை வந் தடைந்தனன். வேத முடி வாகிய உபநிடதங்களா லறியும்படி திகழ்கின்ற அப் பிரத்திய கபின்ன பிரமத்தைத் திட மாக உணர்ந்து அநர்த்த நிவிர்த்தி ஆநந்த பிராப்தி வடிவ முத்தியை யடையும்படி நாயே னுகிய அடியேற்குப் பூ வுலகத்தில் ஒரு உபாயத்தை அருளு வதற்கு, தேவ நாயகரே! அடியவர் தவப் பய னுக எழுந்தருளிய வரே! தண் ணளியே வடி வாக அமர்ந்த குருபரா! வீர சேகர ஞான தேசிக மூர்த்தியே! திருப் பள்ளியினின்று மெழுந்தருள்வீராக. எ—று.

பூ வுலகத்தி லன்றி, வே றுலகத்தில் முத்தி சாதனங்களைப், பெறுதல் இயலாது. ஆதலால், இப் பூ வுலகத்தை யடைந்து, சாதனம் பெற விரும்பும் இப் போதே பெறு திருப்பின், இப் பிறவி தப்பினுல் எப் பிறவி வாய்க்குமோ அறியேன், ஆதலால், சாதன மருள்க என்பார். "தாரணி தனிலொரு விரகினைத் தாவே" என் றனர். 'நாயேன்' என்பதற் கேற்ப, "நாரகங் கோண்டுனை நம்பி வந் தடைந்தேன்" என்றனர். நா யன்ன தாதலின். தேவரீர் தக்க சாதனத்தைத் தரத் தக்கவர், அதற் கென்றே வந்தவர், வன் கண்ணரு மல்லீர' என்பார், 'நாயக தவ தயையுறுங் குரு' என விளித்தனர். நார் = அன்பு. 7

8\. நூல்பல கல்எனும் நோன்மைகொள் உரையை
நோக்கிலேன் சான்றவர் இனத்திரு எனும்ஓர்,
வாலிய உரையையும் மதித்திலன் ஐயோ
மாமறைப் பொருள்உறும் வழிஅறி வேனோ,
தாலம தனில்உயர் தருவீர குருவே
தத்துவம் தெரிவகை சார்ந்தெமக் கருளக்,
கோலிநல் வயல்வளம் கொழிதிருக் களர்ஊர்க்
குலபதி திருப்பள்ளி எழுந்தரு ளாயே.

(நா-பொ-ரை.) "நூல் பல கல்'' என அறிவு வன்மையைப் பயக்க வுரைத்த ஔவையாரது மெய் யுரையின் கருத்தை யுணர்ந்து மனத்தைத் தூய்மைப்படுத்தும் நூல் பலவற்றைக் கற்று, நல்லறிவு பெற்றேனு மில்லை, அவ் வாறு, கற் றறிவு பெற்றிலே னாயினும், "சான்றோ ரினத் திரு'' என அவ் வௌவையார் மனந் தூய்தாதற்கு வழி காட்டி யாக வுரைத்த திரு மொழியையும் நன் குணர்ந்து தூய்மைய ராகிய சான்றவர் கூட்டத்தை மருவித் தூய்மை பெற்றேனு மில்லை. ஐயகோ! இவ் வா றுள்ள யான் சிறந்த வேதங்களின் முடிவுக ளாகிய உப நிடதங்களா லுணர்த்தப் படும் மெய்ப் பொருளை யுணரும்படியான வழியை எங்ஙனம் அறிவேன், அறியேன். ஆதலால், மண் ணுலகத்தின்கண் உயர்ந்த கற்பக தருப் போல, வேண்டுவார்க்கு வேண்டுவன அளிக்கின்ற வீரசேகர ஞாந தேசிக மூர்த்தியே! வயல்கள் நாற் புறமுஞ் சூழ்ந்து நல்ல வளங்கள் பலவற்றைத் தருகின்ற திருக் கள ரென்னுந் திருவூரி லெழுந்தருளி யிருக்கின்ற குல பதியே! எங்கள்பால் திரு நோக்கம் வைத்து, இன்பமே யெந் நாளுந் துன்ப மில்லை யென் றிருமாந் திருக்குமா றருள்புரிவதற்குத் திருப் பள்ளியினின்றும் எழுந்தருள்வீராக. எ—று.

மாக் கோணலைத் தீர்க்கும் எற்று நூல் போல, உள்ளக் கோணலை அறிவின் வாயி லாகத் தீர்த்துத் தூய்மைப் படுத்துவது சாத்திரங்க ளாகும் என்பார், 'நூல்' எனவும், அவ் வாறு சிட்சிக்கின்ற நூல்கள் பலவற்றைப் பயின்ருற் ருன் அறிவு உரம் பெறுமென்பார், 'பல கல்' என்னவும் கூறினர். அவ் வாறு பயின்றிலராயினும், அறிவு நிரம்பி மனந் தூய ராகிய பெரியார் கூட்டத்தை மருவின், மருவினவரும் அறிவு நிரம்பப் பெற்று மனந் தூய ராவர் என்பார், "சான்ரோ ரினத்திரு'' என்னவும் கூறினர். இவ் விரு நூற்பா வுரைப் பொருள்களையும், உணர்ந்தே னில்லை யென்பார், 'நோக்கிலேன்', 'மதித்திலேன்', என்றனர். மனந் தூய்மை யாகப்



பெற்றவர்க்கே, நித்தியாநித்திய வத்து விவேக முதலிய சாதனங்கள் நிரம்ப மகா வாக்கிய சிரவணத்தால், தத்துவ ஞாந முதிக்கும், உதிக்கவே, உறுதி யெய்த லியலு மாதலின், அங்ஙன கூறின ரென்க.

பயில்வாரை நல் வழியில் செல்லவும், அல் வழியினின் றகலவுஞ் செய்வது (சிட்சிப்பது) 'சாத்திரம்' என்பதன் பொரு ளாகும். பயில்வாரை ஒழுங்கு படுத்துவது 'நூல்' என்பதன் பொரு ளாகும். ஆதலால், இரண்டு மொரு பொருளனவே யாகும் என்க.

பல மாணவரை ஒரு சேர வைத்து, உண்டி, உடை, உறைகள் முதலியன வழங்கி, மெய்ப் பொருளை யவர்க் கறிவித் திருந்தமையால், 'குலபதி' என்றனர். குலபதி = பல மாணவரைப் போற்று
பவர். 8

9. நங்கையர் நவில்மொழி நன்றெனக் கருதி
நாட்களை அவத்தினில் கழித்துற வாடி,
இங்கியல் வழிஅறி யாதுழல் வேனை
இறைவீர அடிசிரம் இருத்திக்கண் பார்த்தே,
பொங்கும்ஓர் இயல்பாகப் பொருந்துவ தான்மா
புறம்பிற பலஇயல் பொருந்துவ என்றே,
சங்கைய தறச்சொலி எனைத்தனி ஆளத்
தரைவரு வோய்பள்ளி எழுந்தரு ளாயே.

(நா-பொ-ரை.) அழகிற் சிறந்த பெண்கள் மொழிகின்ற மொழிகள் நன்மை பயக்கு மென எண்ணி அம் மொழி வயப்பட்டு வா ணாட்களை யெல்லாம் வீணாகக் கழியும்படி செய்து, அவர்களிடத்தில் காதல் பூண்டு, இவ் வுலகத்தில் நன்மையை யடையும் வழி தெரியாமல் சுழன்று திரியு மென்னைத் தேவரீ ருடைய திருவடிகளைச் சிரசிலே சூட்டி, அருள் விழியால் நோக்கி, எங்கும் எல்லாக் காலத்தும் எல்லாப் பொருளு மாக நிறைந்து ஒரு படித்

தாகப் பொருந்துவது ஆன்மா வாகும். வேறு அறியாப் பொரு ளாகவும், அறியும் பொரு ளாகவும், தோன்றும், அஞ்ஞானமும், அஞ்ஞான காரியங்களும், சத்து எனவும், அசத்து எனவும், கூறப் பல பொருந்தாத் தன்மைகளுடன் பொருந்தி நிற்பன வாகும். ஆதலால், அவை பாத யோக்கிய மானவை. ஆன்மா நித்திய மானது, எனச் சங்கைக ளறும்படிச் சுருதி யுத்தி அநுபவங்களால் எடுத்து விளக்கி அடியேனை யொப் பின்றி ஆளும் பொருட்டு, பூமியில் மனித வடிவங் கொண் டெழுந்தருளி வருதலை மேற் கொண்டவரே! தேவ நாயகரே! வீர சேகர ஞான தேசிக மூர்த் தியே! திருப் பள்ளி யினின்றும் எழுந்தருள்வீராக. எ—று.

இவ் வாசிரியர் இப் பிறவியில் இளமைத் துறவி யாயினும், முன் முன் பிறப்புகளில் மங்கையர் வயப்பட்டமையால், நல் வழி யறியாது பிறப்பிடை மாறி மாறிப் புகுந்து சுழல்கின்றேன் என் பார், "நங்கையர் ...... வழி யறியாதுழல்வேன்" என்றனர். இவ் வாறு, இளந் துறவ ராகிய துறை மங்களம் மாதவச் சிவப் பிரகாச சுவாமிகளும், "கனிமலைத் துவர்வாய்க் கோதையர்க் குருதும், கன்மனக் கோடியனுக் கேன்னி, துனிமலைப் பிறவி தவிர்த்தனை" (சோண சைல மாலை) எனக் கூறுதலும், பிற பெரி யார்கள் கூறுதலுங் காண்க. காமக் கள் ளாட் டயர்ந்து வழி அறி யா துழல்கின்றேன் என்பார், "நங்கையர் நவில் மொழி ...... கழித்துறவாடி" என்றனர். இது, "தையல் சொற் கேளேல்" (ஆத்தி சூடி) என்பதை நினைப்பூட்டுகின்ற தாகும். இப் பிறப்பி லன்றி, இனி வரும் பிறப்பி லாவது தண் ணளியால் வந்து ஆள்வார் என்னுந் துணிவுடைமையால், 'வந்தோய்' என்னாது, 'வருவோய்' என்றனர். 9



10. வேரியம் கமலமோ விரிந்தன இரவி
விரைந்தனன் பறவைகள் விரைந்தன விசும்பில்,
பேரியல் பிறப்பதை ஒழிப்பது போலப்
பிலத்தினில் சேன்றன நாகங்கள் எல்லாம்,
கூரிய நின்திரு வாக்கியம் கோண்டே
கோதறு தத்துவ மசிப்போருள் தேர்ந்தோம்,
நேரியல் திருக்களர் வீரசே கரனே
நின்பதம் தோழப்பள்ளி எழுந்தரு ளாயே.

(நா-பொ-ரை.) தேன் ஒழுகும் தாமரை மலர்கள் பூத்தன. சூரியன் விண் மேலே விரைந்து வந்தனன். பறவைக ளெல்லாம் பறந்தன. எல்லை யின்றி வருகின்ற பிறப்புக்களை யொழிப்பதற் கெண்ணுந் துறவிகள், அறவோர்கள் இல்லங்களில் உண வேற் றுண்டு தங்கள் ஒடுக்கங்களில் புகுந்து ஒடுங்கி யிருப்பது போல, பாம்புகள் எல்லாம் இரைகளைத் தேடி யுண்டு தாங்கள், தங்கள் அளைகளிற் புகுந் தொடுங்கின. எல்லாவற்றையும் நுனித் துண ரும்படியான தேவரீ ருடைய திரு வாசகங் கொண்டு (திரு வாச கத்தால்) அஞ்ஞான மாகிய சட சக்கையை யொழிக்க வல்ல தத்துவமசி மகா வாக்கியத்தின் பொருளை இலக்கணையா லறிந் தோம். நேர்மை பொருந்திய (மக்க ளுறைகின்ற) திருக் கள ரென்னுந் திரு வூரி லெழுந்தருளியிருக்கின்ற வீர சேகர ஞான தேசிக மூர்த்தியே! தேவரீ ருடைய திரு வடியை நன்றி மறவாது வழிபடத் திருப் பள்ளியினின்று மெழுந்தருள்வீராக. எ—று.

"பேரியல் பிறப்பு" என்பது, "பிறவிப் பெருங் கடல்" (வள்ளுவர் 1-10) என்பதை நினைப்புறுத்துகின்றது. 'ஒழிப்பது போல' என்னு மிடத்துத், 'துறவிகள்' என்பதும், பிறவும், இசை

யெச்ச மாக வருவிக்கப்பட்டன. முன் எல்லாப் பாக்களிலும் சொல் லெச்சம் இசை எச்சங்களால் வருவித் துரைக்கப்பட்டன இவை, பதப் பொழிப் பிவை, யென ஆய்ந்து பொருத்துத லறி வுடையார் கட னாகும்.

முன் எட்டுப் பாக்களால், முத்தி வேட்கையால் அதனைப் பெறுவதற் கெண்ணி, திரு வடி தொழுவதற் காகத் திருப் பள்ளி யினின்று மெழுந்தருள வேண்டி, ஈற்றுப் பாக்களி ரண்டினால், முத்தி சாதனம் குருபரர் திரு வருளாற் பெற்றமைக்கு நன்றி யறிவுறுத்தும் வாயி லாகத், திரு வடி தொழ வேண்டி திருப் பள்ளி எழுந்தருள வேண்டினா ரென்க. 10

திருப் பூ வணம் — வேதாந்த மடம்,

ஸ்ரீ காசிகாநந்த ஞாநாச்சார்ய சுவாமிகள் இயற்றிய

திருக் களர் - ஸ்ரீ வீர சேகர ஞாந தேசிகர்

திருப் பள்ளி எழுச்சிக்கு,

சிதம்பரம், கோ-சித-மடம், ஸ்ரீசிதம்பர ஞாந தேசிக சுவாமிகள் அவர்கள் மாணாக்கர், மதுரைத் தமிழ்ச் சங்கத்து, பண்டித, ஸ்ரீ நாராயண சுவாமிகள் இயற்றிய சிறு சுடர் என்னும் பொழிப் புரை நன் னாளில் முற்றுப் பெற்றது.

பொங்கும் மங்களம் எங்கும் தங்குக.



உ சிவ மயம்.

ஓம் தத் சத் பரப் பிரஹ்மணே நம:

திருக் களர், ஸ்ரீ வீர சேகர ஞாந தேசிகர் மீது

## திருப் பூ வணம்,

## காசிகாநந்த ஞாநாச்சார்ய ஸ்வாமிகள்

இயற்றிய

# திரு எம் பாவை - திருப் பள்ளி எழுச்சி.

என்னும் அருட் பா மாலை.

இவற்றிற்கு,

சித. நீல கண்ட சுவாமிகள் மாணாக்கர்

குடியாத்தம், வேதாந்தத் தமிழ் வாசக சாலை

போதகாச்சாரியர்,

ஸ்ரீ ஷண் முகாநந்த சுவாமிக ளவர்கள்

இயற்றிய

**பத வுரை.**

இது

மதுரை, V. சுப்புராயலு நாயுடு பிரஸில்

பதிப்பிக்கப்பட்டது.

 1957. [விலை பைசா 25

## உரைப் பாயிரம்.

1. திருக்களர்வாழ் தெருள்வீர சேகரனுஞ் சிவஞானச் செல்வன் பாத, உருக்கிளரும் உயர்ஞானத் தொண்மலரைத் தன்முடியி லொளியாய்க் கொண்டோன், தருக்கிளரும் பூவணத்துத் தனிக்காசி காநந்தத் தவத்தோன் செய்தான, மருக்கிளரும் பள்ளிமலர் வண்பாவைக் குருபரனே மதியால் ஆய்ந்தே.

2. இப்பாவிற் கெமதுதவத் தெழில்ஞானக் குருபரனு யியைந்தோன் இன்சொல், தப்பாநன் னுவுடையான் றமிழ் நாரா யணமுநிவன் தகையா லாய்ந்தே, துப்பாருஞ் சிறு சுடரைத் துரிசில்மணி மாலையொடுந் தூய்தாச் செய்தான், அப்பானல் லவனுரையை யடியாக்கிப் பதவுரையை யறைந் தே னம்மா.

### பாட்டு முதற் குறிப்பு அகராதி.



| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 1 | 13 | பழச்சு | பழிச்சு |
| 5 | 7 | மூட | மூட |
| 10 | 24 | ளியே | கிளியே |
| ,, | 26 | கிவிண் | விண் |
| 20 | 15 | போதவரும் | போதலரும் |
| ,, | 17 | சோதமயம் | சோதிமயம் |
| 22 | 3 | சம்பந்தா | சம்பந்தர் |
| 24 | 3 | தண்டைக | தண்டைக் |

உ

# திரு எம் பாவை.

## விநாயகர் வணக்கம்.

---

காப்பு.

செய்ய வீரநல் சேகரச் செம்மல்மேல்
உய்ய வேண்டி உஞற்றுநல் பாவைதான்
வைய கம்புகழ் வண்ணமு டிந்திட
ஐயன் மாமுகன் ஐங்கரன் போற்றுவாம்.

(பத வுரை) செய்ய-நேர்மை அமைந்த, நல்-நல்ல, வீரேசச் செம்மல் மேல்-வீர சேகர ஞான தேசிக மூர்த் தியின் மீது, (இயற்றப் புகுந்த யாமும், பயின்று பாடும் நன் மக்களும்), உய்ய வேண்டி-வீடுபேறு பெற விரும்பி, உஞற்று-செய்யப்படுகின்ற, நல் பாவை-திரு வெம் பாவை யென்னும் பழச்சு பாடல்க ளாகிய யாப்பானது, வையகம்-செந் நாப் புலவர்கள், புகழ் வண்ணம்-புகழும்படி, முடிந் திட-முடிவடையும் பொருட்டு, ஐங்கரன்-ஐந்து திருக் கரங்களை யுடையவரும், மா முகன்-யானை முக முடைய வரு மாகிய, ஐயன்-கணபதிப் பெருமானை, போற்றுவாம்-வழிபடுவோமாக. (எ-று)

நூல்

1. சீர்அமைந்த வானோர்கள் தேறும் விடியல்எனப்
பேர்அமைந்த மார்கழியில் பெட்புடனே வைகறையில்
நேர்அமைந்த சான்றோர்கள் நீர்படிந்து தூய்மையுடன்
தார்அமைந்த மாமலரைச் சாத்திப் பணிகின்றார்

கார்அமைந்த பூம்குழலாய் கண்விழியா தேஉறங்கல்
ஏர்அமையு மோவிழிப்பாய் எம்வீர சேகரனைப்
பார்அமைந்த சித்தியுறப் பாடித் தொழுதுநின்று
நார்அமைந்த நெஞ்சமுடன் நாம்தொழுவோம் எம்பாவாய்.

(ப—ரை.) சீர் அமைந்த - (இயல் பாக) விழுப்பம் பொருந்திய, வானோர்கள்-தேவர்கள், தேறும்-நனவு நிலையை அடையும், விடியல் என-விடியற் காலம் என, பேர் அமைந்த-பெயர் பெற்ற, மார்கழியில்-மார்கழித் திங்களில், நேர் அமைந்த-(ஒழுக்கத்தில்) நேர்மையான, சான்றோர்கள்-பெரியோர்கள், வைகறையில்-விடியற் பொழுதிலேயே, பெட்புடனே-விருப்பத்தோடு, நீர் படிந்து-நீரிலே மூழ்கி, தூய்மையுடன்-அகத் தூய்மையோடு, தார் அமைந்த-மாலை யாக அமைக்கப் பெறற, மா மலரை-சிறந்த மலர்களை, சாத்திப் பணிகின்றார்-அணிந்து வணங்குகின்றனர், கார் அமைந்த-மேகம் போன்ற, பூம் குழலாய்-பொலிவு தங்கிய கூந்தலை யுடையாளே, எம் பாவாய்-நோன்பு ஆற்றப் புகுந்த இளையவளே, கண் விழியாதே உறங்கல்-கண்ணைத் திற வாமல் இப்படித் தூங்குதல், ஏர் அமையுமோ-மேன்மை யைத் தருவதற்குக் காரணமாகப் பொருந்துமோ, விழிப் பாய்-கண்ணைத் திறந்து எழுக, எம் வீரசேகரனை-நம் தலை வராகிய வீர சேகர ஞான தேசிக மூர்த்தியை, நார் அமைந்த-அன்பு நிறைந்த, நெஞ்சமுடன்-மனத்துடனே, பார் அமைந்த-(அம் மூர்த்தியின்) பூ வுல கெங்கணும் நிறைந்த, சீர்த்தி-மிக்க புகழை, உறப் பாடி-முதலில் நன் றாகக் கூறி, தொழுது நின்று-கைகுவித்து வணங்கி நின்று, நாம்-(இருமை இன்பம் பெறும்) நாம், தொழுவோம்-வழி படுவோமாக. (எ—று)



2. ஆதித்தன் வானவெளி ஆர்வதன்முன் தூக்கம்அற்றுச்
சாதுவர்க்கம் யாறிழிந்து தட்பம்உற வேகுளித்துப்
பேதம்அற எங்கும் பிறங்கும்எழில் நல்குருவைச்
சோதிமறை யாவையுமே தொட்டறியா தேகலங்கும்
ஆதிநறும் கொன்றை அலர்துளபத் தார்அணிவோய்
பூதி புனையும்எங்கள் புண்ணியனே என்றுதொழ
மாதே வளருதியோ மாமுனிவீ ரேசனைநாம்
போதம் உறத்தொழுவோம் போதுகநீ எம்பாவாய்.

(ப—ரை) ஆதித்தன்-சூரியன், வான வெளி-ஆகாய வெளியில், ஆர்வதன் முன்-வருவதற்கு முன்னர், சாது வர்க்கம்-சாதுக்களின் கூட்டம், தூக்கம் அற்று-விழித் தெழுந்து, யாறு இழிந்து-யாற்றில் இறங்கி, தட்பம் உற-(உள்ளம் சத்துவ குணத்தோடு பொருந்தி) ஆறி நிற்க, குளித்து-நீ ராடி, எங்கும்-தேச கால வத்துக்கள் முழுவ திலும், பேத மற-வேற்றுமை யின்றி, பிறங்கும்-(சச்சிதா நந்த வடிவாக) விளங்கும், எழில்-மேன்மை தங்கிய, நல் குருவை-நல்ல வீர சேகர ஞான தேசிக மூர்த்தியை, சோதி-விளக்கம் அமைந்த, மறை யாவையும்-வேதங்கள் அனைத்தும், தொட்டு-இஃதெனச் சுட்டி, அறியாதே-அறிந்து கூறுவதற் கியலாது, கலங்கும்-கலங்கும்படியான, ஆதி-சர்வ காரண வடிவரே, நறும் கொன்றை அலர்-மண மிக்க கொன்றை மலரானும், துளபம்-துளபத்தாலும் (அமைந்த), தார் அணிவோய்-மாலைகளைத் தரித்த அரனும் அரியு மாக விளங்குபவரே, பூதி புனையும்-திரு நீற்றை அணி சாந்தமாய்ப் புனைந்த, புண்ணியனே-அற வாழி அந்தணரே, என்று-என்று (அழைத்துப்) புகழ்ந்து, தொழ-வழிபட்டு

நிற்க, மாதே-பெண்ணே, எம் பாவாய்-எங்கள் இளஞ்சிறுமியே, வளருதியோ-(நீ அச் செயலை யறியாமல்) தூங்குகின்றனையோ, மா-சிறந்த, முனி வீர சேகரனை-அவ் வீர சேகர ஞான தேசிக மூர்த்தியை, நாம் போதம் உற-நாம் மெய் யுணர் வடைவதற் பொருட்டு, தொழுவோம்-வழிபடுவதற்கு, போதுகம்-(நீ ராடச்) செல்வோம், நீ-நீ (வருவாயாக). (எ—று)

3. தெய்வத் திருமறைகள் சென்றறியா தோலமிடக்
கைவைத்த சான்றோர்கள் காலைநறும் நீர்ஆடி
மெய்வைத்த நம்குருவின் மேலாம் அடிபரவி
உய்வைத் தரத்துதிக்கும் ஓங்கும்ஒலி எங்கும்உற
மைவைத்த பூம்குழலாய் மற்றறியா தேதுயில்வாய்
செய்வித்தும் செம்சாலி தேங்கும் திருக்களரில்
பைவைக்கும் பாம்பணியும் பண்ணவன்வீ ரேசன்அடி
போய்வைக்கும் மாயைகெடப் போற்றுவம்வா எம் பாவாய்.

(ப—ரை.) தெய்வத் திரு மறைகள்-தெய்வத் தன்மையாகிய அழகு பொருந்திய வேதங்கள், சென்று-இறைவனைச் சுட்டிக் காட்டப் புகுந்து, அறியாது-சுட்டுதற்கியலாமல், ஓலமிட-அலறி நிற்ப, கைவைத்த-ஒழுக்கம் நிரம்பிய, சான்றோர்கள்-பெரியோர்கள், காலை-(விடியற்) காலத்தில், நீர் ஆடி-தண் ணீரிற் குளித்து, மெய்-மெய்மை யாகிய (அத்துவித) நிலையை, வைத்த-நிலை நாட்டிய, நம் குருவின்-நம் வீர சேகர ஞான தேசிக மூர்த்தியின், மேலாம் அடி-மேலான திரு வடிகளை, பரவி-வணங்கி, உய்வைத் தர-இன்ப வடிவாகத் தம்மை யுள்ளபடி உணருவதற்கு, துதிக்கும்-துதிக்கும்படியான, ஓங்கும் ஒலி-மிக்க முழக்கமானது, எங்கும் உற-எண் டிசையும் பரவி நிற்க, மை வைத்த-கரிய, பூம் குழலாய்-பொலி வமைந்த கூந்தலையுடையாளே, எம் பாவாய்-எங்கள் இளஞ் சிறுமியே, மற்று-அதனை, அறியாதே-உணராமல், துயில்வாய்-உறங்குகின்றனை, செய்-வயல்களிலே, வித்தும்-விதைத்த, செம சாலி-செந் நெற் பயிர்கள், தேங்கும்-செழித்து நிறைந்துள்ள, திருக் களரில்-திருக் கள ரென்னுந் திரு வூரில் எழுந்தருளியிருக்கின்ற, பை வைக்கும்-படத்துடன கூடிய, பாம்பு அணியும்-பாம்பை அணி கல னாகக் கொண்ட, பண்ணவன்-இறைவனாகிய, வீரேசன்-அவ் வீர சேகர ஞான தேசிக மூர்த்தியின், அடி-திரு வடிகளை, பொய் வைக்கும்-பொய்யாகப் பொருந்திய, மாயை-அஞ்ஞான மென்பது, கெட-(அடியோ)டழிய, போற்றுவம்-வழிபடுவதற்கு, வா-(நீ ராடப் போவோம்) வருவாயாக. (எ—று)



4. அஞ்ஞானம் மூட அலைந்து திரிந்திடும்என்
பொய்ஞ்ஞாலம் அத்தனையும் போக்க நினைந்தருளிச்
செம்ஞாயி றென்னத் திகழும் திருஅருளால்
பொய்ஞ்ஞாலம் வல்லே புரம்கொடுப்ப ஏற்றிவைத்த
மெய்ஞ்ஞாந நல்விளக்கை மீதோளிரச் செய்துமிக
எஞ்ஞாந மும்கடந்த இன்பவடி வத்தைஒளிர்
விஞ்ஞாநம் ஆக விளக்கியவீ ரேசன்சீர்
எஞ்ஞான்றும் நெஞ்சுருகி ஏத்துவம்வா எம்பாவாய்.

(ப—ரை) எம் பாவாய்-எங்கள் இளம் பருவப் பெண்ணே, அஞ்ஞானம்-அஞ்ஞானமாகிய (இருள்), மூட-மறைத்தலால், அலைந்து - (எல்லா உலகத்தின்கண்ணும்) மாறி,

மாறிப் புகுந்து, திரிந்திடும் என்-திரிகின்ற அடியேனுடைய, பொய்-பொய் யுணர்ச்சிகளாகிய, ஞாலம் அத்தனையும்-அத்யாசங்கள் எல்லாவற்றையும், போக்க-நீக்குவதற்கு, நினைந்தருளி-எண்ணி, செம் ஞாயிறு என்ன-இள வள ஞாயிறு போல, திகழும்-விளங்குகின்ற, திரு வருளால்-திரு வருட் பிரவாகத்தால், பொய் ஞானம்-அப் பொய் யுணர்ச்சிகள், வல்லே-விரைவில், புறங் கொடுப்ப - ஒழியும்படி, ஏற்றி வைத்த-(அடியேனுடைய உள்ளத்தில்) பற்றச் செய்த, மெய் ஞான-மெய் யுணர்வாகிய, நல் விளக்கை-நல்ல விளக்கினை, மிக மீது-மிக மேலாக, ஒளிரச் செய்து-சுடர் விட்டு ஒளிரும்படி செய்து, எஞ் ஞானமும் கடந்த-காட்சி முதலிய அளவைகளா லுண்டாகும் அறிவுகளுக்குப் புலனாகாத, இன்ப வடிவத்தை - இன்ப வடிவ மாகிய ஈசுர சாக்கியாகிய பிரமத்தை, ஒளிர் - சீவ சாக்கியாக விளங்குகின்ற, விஞ்ஞான மாக-பிரத்யகாத்மா வாக, விளக்கிய - விளங்கும்படி யுபதேசித்தருளிய, வீரேசன்-வீர சேகர ஞான தேசிக மூர்த்தியின், சீர் - விழுமிய பண்புகளை, நெஞ்சு உருகி-உள்ளம் கசிய, எஞ் ஞான்றும்-எப் பொழுதும், ஏத்துவம்-புகழுவோம், வா-(நீ ராட எழுந்து) வருதி. (எ-று)

5. அல்லல் பிறவி அறுப்பதற்கா உள்இருளை
நல்லகன்மம் ஒன்றும் நலியாது பூதஇருள்
வெல்லும் படையால் விலகுமோ எல்விளக்கால்
நில்லா தழியும் நிலைமைபோல் ஞானத்தால்
இல்லை எனச்செய்தல் ஏலும்எனத் தொண்டருக்கு
மெல்லக் கடைவிழியால் வீச்சித் துணர்வளிக்கும்
மல்லல் திருக்களர்எம் மாமுனிவீ ரேசன்சீர்
சொல்லித் துதிப்பத் துயில்எழுவாய் எம்பாவாய்.



(ப-ரை) எம் பாவாய்-எங்கள் பாவையே, அல்லல்-துன்ப வடிவ மாகிய, பிறவி-பிறவிப் பிணியை அளிக்க வல்ல யானென தென்னுந் தளையை, அறுப்பதற்கு-அறுத்து விடுதலை பெறுதற்கு(அஞ்ஞானமாகிய அக விருளை ஒழித்தல் வேண்டும்), உள் இருளை - அவ் வஞ்ஞானத்தை, நல்ல கன்மம்-புனிதமாகிய கருமங்களும், ஒன்றும்-சிறிதும், நலியாது-அழிப்பதற்கு வல்லவையாகமாட்டா, பூத இருள்-கண்ணிருளானது, வெல்லும் - வெற்றிபெறத் தக்க, படையால் - வாள் வேல் முதலிய ஆயுதங்களின் குத்து வெட்டு முதலிய தொழில்களால், விலகுமோ - நீங்குமோ, எல் விளக்கால்-ஞாயிற்றின் ஒளியால், நில்லாது-இருக்கும் இடம் தெரியாது, அழியும்-நீங்குகின்ற, நிலைமை போல்-தன்மையைப் போன்று, ஞானத்தால் - மெய் யுணர்வால், இல்லை என - (அவ் வஞ்ஞானத்தை முக் காலத்தும் உண்மையாக) இல்லை யென்னும்படி, செய்தல் ஏலும் என-செய்தற் கியலு மென்று திரு வுளத்திற் கொண்டு, தொண்டருக்கு-சதுட்ட சாதன சம்பன்னரிடத்து, கடை விழியால்-கடைக் கண்ணை, மெல்ல - திரு வருட் பார்வையோடு, வீச்சித்து - சாத்தி, உணர்வு அளிக்கும் - மெய் யுணர்வை அளித்தருளும், மல்லல்-வள மிக்க, திருக் களர்-திருக் களரென்னுந் திரு வூரில் எழுந்தருளியிருக்கும், எம் மாமுனி-எங்கள் குருபரர் ஆகிய, வீரேசன்-வீர சேகர ஞான தேசிக மூர்த்தியின், சீர் சொல்லி-சிறப்புக்களை யொவ்வொன்றாக எடுத்துச் சொல்லிப் புகழுதற்கு, துயில் எழுவாய்-உறக்கத் தினின்றும் எழுந்து, (நீ ராட) வருவாயாக. (எ-று)

6. சோதிமறை ஆறங்கம் தோன்றத் துருவிஎன்றும்
மேதை உறுவோர் வியப்பவீ ரேசகுருத்
தாதா உரைத்திடவே தத்துவம்எ லாம்கடந்து
நீதான் தனியாக நித்தம் இருப்பதனைப்
பேதாய்நீ கேட்டிருந்தும் பேதுற் றயர்ந்தனையே
பாதாளம் ஏழினுமோ மேலும் பறைசாற்றி
ஓதும் அவன்உரையை ஓம்பிப் பவம்துடைக்க
நாதன்அவன் நல்தாளை நாம்தொழுவோம் எம்பாவாய்.

(ப-ரை) எம் பாவாய்-எங்கள் பாவையே, சோதி-இறைவனால் அருளிச் செய்யப்பட்ட, மறை-இருக்காதி வேதங்களையும், அங்கம்-வியாகரண முதலிய அங்கங்களையும், தோன்ற-விளக்கமுற, துருவி-ஆராய்ந்து, தாதா-நம் ஞான தாதா வாகிய, வீரேச குரு-வீர சேகர ஞான தேசிக மூர்த்தியானவர், நீ தான்-(எம் பாவையாகிய) நீ, தத்துவமெலாம்-பிருதிவி முதலிய தத்துவங்கட் கெல்லாம், கடந்து-வேறாகி, நித்தம்-எந் நாளும், தனியாக இருப்பதனை-தனித்து இருக்கும் அத்வைத நிலையினை, மேதை உறுவோர்-அறிவுடையா ரெல்லாரும், வியப்ப-அதிசய முறும் வண்ணம், உரைத்திட-திரு வாய் மலர்ந்தருள, பேதாய் நீ-அறியாமை மிக்குடையாளாகிய நீ, கேட்டிருந்தும்-(அதனைக் காதாரக்) கேட்டும், பேது உற்று-மயக்கம் அடைந்து, அயர்ந்தனை - தூங்குகின்றனையே, பாதாளம் ஏழினுமோ-கீழுள்ள ஏழுலகங்களுக்கு மட்டுமோ, மேலும்-மேலுள்ள ஏழுலகங்கட்கும் எட்டும்படி, பறை சாற்றி - வேதாந்த டிண்டிமத்தை முழங்கும்படி செய்து, ஓதும் - ஞானோபதேசம் செய்யும், அவன் உரையை-அக் குரு மூர்த்தியின்



திரு வாய் மொழிகளை, பவம் துடைக்க-பிறப்பினை அகற்றி இன்ப வீடு எய்துவதற்கு, ஓம்பி-மறவாது உள்ளத் திருத்தி, நாதன் அவன்-(அம் மொழிப் பொருளையடைதற்கு) அத் தேசிகரின், நல் தாளை-திரு வடிகளை, நாம் தொழுவோம்-நாம் வழிபடுவதற்கு நீ ராடுவோம், வருக. (எ-று)

7. சாதநங்கள் நான்குநனி சார்ந்தவகை தான்அறிந்தே
வேதநம் செய்தளிக்கும் வித்தகனும் விரேச
நாதனைநம் ஆசை நவைமரத்தின் வேர்களைந்து
சோதனைகள் செய்துநலம் தோற்றுவித்த பெம்மானை
மாதம் பலவினும்சீர் மன்னிமிளிர் மார்கழியில்
வாதனைகள் இல்லாமல் வாய்ஆர வேபுகழ்ந்து
பேதம் கழன்ற பெரும்பொய்கை நீர்ஆடி
ஏதம் கழற்ற எழுந்திருப்பாய் எம்பாவாய்.

(ப-ரை) எம் பாவாய்-எங்கள் பாவையே, சாதனங்கள் நான்கு-(தன்னைச் சரணாகதியாக அடைந்த மாணவர்கட்கு) விவேகாதி நான்கு சாதனங்களும், நனி சார்ந்த வகை-அவதிவரையிலும் பொருந்திய இயல்பினை யறிந்து, சோதனைகள் செய்து-பரீக்ஷித்து, வேதநம் செய்து - அவர்களை அஞ்ஞானிகள் என்னும் நிலையினின்று மாற்றி மெய்ஞ்ஞானிகள் ஆக்குதற்கு, ஆசை-அவா வாகிய, நவை-குற்றம் பொருந்திய, மரத்தின் வேர்-மரத்தினது வேரை, களைந்து-பறித்து, அளிக்கும்-(தன் அண்மையிலே வைத்துக்) காக்கும், வித்தகனும் - தத்துவ ஞானி யாகிய, நம் வீரேச நாதனை-நம் வீர சேகர ஞான தேசிகத் தலைவரும், நலம்-

சீவன் முத்திப் பேரின்பத்தை, தோற்றுவித்த - நுகருமாறு செய்த, பெம்மானை - தலைவருமாகிய குருபரரை, மாதம் பலவினும் - திங்கள் பலவற்றுள்ளும், சீர் மன்னி மிளிர்-மிகச் சிறப்புப் பொருந்தி விளங்குகின்ற, மார்கழியில்-மார்கழித் திங்களில், வாதனைகள் - சோம்பல் முதலிய துன்ப சாதனங்களொன்றும், இல்லாமல் - இல்லாது, வாயாரவே புகழ்ந்து-வாய் பெற்றதனாலாய பயனை யடையப் புகழ்ந்து, பேதம் கழன்ற - (தேச கால வத்து) பரிச்சேதமின்றிய, பெரும் பொய்கை - பேரின்பப் பொய்கையில் பொங்கித் ததும்பும், நீர் ஆடி - நீரிற் குளித்து, ஏதம்-ஆதியாத்மீக மாதியாய முத் தாபங்களையும், கழற்ற - நீக்கி (இதுமாந்திருக்க), எழுந்திருப்பாய் - எழுந்து இப் பொய்கை நீரிற் படிவாயாக. (எ—று)

8. வேலைசூல வும்தடமண் விண்வாயு தீஅறல்விண்
கோவும் மதிஇரவி கூடும்உயிர் எட்டுவித
ஆலயங்கள் உள்ளே அமர்வீர சேகரனை
நால்ஆகும் வாயானும் நாரம் துயில்வோனும்
மேல்ஆன சூள்உறவு விண்டறியா தேகலங்கி
மால்ஆக நிற்க வளர்ஒளியை நல்குருவை
ஏலா இளம்கிளியே எய்யா துறங்கிடுதல்
சாலாது நீஎழுவாய் சாற்றுவம்நாம் எம்பாவாய்.

(ப—ரை.) எம் பாவாய் - எங்கள் பாவையே, இளம் கிளியே-இளங் கிளி போன்றவளே, ஏலா-அடியே, வேலை சூலவும்-கடல் சூழ்ந்த, தடம் மண்-விசால மாகிய பூமியும், விவிண்-ஆகாயமும், வாயு - காற்றும், தீ-நெருப்பும், அறல்-



நீரும், விண்-ஆகாயத்தில், கோவும் - சுழன்று திரிகின்ற, இரவி-ஞாயிறும், மதி-திங்களும், கூடும்-(அவ் வவ் உடம்புகளுடன்) கூடி நிற்கும், உயிர்-உயிர்களு மாகிய, எட்டு வித-எண் வகையாகிய, ஆலயங்க ளுள்ளே அமர்-ஆலயங்களுக்குள்ளே எழுந்தருளியிருக்கின்ற, வீர சேகரனை-இறைவனாகிய வீர சேகர ஞான தேசிகமூர்த்தியும், நால் ஆகும்-நான்காகிய, வாயானும்-முகங்களை யுடைய பிரமதேவனும், நாரம்-திருப் பாற் கடலில், துயில்வோனும்-பள்ளி கொண்ட திருமாலும், மேல் ஆன-உயர்ந்த, சூள் உறவு-நெடு மொழியினை, விண்டு-கூறி, அறியாதே-(அடி முடிகளைக்) காண முடியாமல், கலங்கி-(நெஞ்சம்) நொந்து, மால் ஆக நிற்க-மயங்கி நிற்கும்படி, வளர் ஒளியை-(ஒளிப் பிளம்பாக) வளர்ந்து நின்ற சிவ பெருமானுமாகிய, நல் குருவை-நல்ல குருபரரை, எய்யாது - (வழிபடுதலை) மறந்து, உறங்கிடுதல் - தூங்குதல், சாலாது-தக்கதன்றாகும், நாம் சாற்றுவம்-நாம் (அப் பெருமானை நினைந்து வணங்கி) வாழ்த்துதற்கு நீ ராடப் போவோம், நீ எழுவாய்-நீ எழுவாயாக. (எ—று)

9. பொன்னும் பிறஎவையும் போள்என் றருள்வதுடன்
தன்னையுமே சார்வார் தமக்களிக்க வல்லவனை
அன்னைஎனத் தொண்டர்தமை ஆதரிக்கும் தண்அளி
மன்னவனைச் சங்கரனும் மாதவனை ஒப்பானைத் [கோள்
தேன்னைபலா கந்தி செழிக்கும் திருக்களரில்
பின்னம்அற நிற்கும் பெரியோனை வீரேசத்
தேன்னவனை நல்குருவைத் தேன்கழநி ஊர்ப்பதியை
வன்னக் கரும்குயிலே வாழ்த்துவம்வா எம்பாவாய்.

(ப-ரை.) வன்ன-அழகிய, கருமை குயிலே - கரிய குயில் போலும் மொழியை யுடையாளே, எம் பாவாய்-எங்கள் பாவையே, சார்வார்தமக்கு-(தன்னை) அண்டியவர் விரும்பும், பொன்னும்-பொன்னையும், பிற எவையும்-மற்றுமுள்ள பேறுகளையும், பொள் என்று-தாமத மின்றி, அருள் வதுடன்-கொடுப்பதோடு, தன்னையும்-அவ ரவருடைய நிச வடிவினையும், அளிக்க வல்லவரும் - காட்ட வல்லவரும், அன்னை யென-தாய் போல, தொண்டர்களை-அடியவர்களை, ஆதரிக்கும் - காப்பாற்றுகின்ற, தண் ணளி கொள்-கருணை நிறைந்த, மன்னவனை - தலைவரும், சங்கரனும் மாதவனை ஒப்பானை - ஆதி சங்கர பகவற் பாதாள் போன்றவரும், தென்னை கந்தி-தென்னை பாக்கு முதலிய புற்களும், பலா முதலிய மரங்களும், செழிக்கும்-செழித்து உயரும், பலா-திருக் களரில்-திருக் களர் என்னுந் திரு வூரின்கண்ணே, பின்னம் அற-வேற்றுமை யின்றி(யாவரும் வந்து வணங்கும் படி), நிற்கும்-எழுந்தருளியிருக்கும், பெரியோனை - மேலான வரும், நல் குருவை-ஞானசாரியரும், தென்-அழகிய, கழனி யூர்ப் பதியை-கோயிலூ ரென்னுந் திரு ஆருக்குத் தலைவரு மாகிய, வீரேசத் தென்னவனை-தென் னாடுடைய சிவபெருமானாகிய வீர சேகர ஞான தேசிக மூர்த்தியை, வாழ்த்துவம்-முக் கரண வழிபாடு செய்யும் பொருட்டு, வா-(நீ நீ ராட) வருவாயாக. (எ—று)

10\. தண்ணீரும் காவேரி தான்எனவே சான்றோர்கள்
உண்ணீர்மை கோண்டுபுனல் ஓயா அதின்மூழ்கி
மண்ஆர் அமுத வளம்ஆர் திருக்களரில்
த்ண்ஆர் அளிவீர சேகரன்சீர்த் தாள்பணிந்தார்



உண்நோய்கள் எல்லாம் ஒழியவகை செய்வதற்கிங்
கேண்ணுது வாளா எவனே துயிலுகின்றாய்
பண்ஆர் மடமோழியே பாரில் அவன்அருளாம்
தெண்ணீர் படிவோம் தேளிந்தெழுவாய் எம்பாவாய்.

(ப-ரை) பண் ஆர்-இசை யமைந்த, மட மொழியே-இளஞ் சொற்களை யுடையாளே, எம் பாவாய்-எங்கள் பாவையே, தண் ணீரும் - குளிர்ச்சி மிக்க புண்ணிய தீர்த்தமும், காவேரியே-காவேரி யாற்றின் நீரேயாகும், என-என்று (சிறப்பித்துச் சொல்லப்படுவதனால்), உள் நீர்மை கொண்டு-அவ் வாற்றின் அகத்தே உள்ள தன்மையை நோக்கி அறிந்து, புனல் ஓயா-நீர் வற்றுதல் அறியாத, அதின்-அதன்கண், சான்றோர்கள் - (அறிவால் அமைந்த) பெரியோர்கள், மூழ்கி-குளித்து, உள் - மனத்தே (தோன்றி துன்புறுத்துகின்ற), நோய்கள் எல்லாம்-(காம வெகுளி மயக்க மாகிய) பிணிகள் அனைத்தும், ஒழிய வகை செய்வதற்கு-நீங்கும்படி செய்வதற் காக, மண் ஆர் அமுதம் - (இவ் வுலகத்தின்கண்) மண் அமுதம் என்று சொல்லத் தக்க, வளம் ஆர்-நீர் வளம் நெல் வளம் முதலிய வள மிக்க, திருக் களரில்-திருக்கள ரென்னுந் திரு வூரில் எழுந்தருளியிருக்கின்ற, தண் ஆர்-குளிர்ச்சி மிக்க, அளி-கருணையோடு கூடிய, வீர சேகரன்-வீர சேகர ஞாந தேசிக மூர்த்தியினது, சீர்-சிறந்த, தாள்-திருவடிகளை, பணிந் தார்-வணங்கினர், எண்ணாது-(அதனை நீ அறிந்துங் கூட நெஞ்சத்தில்) எண்ணுத லின்றி, வாளா-கவலை யின்றி, துயில் கின்றாய் - தூங்குகின்றாய், எவன்-என்ன காரணம், அவன் அருளாம் தெள் நீர் - அவன் திருவருட் பெருக் காகிய தெளிந்த நீரின்கண்ணே, படிவோம் - மூழ்கும் வண்ணம்,

தெளிந்து-உறக்கம் நீங்கப் பெற்று, எழுவாய் - (காவிரியில் நீ ராடுதற்கு) எழுவாயாக. (எ-று.)

11. கொள்ளைகொள நெஞ்சமதைக் கூடும்அழ காரினும்என்
கிள்ளைஎனச் சொற்கள் கிளக்கினும்என் நல்களர்வாழ்
வள்ளலைநம் வீரேச மாமணியைத் தான்பரவி
ஒள்ளியசீர் அன்புடனே உற்ற அடியவர்க்குப்
பொள்ளல்உடல் மூன்றுப் பொருந்தும்இரு பத்தேழும்
எள்ளும்வகை யான்என் றிறுகும் முடிச்சவிழத்
தெள்ளுபுலக் கைகொடுத்த தேவனைவாழ்த் தாதொழியின்
கொள்ளும் துயில்நீங்கிக் கோதாய்வாழ்த் தெம்பாவாய்.

(ப-ரை) எம் பாவாய்-எங்கள் பாவையே, கோதாய்-மலர் மாலை போன்றவளே, நல் களர் வாழ் - வள மிக்க திரு களர் என்னுந் திரு வூரில் எழுந்தருளியிருக்கின்ற, நம் வீரேச வள்ளலை-நம் ஞாந வள்ள லாகிய வீர சேகர ஞாந தேசிகர் என்னுந் திருப் பெயர் உடையவரும், மா மணியை - சிறந்த மாணிக்கம் போன்றவரும், ஒள்ளிய-மாசில்லாத, சீர்-விழுமிய, அன்புடனே-பக்தியோடு, பரவி-துதித்து, உற்ற - அடைந்த, அடியவர்க்கு-அடியார்கட்கு, பொள்ளல் - (ஒன்பது) துவாரங்களை யுடைய, உடல்-(தூல உடல் முதலிய மூன்) றுடல்களாக, பொருந்தும்-அமைந்த, இரு பத்து எழும்-இரு பத் தேழு தத்துவங்களையும், எள்ளு வகை-(பெரியோர்கள்) இகழும் வண்ணம், யான் என் று-யான் என்று அபிமானிக்கும்படியான, இறுகும் - கடின மாகிய, முடிச்சு-அகங்காரக் கிரந்தியானது, அவிழ-அவிழ்ந்து ஒழி யும்பொருட்டு, தெள்ளுபுலம்-திட அபரோக்ஷ ஞான மாகிய,



கை கொடுத்து-திருக் கரத்தைக் கொடுத்தருளிய, தேவனை-குரு தேவரும் ஆகிய திருக் களர் ஆண்டவரை, வாழ்த்தாது ஒழியின்-புகழாதிருந்தால், நெஞ்சமதை - (ஆடவ ருடைய) நெஞ்சங்களை யெல்லாம், கொள்ளை கொள-கவரும்படியாக, கூடும்-அமைந்த, அழகு ஆரினும்-உட லழகைப் பொருந்தினும், கிள்ளையென-கிளி போல, சொற்கள் கிளக்கினும்-மொழிகளை மொழிந்தாலும், என்-(அவற்றாற் பெறும் பயன்) யாது, (சிறந்த பயன் சிறிது மில்லை ஆதலால்) சொல்லும்-(விரும்பி) மேற் கொள்ளுகின்ற, துயில் நீங்கி, தூக்கத்தினின் றும் விழித்து, வாழ்த்து - அக் குருபரரை வாழ்த்தும் பொருட்டு (நீ ராட எழுந்து வருவாயாக.) (எ-று)

12. மாகாயம் மூன்றுமே மாண்டொழியும் என்றுசொலி
ஆகாய ரூபம்என ஆக்கியவீ ரேசன்சீர்
வாகாய நாம்பாடி வாழ்த்துதோறும் வாழ்த்துதோறும்
போகாய கண்களின்நீர் பொள்என்று போய்உகவே
தீகாயும் நல்மெழுகு போலமநம் சேர்ந்துருகும்
ஓகோ உரைநாவும் உள்ளும் உடம்பும்எலாம்
பாகாம் எனஇனிக்கும் பன்னும்அவன் சீர்பாடச்
சேகோயும் நீர்த்தடத்தில் சென்றுடாய் எம்பாவாய்.

(ப-ரை.) எம் பாவாய்-எங்கள் பாவையே, மா-அஞ் ஞானமாகிய காரண வுடலும், மூன்றும்-(அதன் காரியமாகிய பரு வுடல், நுண் ணுடல்களும் ஆகிய) மூன் றுடல்களும், மாண்டு-அழிந்து, ஒழியும்-(பின் பெயருந் தோன்றுது) நீங்கும், என்று சொலி-என்று (அவைகளின் நிலையாமையை முன்னர்) உபதேசித்து, ஆகாய ரூபன் என - பின்னர் நீ

ஆகாயம் போன்று வியாபக வடிவன் என் றுபதேசித்து, ஆக்கிய - (சச்சிதானந்த பிரம வடிவம்) ஆக்கிய, வீரேசன்- வீர சேகர ஞான தேசிக மூர்த்தியினது, சீர்-சிறப்பினை, நாம் வாகு ஆகப் பாடி-நாம் அழகாகப் பாடி, போகு ஆய- நீண்ட அழகிய-கண்களின்-கண்களினின் றும், நீர் போய்- நீர் வெளிப்பட்டு, பொள் என்று உக-இடைவிடாது ஒழுக, தீ காயும் - நெருப்பிற் காய்ந்த, நல் மெழுகு போல-நல்ல மெழுகைப் போன்று, மனம் சோர்ந்து - மனம் முழுதும், உருகும்-உருகும்படி, (வாழ்த்தும் போ தெல்லாம்) ஓகோ- ஆச்சரியம், உரை நாவும்-சொல்லுகின்ற நாவும், உள்ளும்- மனமும், உடம்பும் எலாம்-உடம்பு மாகிய முக் கரணங்களும் மகிழ்ச்சி யடையும்படி, பாகு ஆம் என-(வெல்லப்) பாகு போல, இனிக்கும் - இனித்து இன்பத்தை ஊட்டும், (ஆகையால்) பன்னும்-(யாவராலும் சிறப்பித்துக்) கூறப்படு கின்ற, அவன்-அப் பெருமானுடைய, சீர் பாட-சிறப்பினை எடுத் துரைப்பதற்கு, சேகு ஓயும்-குற்ற மற்ற, நீர்த் தடத் தில்-இத் தடாக நீரிலே, சென்று-போய், ஆடாய்-நீ ராடுதற்கு எழுந்து வருவாயாக. (எ—று)

13. பெண்உருவை நெஞ்சில் பிறங்கவிடான் வீரகுரு
நண்ணும் உமைஉருவை நன்குமநம் நீங்கவிடான்
கண்ணும் கருத்துமாக் கோண்டவனைப் பாடிஅன்பர்
உண்நெக்கு நிற்பவிழி யோடுநீர் தாரைகோளக்
கண்ணைத் துயின்றவமே காலத்தை போக்குகின்றாய்
கண்ணிற் கினியான் கழலின் புகழ்பாடின்
எண்ணில் பிறவிவரா வந்தாலும் எய்ப்படையோம்
அண்ணல் அவன்புகழை ஆதரித்தோ தெம்பாவாய்.



(ப-ரை) எம் பாவாய் - எங்கள் பாவையே, பெண் உருவை-மகளிரது வடிவத்தை, நெஞ்சில்-உள்ளத்தில், பிறங்க விடான்-விளங்கும்படி எண்ணுதவரும், நண்ணும்-(சிவபிரா னது பக்கத்திலே) தங்கிய, உமை உருவை-உமா தேவியின் திரு வடிவை, நன்கு-சாந்த விருத்தியோடு கூடிய, மனம்- மனத்தினின்றும், நீங்கவிடான - எண்ணுபவரும் ஆகிய, அவனை-அவ் வீர சேகர ஞாந தேசிக மூர்த்தியை, கண் ணும-கண்ணுற் காணத் தக்க பொருளும், கருத்தும்-உள்ளத் தால் உள்ளத் தக்க பொருளும், ஆக கொண்டு- (இப் பெருமானே அன்றி வேறில்லை) யெனக் கொண்டு, பாடி-வா யாரப் புகழ்ந்து, அன்பர்-அடியார்கள், விழியோடு- கண்களினின்றும், நீர் தாரை கொள-தண் ணீர் தாரை யாக ஒழுகும்படி, உள் நெக்கு-மனம் நெகிழ்ந்து, நிற்ப-(தம் வயம் இழந்து) நிற்க, கண்ணைத் துயின்று-நீ கண்களைத் திறவாமல், அவமே - வீணாக, காலத்தை போக்குகின்றாய்- காலத்தைக் கழிக்கின்றாய். கண்ணிற்கு - எண்ணுவதற்கு, இனியான்- எளிதாக வடி வுடன் எழுந் தருளிய அக் குருபரனுடைய, கழலின் புகழ் - திரு வடியின் புகழை, பாடின்-(புகழ்ந்து) பாடினால், எண் இல்-அளவிடற்கு அரிய, பிறவி வரா- பிறவிகள் வரமாட்டா, வந்தாலும்-அப் பிறவிகள் வந்தாலும், எய்ப்பு அடையோம்-துன்பங்களை நுகரமாட்டோம், (ஆகை யால்) அண்ணல்-பெருமையிற் சிறந்த, அவன் புகழை-அக் குருபரரின் திரு வடிப் புகழை, ஆதரித்து-விரும்பி, ஓது- கூறும்பொருட்டு (நீ ராட எழுவாயாக) (எ—று)

14. வண்ணக் கிளிமொழியார் மாமைஅழ கெப்போதும்
உண்நெக் குருகியிட ஒவியத்தும் பாராதான்
எண்ணின் நமைஅவன்தான் என்றுகோளான் என்றெண்
கண்ணைப் பிசைந்து கவலைமேல் கொள்ளாதே [ணிக்

அண்ணல் பரசிவன்போல் அன்பர்க் கெளியவன்காண்
தண்ணளியால் வந்ததிருத் தாய்மார்ககும் மெய்ஞ்ஞாநக்
கண்ணளித்து வீடருளும் கண்ணியம்கோள் வீரேசப்
புண்ணியனை நீஅணுகிப் போற்றிடுவாய் எம்பாவாய்.

(ப-ரை) எம் பாவாய்-எங்கள் பாவையே, அவன்-வீர சேகர ஞாந சேகர மூர்த்தியானவர், வண்ண-அழகிய, கிளி மொழியார்-கிளி போன்ற மொழிகளைக் கூறுகின்ற மகளிரின், மா மை அழகு-மேனி யழகினை, எப்போதும்-எஞ் ஞான்றும், உள் நெக்கு-மனம் கட்டுவிட்டு, உருகிட-உருகும்படி, ஓவியத்தும்-சித்திரத்திலும் கூட, பாராதான்-பார்க்காதவர், (ஆகையால்) எண்ணின்-(இந் நிலையை) நோக்கினல், நமை-(மகளிர் வடிவங் கொண்ட) நம்மை, ஏன்று கொளான்-எங்ஙன் ஏற்று அருள் புரிவான், என்று எண்ணி-(அருள் புரியமாட்டான்) என்று நினைந்து, கண்ணைப் பிசைந்து-கண்ணைக் கசக்கிக் கொண்டு, மேல்-இனி, கவலை கொள்ளாதே - கவலைப்படாதே, அண்ணல் - பெருமையிற் சிறந்த அவர், பரம சிவன் போல்-சிவபிரானைப் போன்று, அன்பர்க்கு-அடியவர்கட்கு, எளியவன்-எளியவராகி நின்று அருள் செய்யத் தக்கவர், (ஆகலால்) வந்த-(தந்தையாகப் பாவித்து) வந்த, திருத் தாய்மார்க்கும்-பக்தி நெறியில் ஒழுகும் மகளிருக்கும், தண்ணளியால்-திரு வருட் பெருக்கால், மெஞ் ஞானக் கண் அளித்து-மெய் யுணர் வாகிய பார்வையைக் கொடுத்து வீடுபேற்றை யுதவும், கண்ணியம் கொள்-மேன்மை பொருந்திய, வீரேசப் புண்ணியனை-(மக்கள் செய் துள்ள) புண்ணியப் பயனாக எழுந்தருளி யுள்ள வீர சேகர ஞான தேசிக மூர்த்தியை, நீ அணுகி-நீ



அடைந்து, போற்றிடுவாய்-துதிப்பதற்கு நீ ராட வருவாயாக. (எ—று)

15. தார்மேவித் தாரணியில் தன்னைத் தரவல்ல
நார்மேவும் வீரகுரு நாதன்இவன் பார்ஆரும்
தேர்மேவு பிஞ்ஞகனே தேரின்என உள்கசிந்து
சீர்மேவும் அன்பர்எலாம் தேர்ந்துநனி வாழ்த்துகின்றார்
ஏர்மேவும் முத்தியினை எய்திப் பிறப்பகற்றப்
பார்மேவி நல்தவங்கள் பண்ணுதலும் வேண்டாவே
கூர்மேவு மைவிழியாய் கோஞ்சுதுயில் விட்டவனை
நேர்மேவி வாழ்த்திடுவாய் நோந்திடலாம் எம்பாவாய்.

(ப-ரை.) கூர் மேவு-கூர்மையாகிய, மை விழியாய்-மை தீட்டிய கண்ணை யுடையாளே, எம் பாவாய்-எங்கள் பாவையே, தாரணியில்-பூ வுலகில், தார் மேவி-ஞாந மாகிய வெற்றி மாலையைத் தரித்து வந்து, தன்னை-(பிரத்ய க்ஷபின்ன பிரம மாகிய) தன்னை, தர வல்ல-(வழிபட்டார்க்குக்) கொடுக்க வல்லவ ராகிய, நார் மேவு-அருளே திரு மேனியாக வந்த, வீர குரு நாதன்-வீர சேகர ஞான தேசிகத் தலைவரைக் கண்டு, சீர் மேவு-மேன்மை மிக்க, அன்பர் எலாம்-அடியவர்கள் எல்லோரும், "தேரின்-ஆராய்ந்தோமானல், இவன்-இப் பெருமான், பார் ஆரும்-பூமி யாகிய, தேர் மேவு-தேரின்கண் ஏறிய, பிஞ்ஞகனே-சிவ பெருமானே," என தேர்ந்து-என்று கூறித் தெளிந்து, உள் கசிந்து-மனம் கசிவுற்று, வாழ்த்துகின்றார்-வாழ்த்துகின்றனர், (ஆதலால் நீயும்) ஏர் மேவும்-மேன்மை பொருந்திய, முத்தியினை எய்தி-வீடுபேற்றைப் பெற்று, பிறப்பு அகற்ற-

பிறவிகளை ஒழிப்பதற்கு, பார் மேவி-வேற் றிடங்களை அடைந்து, நல் தவங்கள்-நன்மையைத் தர வல்ல கடின மாகிய நோன்புகளை, பண்ணுதலும் வேண்டா-இயற்றித் துனபுறவும் வேண்டாப, கொஞ்சு-கூடிக் குலாவுகின்ற, துயில் விட்டு-தூக்கத்தை விட்டு, அவனை நேர் மேவி-அப் பெருமானை நேரே அடுத்து வாழ்த்தினால், நேர்ந்திட லாம்-வீடுபேற்றை அடையலாம், வாழ்த்திடுவாய்-(ஆகை யால் அவனை) வாழ்த்தும் பொருட்டு நீ ராட வருவா யாக. (எ—று)

16. நாதன் திருக்களரான் நங்கள்வீ ரேசகுரு
ஏதம் வராதளித்து எம்தமையும் உளகோண்டு
போதமதைத் தந்திரண்டு பற்றையுமே போக்கினன்காண்
மாதரசே கீதைபுகழ் மார்கழியில் நீர்மூழ்கிப
போதவரும் போதினில்அப் புண்ணியனைப் பாடுவை
வாதனைகள் மூன்றும் வறுத்தவிதை ஆகிவிடும் [யேல்
சோதமயம் ஆகத் துலங்கிடுவாய் அன்னவனைக்
காதலோடு பாடிக் கசிந்துநிற்பாய் எம்பாவாய்.

(ப—ரை) மாதரசே-மங்கையர்க் கரசியே, எம் பாவாய்-எங்கள் பாவையே, நாதன்-உலகத்திற்கு அபின்ன நிமித்த உபாதான காரண வடிவராக இருக்கின்றவரும், திருக் களரான்-திருக் களர் என்னுந் திரு வூரில் எழுந் தருளி இருக்கின்றவரும், நங்கள் வீரேச குரு-நம் குருபா ரும் ஆகிய வீர சேகர ஞான தேசிக மூர்த்தியானவர், எம் தமையும்-(ஒன்றுக்கும பற்றாத) அடியேங்களையும், உள் கொண்டு-ஒரு பொரு ளாகத் திரு வுளம் பற்றி, போத



மதை-மெய் யுணர்வை, தந்து-கொடுத்து, இரண்டு பற்றை யும்-(யான் எனது என்னும்) இரு வகைப் பற்றுக்களையும், போக்கினன்-நீக்கினான், (ஆதலால்) கீதை புகழ்-ஸ்ரீமத் பகவற் கீதையின்கண் புகழப்பட்ட, மார்கழியில்-இம் மார் கழித் திங்களில், போது அலரும் போதினில்-தாமரை முதலிய மலர்கள் மலர்கின்ற விடியற் காலத்தில், நீர் மூழ்கி-நீ ராடி, அப் புண்ணியனை-அப் புண்ணிய வடிவா கிய குருபரரை, பாடுவையேல்-வாழ்த்துவாயாகில், வாத னைகள் மூன்றும்-(உலக வாசனை முதலிய) வாசனைகள் மூன் றும், வறுத்த விதை ஆகிவிடும்-வறுத்த விதைகளைப் போலப் பய னின்றி ஒழியும், சோதி மய மாக-ஞான வடிவ மாக, துலங்கிடுவாய்-நீ விளங்கிடுவாய், (ஆகலால்) அன் னவனை-அக் குருபரனை, காதலொடு-பக்தியோடு, கசிந்து-(மனம்) நெகிழ்ந்து, பாடி நிற்பாய்-பாடி நிற்கும் வண் ணம் நீ ராட எழுந்து வருதி. (எ—று)

17. வண்டோலிக்கும் சோலைமிக மன்னும் திருக்களரில்
பண்தழைக்கும் பாஞான சம்பந்தர் பாடல்பெறும்
திண்தடம்தோள் பாரிசா தேசுரர்க்குக் கோயிலதைக்
கண்டிரதம் ஐந்தியற்றிக கண்டவர்கள் தாம்வியப்புக்
கோண்டமையக கும்பாபி டேகம் குயிற்றித்தேர்
மண்டிவர ஈசரையே வைத்திழுக்கும் நேரமதில்
திண்தேர் நிலைக்கமகா தேவளன வீரேசக்
கோண்டல்முத்தி கோண்டவிதம் கூறுகநீ எம்பாவாய்.

(ப—ரை.) எம் பாவாய் - எங்கள் பாவையே, வண்டு ஒலிக்கும் - வண்டுகள் முழங்கும், சோலை மிக மன்னும்-

சோலைகள் மிகவும் நிலைபெற்றிருக்கின்ற, திருக் களரில்-திருக் களர் என்னுந் திரு வூரில, பா ஞாந சமபந்தா-பா வேந்த ராகிய திரு ஞாந சமபநதரது, பண தழைக்கும-சீகாமரம் முதலிய பண்களோடு விளங்குகினற, பாடல்-தேவாரப் பா மாலையை, திண் தடம் தோள் - திடம் பொருந்திய விசால மாகிய திருத் தோள்களிலே, பெறும்-அமையப் பெற்ற, பாரிசாதேசுரர்க்கு - பாரிசாத வனத் திறைவருக்கு, கோயிலதைக் கண்டு-திருக் கோயிலை அமைத் தருளி, ஐந்து இரதம் இயற்றி-(ஐந்து மூர்த்திகட்கும்) ஐந்து தேர்களைச் செய்து, கண்டவாகள் - பார்த்த பக்தகோடிகள் அனைவரும, வியப்ப-அதிசயிக்கும்படி, கொண்டு-(குறை வற்ற சாதனங்களைக்) கொண்டு, அமைய-மந்திர லோபம், கிரியா லோபங்க ளின்றி, கும்பாபிடேகம்-குட முழுக்கை, இயற்றி-செய்து, ஈசரை-அவ் விறைவனை, தேர்-தேரில், வைத்து இழுக்கும் நேரமதில்-எழுந்தருளச் செய்து இழுக்கும் பொழுது, திண் தேர் மண்டிவர-அத் திண்ணிய தேர் துருவாச முனிவர் சந்நிதிக்கு நேரே வந்து, நிலைக்க-நின்று விட, மகா தேவ என-மகா தேவ மகா தேவ என்று மொழிந்து, முத்தி கொண்ட-(அவ் விடத்திலேயே) விதேக முத்தியை அடைந்த, வீரேச கொண்டல்-மேகம் போன்று (கைம் மாறு கருதாது தன்னையே கொடுக்கும்) வீர சேகர ஞான தேசிக மூர்த்தியை, நீ கூறுக-நீ புகழும் வண்ணம் நீ ராட எழுந்து வருவாயாக. (எ—று)

18. நம்மையும் ஓர்பொருளா நாடி நமஆன
போய்ம்மைஉடல் ஆவிபொருள் போதும்எனக் கோண்டு
மெய்ம்மைஆ நந்தஉரு மேவ நமக்களித்த [தன்
செம்மை அருளாளன் தெய்வ சிகாமணியாம்
தம்மை அறிந்தவர்க்குத் தாமாய் அமர்ந்தகுரு
இம்மை மறுமைஎலாம் ஏகபரம் என்றருள்வோன்
பொய்ம்மை அகலப் பொலியும் நறும்சோதி
ஐம்மைகொளும் வீரேச அண்ணலைப்பா டேம்பாவாய்.



(ப—ரை.) எம் பாவாய்-எங்கள் பாவையே, நம்மையும்-(சாதனங்கள் சிறிது மின்றிய) நப்போலியரையும், ஓர் பொருளாக நாடி-மாணவர்களாகத் திருவுளத்திற் கருதி, நம ஆன-நம்முடைய, பொய்மை - நிலையற்ற, உடல் பொருள் ஆவி-உடல் முதலிய முப் பொருளையும், போதும் எனக் கொண்டு-போத மென்று தம் முடையன ஆக்கி, மெய்மை அறிவு ஆநந்த உரு - சச்சிதாநந்த வடிவத்தை, மேவ-(நம் வடிவ மாக நாம்) உணரும்படி, நமக்கு அளித்த-நமக்கு (மெய் யுணர்வைக்) கொடுத்த, செம்மை அருளாளன்-நேர்மையான அருள் படைத்தவரும், தம்மை அறிந் தவர்க்கு-தம்மைச் சற் குரு எனத் தெளிந்து வந் தடைந்த மாணவர்கட்கு, குரு தாமாய்-தாமே ஞானசாரியராக, அமர்ந்த-எழுந்தருளி, இம்மை-இக லோக இன்பமும, மறுமை—பர லோக இனபமும், எலாம்-ஆகிய இன்ப மனைத்தும், ஏக-அத்விதியமாகிய, பரம் - பிரமானந்தத்தின் லேசமே, என்று அருள்வோன்-என்று உபதேசித் தருள்பவரும், பொய்மை-(அடியார்களின்) அக இருளானது, அகல-நீங்கும்படி, பொலியும்-விளங்குகின்ற, நறும்-நல்ல, சோதி-ஞான தீபமாகியவரும், தெய்வ சிகாமணியாம்-தெய்வங்கட் கெல்லாம் சிரோ ரெத்தினம் போன்றவரும் ஆகிய, ஐம்மை கொளும்-(மைத்திரியாதி குண) அழகு படைத்த, வீரேச அண்ணலை-பெருமை மிக்க வீர சேகர ஞான தேசிக மூர்த்தியை, பாடு-பாடுதற்கு எழுந்து நீ ராட வருவாயாக. (எ-று)

19. வாழைஎனும் புல்லில்உறும் மடடைஎலாம் நீக்கிநடுக்
காழ்அமைந்த தணடைக கதுவல்என மேல்மேலாச்
சூழுகினற கோசம்எலாம் சூழ்நதோதுககத் தோன்றுகின்ற
பாழினையும நீககப் பயில்கரிநான ஆவன்என
ஆழும்அந்த நல்உணாவும அறபம்என விடடகமே
பேழைப பிரமம்எனப பேசுமநெஞ்சும் தான்நழுவ
வாழ்கஒன்று என்றுரைத்த மன்வர சேகரனை
ஏழுபவம் தொலைய ஏத்தடுவோம் எம்பாவாய்.

(ப—ரை.) எம் பாவாய்-எங்கள் பாவையே, ஏழு பவம் தொலைய-ஏழு வகைப் பிறப்பும் நமக்கு வாராமல் அடியோடு ஒழியுமபடி, ஸ்ரீ வீர சேகர ஞான தேசிக குரு மூர்த்தியின் திரு வாக்கின்படி நாம் ஒவ்வொருவரும், வாழை எனும்-வாழை யென்று வழங்கப்பெறும, புல்லில்-புல்லின் கண்ணே, உறும்-அடுக்காக அமைந்த, மட்டை எலாம்-மட்டைகள் அனைத்தையும், நீக்கி-(ஒவ் வொன்றுகப்) பிரித்துவிட்டு, நடு-நடுவே, காழ் அமைந்த-உர மாகப் பொருந்திய, தண்டைக் கதுவல் என-தண்டினைப் பயனுகக் கொள்ளுதல் போல, மேல் மேலா-ஒன்றன் மேல் ஒன்றுக, சூழுகின்ற-மறைக்கின்ற, கோசம் எலாம்-அன்னமய முதலிய கோசங்கள் ஐந்தினையும், சூழ்ந்து-ஆராய்ந்து (யான் அல்ல என நீக்கிய விடத்து), தோன்றுகின்ற பாழினையும்-தோன்றுகின்ற சூனியத்தையும, நீக்க-(நான் அன்று என்று) நீக்கிவிட்டு, பயில்-மூன்றவத்தையினும் நிலைபெறுவதாகிய, கரி-சாக்ஷியே, நான் ஆவன் என-நான் நான் என நாம் ஒவ்வொருவரும் உணருங்கால், (அங்ஙன் உணரும் நம்மை அக் குருபரர் நோக்கி) ஆழும்-அழுந்திய, அந்த நல் உணர்வும்-அந்த நல்ல



சாக்ஷி யுணர்வும், அற்பம்-புருடார்த்த சாதன மன்று, என-என்று உபதேசிக்க, விட்டு-அச் சாக்ஷி யுணர்வையும் விட்டு, பேழை-பெரிதுக் கெல்லாம் பெரிதாகிய, பிரமம் என-நான் பிரமமாய் இருக்கின்றேன்'' என்று அநுசந்தாநம் செய்யும் நம்மை நோக்கி, பேசும்-கூறிய, நெஞ்சும்-அவ் வகண்ட பிரம்மாகார விருத்தியும், அகம் நழுவ-உள்ளத்தினின்றும் நீங்கப் பெற்று, ஒன்று வாழ்க-அகண்டைக ரசப் பெரு வெள்ளத்தில் நிலை பெறுக'', என்று உரைத்த-என்று உபதேசித் தருளி நிலைபெறச் செய்த, மன் வீரசேகரனை - அப் பெருமானை, ஏத்திடுவோம்-வாழ்த்தும் பொருட்டு எழுந்து நீ ராட வருவாயாக. (எ—று)

20. தேவர்எலாம் போற்றும் திருக்களர்வீ ரேசன்தாள்
ஆவலோடு பாடி அடைந்தடியம் என்றைக்கும்
ஓவல்இன்றி வீணே உழன்று கவல்மநத்தைத்
தாவாப் பிரமத்தே தான்நிலைக்க வேவைத்துத்
தேவர் எனஉலகர் தேற நிலைத்துநின்றுல்
சாவும் பிறப்பும் தவிர்ந்த சொரூபமதா
ஆவதுமெய் என்ன அறிந்தவன்தாள் பாடிஉறப்
பூஅலரும் பொய்கைபடிந் தாடுகம்வா எம்பாவாய்.

(ப-ரை.) எம் பாவாய் - எங்கள் பாவையே, தேவர் எலாம்-தேவர்கள் அனைவரும் வந்து, போற்றும் - வழிபடுகின்ற சிறப்பு மிக்க, திருக் களர்-திருக் களரென்னுந் திருவூரில் எழுந்தருளி இருக்கின்ற, வீரேசன் தாள்-வீர சேகர ஞாந தேசிக மூர்த்தியின் திரு அடிகளை, அடியம்-அடியேங்களாகிய யாம், ஆவலொடு-ஆராத பக்தியோடு, அடைந்து-(திரு முன்பு) அடைந்து, பாடி-புகழ்ந்து, என்றைக்கும்-

எப்பொழுதும், ஓவல் இன்றி-ஒழிவு இல்லாமல், வீணே-வீணாக, உழன்று-அலைந்து, கவல் மனத்தை-துன்புறுகின்ற மனத்தை, தாவா-அழிவின்றிய, பிரமத்தே-பிரத்தியக பின்ன பிரமத்தின்கண், நிலைக்க வைத்து-நிலைக்கும் வண்ணம் நிறுத்தி, தேவர் என-"இவர்கள் மெய்ஞ்ஞானிகளே" என்று, உலகர்-உயர்ந்தோர்கள், தேற-தெளியுமபடி, நிலைத்து நின்ருல்-சாதன நிலையில் நிலைபெற்ருல், சாவும் பிறப்பும்-தோற்றமும் ஒடுக்கமும், தவிர்ந்த-இன்றிய, சொரூபமதாக-(பிரம) சொரூபமாக, ஆவது-அம் மனம் அமையும், மெய்-(அங்ஙன் அமைதலால் சிவன் முத்திப் பேருனந்தம் பெருகுதல்) உண்மை, என்ன அறிந்து-என்று (அவன் அருளால்) உணர்ந்து, அவன் தாள்-அவனுடைய திரு அடிகளை, பாடியுற-(அந் நிலை கைவருதற்கு வாயாரப்) புகழ்ந்து நிற்க, பூ அலரும்-(தாமரை முதலிய) பூக்கள் மலருகின்ற, பொய்கை-இப் பொய்கை நீரில், படிந்து-மூழ்கி, ஆடுகம்-நீ ராடுவோம், வா-வருவாயாக. (எ—று)

21. பாவலர் நாளும் பதமலர் போற்றிநிற்க
நாவலர் மெய்ம்மைதன்னை நன்குரை செய்கநன்றே
தேவர்கள் உள்உவப்பத் திங்கள்மும் மாரிபெய்க
காவலர் பூமிதன்னைக் காக்கவே தாந்தம்எங்கும்
ஓவுதல் இன்றிஎன்றும் ஓங்குக மெய்உணர்வை
ஏவரும் கொள்ளவந்த எங்கள்வீ ரேசன்நல்ல
பூஅடி வாழ்கஇன்பம் பூத்திட என்றுரைத்து
நாவினால் வாழ்த்த நயந்தெழுவாய் எம்பாவாய்.

(ப—ரை.) எம் பாவாய்-எங்கள் பாவையே, பாவலர்-பாவாணர்கள், நாளும் - எஞ்ஞான்றும், பதமலர்-குருபரர்



திருவடி மலரை, போற்றி நிற்க-பாமாலை புனைந்து புகழ்ந்து நிற்பாராக, நாவலர்-நாவில் வல்ல புலவர்கள், மெய்மை தன்னை - அறம், பொருள், இன்பம் ஆகிய இவைகளின் உண்மை நிலையினை, நன்கு-பெரிதும், உரை செய்க-(மக்கட் செல்லாம்) எடுத் துரைப்பார்களாக, (அவர்கள் நெறி வழுவாது நிற்றலால்), தேவர்கள் - தெய்வங்கள் எல்லாம், உள் உவப்ப-மன மகிழ்ச்சி அடைதலால், திங்கள்-மாதந் தோறும், மும் மாரி பெய்க-மூன்று மழை பொழிவதாகுக, காவலர்-ஆளுவோர், பூமிதன்னை-இவ் வுலகத்தை, காக்க-(மக்களைச் செந் நெறியிற் செலுத்தி) காத்து வாழ்விப்பாராகுக, வேதாந்தம் - உபநிடதக் கருத்துக்கள் எல்லாம், எங்கும்-எவ் விடங்களிலும், என்றும்-எந் நாளும், ஓவுதல் இன்றி-குறைவுறாது, ஓங்குக-விளங்குக, மெய் யுணர்வை - தத்துவ ஞானத்தை, ஏவரும்-(அதிகாரிகள்) அனைவரும், கொள்ள வந்த-பெறும்படி அளிப்பதற் கென்றே எழுந்தருளி வந்த, எங்கள்-எங்கட் குரிய, வீரேசன்-வீர சேகர ஞான தேசிக மூர்த்தியின், நல்ல-மண மிக்க, பூ அடி-திரு அடித் தாமரைகள், வாழ்க - வாழ்வனவாக, இன்பம் பூத்திட - (இம்மை மறுமை) இன்பங்களும் இறுதியிற் பேரின்பமும் பொலிவனவாக, என்று உரைத்து-என்று சொல்லி, நாவினால் வாழ்த்த-நாவினால் வாழ்த்தும்பொருட்டு, நயந்து-விரும்பி, எழுவாய்-எழுந்து நீ ராட வருவாயாக. (எ—று)

ஸ்ரீ ஷண்முகாநந்த சுவாமிகள், மணி மாலை உரையைத்
தழுவி இயற்றிய—பத வுரை முற்றிற்று.

பொங்கும் மங்களம் எங்கும் தங்குக.

———

உ

சிவமயம்.

# திருப் பள்ளி எழுச்சி.

1. சூரியன் கிழக்கினில் தோன்றினன் நன்றே
 தூயநன் மரைமலர் விரிந்தன துனைந்தே,
ஆரியன் திருஅடி பழிச்சினர் அடியார்
 அகிலமும் விளங்கவே பறைந்தன மறைகள்,
காரியம் காரணம் அன்றியின் றேனவே
 கண்டனர் களிப்புறக் காட்சிய தாகக்,
தேரியல் திருக்களர் திகழுநற் குருவே
 திருஅடி தரப்பள்ளி எழுந்தரு ளாயே.

(ப-ரை.) சூரியன் - ஞாயிறு என்பது, கிழக்கினில்-கிழக்குத் திசையில், அகிலமும் - எல்லாப் பொருள்களும், நன்றே விளங்க-நன்கு புலப்படும்படி, தோன்றினன்-வெளிப்படத் தொடங்கிற்று, தூய-மாசற்ற, நல்-மண மிக்க (சிறந்த), மரை மலர்-தாமரை மலர்களும், துனைந்து-விரைந்து, விரிந்தன-மலரத் தொடங்கின, அடியார்-அடியவர்கள், ஆரியன்-பூசிக்கத் தக்கவராகிய தேவரீருடைய, திரு அடி-திரு அடிகளை, பழிச்சினர்-புகழத் தொடங்கினர், மறைகள்-வேதங்கள், பறைந்தன-முழங்கத் தொடங்கின, காரியம்-காரியங்கள் எல்லாமும், காரணம் அன்றி-காரணங்கள் இன்றி, இன்று எனவே - நிகழமாட்டா என்பதை, காட்சியதாக - கண் கூடாக, களிப்பு உற - (மக்கள்) களிப்போடு, கண்டனர்-கண்டார்கள், தேர் இயல்-தேர்கள் பல இயங்கும்படியான



செல்வ மிக்க, திருக் களர் திகழும்-திருக் களர் என்னுந் திரு வூரில் எழுந்தருளியிருக்கின்ற, நல் குருவே-(வீரசேகர ஞான தேசிக மூர்த்தி யென வழங்கப் பெறுகின்ற) நல்ல குருபரரே, திரு அடி தர-(தேவரீருடைய) திரு அடிகளைத் தொழும்படித் திருவருள் புரிதற்கு, பள்ளி எழுந்தருளாய்-திருப் பள்ளியினின்றும் எழுந்தருள்வீராக. (எ-று)

2. ஊறியல் உடல்களாம் மூன்றையுந் தள்ளி
 உன்உரு அறிவென உணர்த்திய நாளும்,
மாறியல் பின்றிய மக்களுக் கருளி
 வல்இருள் அகற்றிய மாசறு மணியே,
ஆறியல் பங்கமும் அளவிடற் கரியாய்
 அருணனும் விசும்பிடை அடைந்தனன் நன்றே,
பாறியல் பின்றிய வீரசே கரனே
 பதம்தரத் திருப்பள்ளி எழுந்தரு ளாயே.

(ப-ரை.) மாறு இயல்பு இன்றிய-நல் வழியில் நிலை பெறும் இயல்பினையுடைய, மக்களுக்கு - மக்களிடத்து, அருளி-அருளைப் பெருக்கி, ஊறு இயல் - துன்பங்களைத் தரும் இயல்பினையுடைய, உடல்களாம் மூன்றையும் - தூல சூக்கும காரண மென்னும் மூன் றுடல்களின் அபிமானங்களையும், தள்ளி-நீக்குதல் வாயிலாக, வல் இருள்-வலிய அஞ்ஞான இருளை, அகற்றிய-ஒழிக்கும் பொருட்டு, உன் உரு-(தனித் தனி ஒவ்வொருவரையும் நோக்கி) நினது நிச வடிவம், அறிவு-ஆன்ம வடிவமாகும், என-என்று திடம் பெற, நாளும் உணர்த்திய-என்றும் உணர்த்தியருளுகின்ற, மாசு அறு மணியே-குற்ற மற்ற மாணிக்கமே, ஆறு இயல்பு-ஆறு வகையான இயல்பினை யுடைய, அங்கம்-வியாகரண

முதலிய ஆறு அங்கங்களைக் கொண் டுணரத் தக்க இருக்காதி நான்கு வேதங்களாலும், அளவிடற்கு அரியாய் - அறிதற் கியலாத பெருமானே, பாறு இயல்பு இன்றிய-ஆக்கத்தினை யளிக்கும் மைத்திரியாதி நறுங் குணங்களைக் கொண்ட இயல்பினை யுடைய, வீரசேகரனே-வீர சேகர ஞான தேசிக மூர்த்தியே, அருணனும்-(செந் நிறம் வாய்த்த) சூரியனும், நன்றே-விளக்கமாக, விசும்பினில்-வான வீதியை, அடைந் தனன்-அடைந்துவிட்டான், (ஆகையால்) பதம் தர-(தேவரீ ருடைய) திரு அடியைத் தொழும்படி (அடியேங்கட்கு) அருள் புரிய, பள்ளி எழுந்தருளாய்-திருப் பள்ளியினின் றும் எழுந்தருள்வீராக. (எ—று)

3. சீர்தரும் திருஅருள் தனைப்பெறக் கருதிச்
சிறப்புறும் அடியவர் சங்கமோ டடைய,
ஏர்தரும் மறைகளின் முடிவினைக் கோள்ள
இங்குவந் தனைகோல்என் றிசைத்திடத் தோழவும்,
ஆரிய அடிமலர் தலைமிசை வைத்தே
ஆவியோ டாக்கைகோண் டாட்கோளும் குருவே,
வீரசே கரதவ விடிந்தது பிறப்பு
விளிவுறத் தோழப்பள்ளி எழுந்தரு ளாயே.

(ப-ரை.) சிறப்பு உறும் - (சதுட்ட சாதனச்) சிறப்பு வாய்ந்த, அடியவர்-அதிகாரிக ளாவார், சங்கமொடு-(புதியவா புதியவராக வந்து) பழ அடியார் திருக் கூட்டத்தைத துணை யாகக் கொண்டு, சீர் தரும்-சிறப்பு மிக்க, திரு அருள்தனை-திரு அருளின் வாயிலாகப் பவத் துன்ப வொழிவினை, பெறக் கருதி-பெற வேண்டு மெனக் கருதி, அடைய-திரு முன்பு



வந்து (இரு கரங்களையும் முடி மேற் சூட்டி) நிற்க, ஏர் தரும்-(அவர் வந்து நின்ற குறிப்பினைத் தெரிந்து) "உயர் வுடைய, மறைகளின் முடிவினை-வேதங்களின் முடிவாகிய வேதாந்தத் தால் விளக்கப்படும் மெய்ப் பொருளை, கொள்ள-(நினது நிச வடி வென) உணர்ந்து பவத் துன்ப மொழியக் கருதி, இங்கு வந்தனை கொல்-இவண் வந்தனையா?," என்று இசைத் திட-என (வந்து திரு முன் நின்ற ஒவ் வொருவரையும்) வினவ, தொழவும் - (அதுவே கருத் தென அவர் வாயா லன்றி அட்டாங்க) வணக்கம் முதலிய பலவற்றால் தெரிவிக் கவும், ஆவியொடு ஆக்கை மூன்றனையும்-(அவர்களின்) உடல் பொருள் ஆவி மூன்றனையும், கொண்டு-(தன்பால்) அற்பிக்கச் செய்து, ஆரிய - பூசிக்கத் தக்க, அடி மலர்-திரு அடித் தாமரை மலரை, தலைமிசை - (அவர்கள் தந் தந்) தலையில், வைத்து-சூடி (வழிபடச் செய்து), ஆட்கொளும் - அடிமை கொண்டருளுகின்ற, குருவே-மெய்க் குருபரரே, வீரசேகர-வீர சேகர ஞான தேசிக மூர்த்தியே, தவ-(அடியவரின்) தவப் பயனாக வெழுந்தருளிய பெருமானே, விடிந்தது-(இருள்) விடிந்துவிட்டது, பிறப்பு-(அடியே னுடைய) பிறப்பு (என்னும் இருளானது), விளிவுற - ஒழியும் பொருட்டு, தொழ-(அடியேன் தேவரீருடைய திரு அடியை) வணங்கி (ஞான மென்னும் ஒளி பெறும்படி திரு வருள் செய்வதற் காக), பள்ளி எழுந்தருளாய்-திருப் பள்ளியினின் றும் எழுந் தருள்வீராக. (எ—று)

4. திருஉறை கோவிலூர்த் திருப்பதி மருவிச்
சேகம்எலாம் புகழ்ந்திடத் திருக்களர் சேன்று,
எருக்கணி பாரிசா தேசுரர் தமக்கும்
எங்கள்தா யாகிய அமிர்தவல் லிக்கும்,

பெருநகர் அமைத்தநல் பெருமையைப் பாடிப்
பெருந்தவப் பெரியரோ டடியனும் அடைந்தேன்,
திருக்களர் வீரசே கரகுரு தேவே
திருஅடி தரப்பள்ளி எழுந்தரு ளாயே.

(ப-ரை.) திரு உறை-திருமகளானவள் (என்றும்) தங்கும்படியான, கோயிலூர்த் திருப் பதி-கழனி நகராகிய வளப்ப மிக்கக் கோயிலூரின்கண், மருவி-(அத்வைத பரமாசாரியராக) எழுந்தருளியிருந்து, திருக் களர்-திருக் களரென்னுந் திரு வூருக்கு, சென்று-(அடியவர் வேண்ட) எழுந்தருளி, எருக்கு அணி-(வெள்)ளெருக்கம பூ மாலையைப் புனைந்த, பாரிசாதேசுரர் தமக்கும்-பாரிசேதாசுர ரென்னுந் திருப் பெயர் பூண்ட சிவபெருமானுக்கும், எங்கள் தாயாகிய-எங்களுக்கெல்லாம் அன்னையாகிய, அமிர்த வல்லிக்கும்-அமிர்த வல்லி (யென்னுந் திருப்பெயர் பூண்ட உமை) யம்மையாருக்கும், செகம் எலாம் புகழ்ந்திட-உயர்ந்தோரனைவரும் புகழும் வண்ணம், பெரு நகர்-பெருமை மிக்க திருக் கோயிலை, அமைத்த-திருப் பணி செய்தருளிய, பெருமையைப் பாடி-மகத்துவத்தை யெடுத்து வா யாரப் பாடிக்கொண்டு, பெருந் தவப் பெரியாரோடு-சிறந்த தவச் செல்வர்களாகிய அடியவர்களோடு, அடியனும்-(ஒன்றுக்கும் பற்றாத) அடியேனும், அடைந்தேன்-அடைந்தனன், திருக் களர் வீர சேகர-திருக் களர் ஆண்டவர் என்னும் திருப் பெயர் பூண்ட வீர சேகர ஞான தேசிகனே, குரு தேவே-குரு மூர்த்தமாக வெழுந்தருளி வந்த பரம் பொருளே, திரு அடி தர-(தேவரீருடைய) திரு அடியைத் தொழுதற்கு அருள் பாலிக்க, பள்ளி எழுந்தருளாய்-திருப் பள்ளியினின்றும் எழுந்தருள்வீராக. (எ-று)



5. ஊரண நாபியை உவமைகொண் டிந்த
உலகினைத் தோற்றிநின் றழிதரச் செய்யும்,
ஆரணத் தமர்ந்திடும் ஐக்யமா வாக்யம்
அவன்இவன் என்பதை யறிகெனத் தினமும்,
காரண போதம தளித்திடும் குருவே
கண்டுனே தடிதொழத் தவத்தினர் புகுந்தார்,
ஏரண வுருவனே எழிற்பள்ளி இரிந்தே
எழில்வீர சேகர எழுந்தரு ளாயே.

(ப-ரை.) ஊரண நாபியை-சிலந்திப் பூச்சியை, உவமை கொண்டு-ஒத்து (அபின்ன நிமித்த உபாதான காரணமாக நின்று), இந்த-இங்குத் தோன்றுகின்ற, உலகினை-(மண்ணுலக முதலிய) உலகங்களை, தோற்றி-உண்டாக்கி, நின்று அழிதர-(அவைகள்) நிலைபெறவும் அழியவும், செய்யும்-செய்யத் தக்க (உலக கருத்தா வாவதுடன்), "ஆரணத்து-சாம வேத சாந்தோக்கிய வுபநிடதத்தில், அமர்ந்திடும் விளங்குவதான, ஐக்யம்-(ஜீவேசுரர்கள்) ஒன்றெனக் கூறும், வாக்யம்-(தத் துவ மசி யென்னும்) உபதேச வாக்யம், (பாகத் தியாக விலக்கணையால்) அவன்-தத்பதலக்ஷியார்த்தமாகிய பிரமமே, இவன்-துவம் பத லக்ஷியார்த்தமாகிய கூடஸ்த வடிவநீயாவை, என்பதை-என்று கூறும் ஐக்யார்த்தத்தை, அறிக-நீ யறிந்து பிறவித் துன் பொழிவாயாக, என-என் றுபதேசித்து, காரண போதமது-(அஞ்ஞான நீக்கத்தின்) காரணமாகிய திட வபரோக்ஷ ஞானத்தை, தினமும்-நா டோறும், அளித்திடும்-ஈந்தருளுகின்ற, குருவே-(மெய்க்) குருபரரே, ஏர் அணவு-அழகு பொருந்திய, உருவனே-திரு மேனியையுடையவரே, எழில்-அழகிய, வீர சேகர-வீர சேகர ஞான

தேசிக மூர்த்தியே, உனது அடி கண்டு-தேவரீருடைய திரு அடிகளைக் கண் குளிரக் கண்டு, தொழ-வழிபடுவதற்கு, தவத்தினர்-(முற்றவ முடைய முத்தி வேட்கையராகிய) தவச் செல்வர்கள், புகுந்தார்-(விரைந்து) அணுகி நிற்கின்றார்கள், எழில் பள்ளி-அழகிய திருப் பள்ளியினின்றும், இரிந்து-நீங்கி, எழுந்தருளாய்-காட்சி கொடுத்தருள்வீராக. (எ-று)

6. திங்களும் மழுங்கிடத் தினகரன் புகுந்தான்
 சேப்பருஞ் சீவர்கள் திமிரம தொழிய,
மங்கள ஆரியன் எனநின்று பெயரும்
 வடிவுமி லாதசெம் சொருபம தருள,
மங்கையர் மகவுபோன் மயக்கம தொழித்தே
 மண்இடை மனிதனுய் வந்துநல் வளத்தால்,
பங்கமில் திருக்களர் உறைவீர குருவே
 பதந்தரத் திருப்பள்ளி எழுந்தரு ளாயே.

(ப-ரை.) திங்களும் - சந்திரனும் அதனைச் சூழ்ந்த மீனினங்களும், மழுங்கிட-ஒளி குறைவுற்று மறையும்படி, தினகரன் - சூரியன், புகுந்தான் - வெளிப்பட்டனன், மண்ணிடை-மண்ணுலகத்தின்கண், மனிதனுய் வந்து-(மறை சொலும் பொருளே) மனித வடிவந் தாங்கி யெழுந்தருளி வந்து, மங்கள-நன்மையைத் தரும், ஆரியன் என-ஞானசாரியன் என்று புகழும்படி, நின்று-நிலைபெற்று, மங்கையர்-மனைவியரும், மகவு - மக்களும், பொன் - பொருளுமாகிய இவற்றுளுளதாம், மயக்கமது ஒழித்து-மயக்கத்தை நீக்கி, பெயரும்-(தனக்கென வேறு) பெயரும், வடிவும்-வடிவமும், இலாத-இன்றி (இன்பமே வடிவாக விருக்கும்), சொருபமது-(தம்) நிச வடிவத்தை, அருள-உபதேசித் தருளும் வண்ணம், நல் வளத்தால்-சிறந்த பல வகை வளங்களும் மிகுதலால், பங்கம் இல்-துன்பமான தில்லையாகும் வண்ணம், திருக்களர் உறை-திருக் களரென்னுந் திருவூரில் எழுந்தருளியிருக்கும், வீர குருவே-வீர சேகர ஞான தேசிக மூர்த்தியே, பதம் தர-(அடியேற்கும்) திரு அடி தீட்சை செய்தருள, திருப் பள்ளி எழுந்தருளாய்-திருப் பள்ளியினின்றும் எழுந்தருள்வீராக. (எ-று.)



7. தாரகம் ஆயதோர் பிரமத்தை அறியத்
 தயக்கம தின்றிய சமயமீ தெனவே,
நாரகம் கொண்டுனை நம்பிவந் தடைந்தேன்
 நாயக வீரசே கரதவ நாயேற்,
காரண முடியினில் அமர்தரும் அதனை
 அறிந்தினல் ஒழிவின்ப அடைவினை அடைய,
தாரணி தனிலொரு விரகினைத் தரவே
 தயையுறும் குருபள்ளி எழுந்தரு ளாயே.

(ப-ரை.) தாரகம் ஆயது-அதிட்டானமாக விளங்குகின்ற, ஓர்-அத்வைதமாகிய, பிரமத்தை-(அகண்ட பரிபூரண சச்சிதானந்த) பிரமத்தை, அறிய - (அடியேனுடைய நிச வடிவமாக) அறிதற் கேற்ற எண்ணம் உண்டானபோதே, ஈது-இச் சமயம், தயக்கம் அது இன்றிய-தடையற்ற, சமயம் எனவே-நல்ல சமயம் ஆகுமென்று கருதி, நார்-அன்பை, உளம் கொண்டு-உள்ளத்தில் மிகுவித்து, உனை-தேவரீரை, நம்பி - (ஞானசாரியராக) நம்பி, வந்து அடைந்தேன்-(விரும்பி) வந்து அடைந்தனன், ஆரண முடிவினில்-வேத முடிவாகிய வேதாந்தத்தால், அமர்தரும்-அறியும்படி விளங்குகின்ற, அதனை-அப் பிரத்ய கபின்ன பிரமத்தை, அறிந்து-(அடியேனது நிச வடிவென) வுணர்ந்து, இனல் ஒழிவு இன்ப அடைவினை-அநர்த்த நிவிர்த்தி ஆநந்தப் பிராப்தி வடிவ முத்தியினை, அடைய-அடையும்படி, நாயேற்கு-நாயினுங் கடையேனாகிய அடியேனுக்கு, தாரணிதனில் - இம் மண்ணுலகில், ஒரு-ஒப்பற்ற, விரகினை-உபாயத்தை, தர-உபதேசித்தருளுதற்கு, நாயக - (தேவ) நாயகரே, தவ-(அடியவர்) தவப் பயனாக வெழுந்தருளியவரே, தயை உறும்-அருளே திருமேனியாக எழுந்தருளிவந்த, குரு-குருநாதரே, வீர சேகர-வீர சேகர ஞான தேசிக மூர்த்தியே, பள்ளி எழுந்தருளாய்-திருப் பள்ளியினின்றும் எழுந்தருள்வீராக.

8. நூல்பல கல்லேனும் நோன்மைகொள் உரையை
நோக்கிலேன் சான்றவர் இனத்திரு எனுமோர்,
வாலிய உரையையும் மதித்திலேன் ஐயோ
மாமறைப் பொருளுறும் வழியறி வேனோ,
தாலம தனில்உயர் தருவீர குருவே
தத்துவம் தெரிவகை சார்ந்தெமக் கருளக்,
கோலிநல் வயல்வளம் கொழிதிருக் களரூர்க்
குலபதி திருப்பள்ளி எழுந்தரு ளாயே.

(ப-ரை.) பல நூல்-பல வகைப்பட்ட (பக்தி யோக ஞான) நூல்களை, கல்-(நல் லாசிரியனிடத்தே) கேட்டுச் சிந்தித்துத் தெளிவாயாக, எனும்-என்று கூறிய, நோன்மை கொள் - (அறிவு) வன்மையைப் பயக்கத் தக்க, உரையை-(ஔவைப் பிராட்டியாரது) திரு வாக்கின் கருத்தை, நோக்கிலேன்-ஆராய்ந்து அதன் வழிநின்று கேட்ட லாதியைப் பெற்றேனு மில்லை, சான்றவர்-(கல்வி யறிவு ஞான வொழுக்கங்கள் நிரம்பிய) பெரியோர்களுடைய, இனத்து-கூட்டத்திலே, இரு-கூடி வாழ்வாயாக, எனும்-என்ற கருத்தோடு, வாலிய-மனந் தூய்தாதற்கு வழிகாட்டியாக வுரைத்த, ஓர்-ஒப்பற்ற, உரையையும்-(அப் பிராட்டியார்) திரு வாக்கையும், மதித்திலேன் - நன் குணர்ந்து அதன் வழி நின்று கல்வியாதிகளைப் பெற்றேனு மில்லை, ஐயோ-ஐயகோ, மா-சிறந்த, மறைப் பொருள்-வேதாந்தத்தா லுணர்த்தப்படும் மெய்ப் பொருளை, சார்ந்து உறும்-(அடியேனது நிச வடி வென) அடைதற் கேற்ற, வழி-(ஞான) மார்க்கத்தை, அறிவேனோ-எங்ஙன் அறிவேன், தாலமதனில்-மண் ணுலகத்தி லுள்ள, உயர் தரு-உயர்ந்த (கற்பக) தருவை யொத்த, வீர குருவே-வீர சேகர ஞான தேசிக மூர்த்தியே, வயல் கோலி-வயல்கள் நாற் புறமுஞ் சூழ்ந்து, நல் வளம்-சிறந்த வளங்கள் பலவற்றை, கொழி-தருகின்ற, திருக் களர் ஊர்-திருக் களர் என்னுந் திருவூரில் எழுந்தருளியிருக்கின்ற, குல பதி-சிறந்த அருளிறையே, எமக்கு-அடியேங்கட்கு, தத்துவம் - தத்துவமசி யென்னும் மாவாக்யப் பொருளை, தெரி வகை-(ஐயந் திரிபுகள் நீக்கித்) தெளியும் வண்ணம், அருள-உபதேசித்தருளுதற்கு, திருப்



பள்ளி எழுந்தருளாய்-திருப் பள்ளியினின்றும் எழுந்தருள் வீராக. (எ-று)

9. நங்கையர் நவில்மொழி நன்றெனக் கருதி
நாட்களை அவத்தினில் கழித்துற வாடி,
இங்கியல் வழியறி யாதுழல் வேனை
இறைவீர அடிசிரம் இருத்திக்கண் பார்த்தே,
பொங்குமோர் இயல்பாகப் பொருந்துவ தான்மா
புறம்பிற பலவியல் பொருந்துவ என்றே,
சங்கைய றச்சொலி எனைத்தனி ஆளத்
தரைவரு வோய்பள்ளி எழுந்தரு ளாயே.

(ப-ரை.) நங்கையர்-(அழகிற் சிறந்த) பெண்கள், நவில் மொழி-மொழிகின்ற மொழிகள், நன்று என-நன்மை பயக்கும் என்று, எண்ணி-கருதி, நாட்கள்-(வா)ணுட்களை யெல்லாம், அவத்தினில்-வீணாக, கழித்து - கழியும்படி செய்து, உறவு ஆடி-(அவர்களிடத்துக்) காதல் பூண்டு, இங்கு-இம் மண் ணுலகில், இயல் வழி-ஞான நெறியினை, அறியாது-தெரியாமல், உழல்வேனை-சுழன்று திரியும் அடியேனை, அடி-(தேவரீ ருடைய) திரு வடிகளை, சிரம் இருத்தி-சிரசிலே சூட்டி, திருக் கண் பார்த்து-அருள் விழியால் நோக்கி, "பொங்கும்-மேம்பட்ட, ஓர் - அத்வைத மாகிய, ஆன்மா-பிரத்ய கான்மா வானது, இயல்பாக-(தோன்றி நின் றழியும் தன்மை யின்றி) சச்சிதானந்த வடிவமாய், பொருந்துவது-வியாபக மாக வுளதாகும், புறம்-(அவ் வான்மாவுக்குப்) புறம்பாகிய, பிற-அஞ்ஞானமும் அதன் காரியங்களும், பல வியல்-தோன்றி நின் றழியுந் தன்மைய வாய் அசத்து சட துக்க வடிவமாய், பொருந்துவ-தேச கால வஸ்து பரிச்சேத முடையனவாக வுள்ளனவாம்," என-என்று, சங்கைகள்-ஆசங்கைகள், அற-நிகழா வண்ணம், சொலி - உபதேசித்தருளி, எனை-அடியேனை, தனி ஆள-ஒப் பின்றி ஆட்கொள்ளும் வண்ணம், தரை-இம் மண் ணுலகில், வருவோய் - (மனித வடிவங் கொண் டெழுந்தருளி) வருதலை மேற்கொண்டவரே, இறை-தேவ நாயகரே, வீர-வீர சேகர ஞான தேசிக மூர்த்தியே, பள்ளி எழுந்தருளாய்-திருப் பள்ளியினின்றும் எழுந்தருள்வீராக.

10. வேரியங் கமலமோ விரிந்தன இரவி
விரைந்தனன் பறவைகள் விரைந்தன விசும்பில்,
பேரியல் பிறப்பதை ஒழிப்பது போலப்
பிலத்தினில் சென்றன நாகங்கள் எல்லாம்,
கூரிய நின்றிரு வாக்கியம் கொண்டே
கோதறு தத்துவ மசிப்பொருள் தேர்ந்தோம்,
நேரியல் திருக்களர் வீரசே கரனே
நின்பதம் தொழப்பள்ளி எழுந்தரு ளாயே.

(ப-ரை.) வேரி-தேன் ஒழுகும், கமலம்-தாமரை மலர்கள், விரிந்தன-பூத்தன, இரவி-சூரியன், விசும்பில்-விண்ணின்கண், விரைந்தனன்-விரைந்து வந்தனன், பறவைகள்-பறவைகளெல்லாம், விரைந்தன-பறந்தன, பேர் இயல்-எல்லை யின்றியிருக்கின்ற, பிறப்பதை-பிறப்புக்களை, ஒழிப்பது போல-ஒழிப்பதற் கெண்ணுந் துறவிகள் பிட்சை யேற் றுண்டுத் தங்கள் ஒடுக்கங்களில் ஒடுங்கி யிருப்பது போல, நாகங்கள் எல்லாம்-பாம்புக ளெல்லாம், பிலத்தினில்-இரைகளைத் தேடி யுண்டுத் தத் தம் அளைகளில், சென்றன-புகுந்து ஒடுங்கின, கூரிய-எல்லாவற்றையும் நுனித் துணரும்படியான, நின்-தேவரீருடைய, திரு வாக்கியம் கொண்டே-திரு வாசகத்தால், கோது-அசத்துச் சட துக்க வடிவ அஞ்ஞான மாகிய சக்கையை, அறு-ஒழிக்க வல்ல, தத்துவ மசிப் பொருள்-தத்துவ மசி மகாவாக்கியத்தின் பொருளை, தேர்ந்தோம்-(இலக்கணையால் அறிந்து) தெளிந்தோம், நேர் இயல்-உயர் குணங்கள் மிக்க பெருமக்கள் வாழ்கின்ற, திருக் களர்-திருக்களர் என்னுந் திரு வூரில் எழுந்தருளியிருக்கின்ற, வீர சேகரனே-வீர சேகர ஞான தேசிக மூர்த்தியே, நின் பதம்-தேவரீருடைய திரு வடிகளை, தொழ-(நன்றி மறவாது) வழிபட, பள்ளி எழுந்தருளாய்-திருப் பள்ளியினின்றும் எழுந்தருள்வாயாக. (எ-று.)

திருப் பள்ளி எழுச்சி பத உரை முற்றிற்று.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 3 | 15 | ஜங்குறு | ஐங்குறு |
| 4 | 3 | முதலியேயார் | முதலியோர் |
| ,, | 26 | எடுத்தாண்டரென்பது | எடுத்தாண்டனெ |
| 7 | 19 | யானை முகமுக | யானைமுக [ன்பது |
| | | முடையவராதலின் | முடையவராதலின் |
| ,, | 20 | அஙஙனமே | அங்ஙனமே |
| ,, | 21 | இருத்தவின் | இருத்தலின் |
| 9 | 22 | யெனபது | யென்பது |
| 11 | 7 | வாதவின் | வாதலின் |
| ,, | 15 | தொழுவம | தொழுவம் |
| 14 | 11 | விடியற் | விடியற் |
| 15 | 1 | தீராடி | நீராடி |
| ,, | 7 | மேகத்தைத் | மேகத்தை |
| ,, | 17 | அஞ்ஞான | அஞ்ஞான |
| ,, | 24 | ஸ்வயமவ | ஸ்வயமேவ |
| 16 | 3 | மீதொளிரச் | மீதொளிரச் |
| 17 | 22 | இருத்கிறேன் | இருக்கிறேன் |
| ,, | 28 | அபரோக்ஷ | அபரோக்ஷ |
| 19 | 25 | விழியால் | விழியால் |
| 20 | 6 | முதலியலற்ருல் | முதலியவற்ருல் |
| ,, | 23 | தன்யையை | தன்மையை |
| 21 | 1 | டிண்டமத்தை | டிண்டிமத்தை |
| ,, | 16 | சாத்திரஞர் | சாத்திரஞ்ஞர் |
| 22 | 6 | என்பது | என்பது |
| ,, | 23 | துய்ப்பதறகு | துய்ப்பதற்கு |
| 24 | 11 | பொருன் | பொருள் |
| ,, | 17 | இருந்தால் | இருந்ததால் |
| ,, | 25 | ஒளியை | ஒளியை |
| 27 | 13 | வெடு | கெடு |
| 28 | 25 | மொழீப் | மொழிப |
| 29 | 8 | பிரஜித்மாகும் | பிரசித்தமாகும் |
| ,, | 24 | கொறவா | கொற்றவா |
| ,, | 27 | கெமுந்தருளி | கெழுந்தருளி |
| ,, | 28 | தேசுரர்கவுத் | தேசுரர்க்குத் |
| 30 | 4 | வழங்கப்டுதலின் | வழங்கப்படுதலின் |
| ,, | 11 | அதளையே | அதனையே |
| ,, | 17 | பிரபு லிங்க லீலை | பிரபு லிங்க லீலை |
| ,, | 20 | ஒயா | ஓயா |
| 31 | 9 | களிரில் | களரில் |
| ,, | 21 | தவத்தரற் | தவத்தாற் |
| ,, | 25 | ஞட்டிற் | ஞட்டில் |
| 34 | 7 | சொற்களுக்கு | சொற்களுக்கு |
| 36 | 24 | கேறபுடைய | கேற்புடைய |
| 37 | 7 | யெனின் | யெனின் |
| 38 | 12 | இனிகரும் | இனிக்கும் |
| 40 | 6 | விழு | விழு |
| ,, | 7 | உரீய | உரிய |
| ,, | 9 | தூரியமராய் | துரியமாய் |
| ,, | 13 | வியாக | வியாபக |
| 41 | 5 | சொல் | சொல் |
| ,, | 6 | செட்புட்களில் | செய்புட்களில் |




| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 41 | 20 | நிர்த் | நீர்த் |
| ,, | 23 | யுற | புற |
| 43 | 26 | துரைத்தால் | துரைத்தலால் |
| 45 | 12 | கண்ணக் | கண்ணைக் |
| ,, | 27 | என்பரர் | என்பார் |
| ,, | 28 | பெரது | பொர்து |
| 47 | 3 | பேரல | போல |
| ,, | 7 | வழங்களின் | வழங்கலின் |
| ,, | 27 | ஞாக | ஞான |
| 49 | 18 | தோரன்றும் | தோன்றும் |
| ,, | 23 | எர் | ஏர் |
| ,, | 29 | எர் | ஏர் |
| 52 | 28 | அறிவித்து | அறுவித்து |
| 54 | 6 | தேசுரக்கு | தேசுரர்க்கு |
| ,, | 22 | செுய்து | செய்து |
| ,, | 28 | மூர்த்தின் | மூர்த்தியின் |
| 57 | 1 | வரயி | வாயி |
| ,, | 6 | வாககியுப | வாக்கியயுப |
| ,, | 18 | காரிப் | காரியப் |
| ,, | 24 | வலல | வல்ல |
| ,, | 28 | இருளிருக்குர் | இருளிரிக்குர் |
| 58 | 19 | எழீலாரு | எழிலாரு |
| 61 | 6 | னிலைைமகளையும் | னிலைமைகளையும் |
| ,, | 24 | ஒவல் | ஒவல் |

| | | | |
|---|---|---|---|
| 62 | 28 | என்பது | எண்பது |
| 63 | 22 | பெரிய யுராணம் | பெரிய புராணம் |
| ,, | 28 | டாட்டாட்டாது | டாட்டாது |
| 64 | 10 | ருந்தலே | ருத்தலே |
| ,, | 18 | வாழக | வாழ்க |
| ,, | 25 | விளக்கு | விளக்க |
| 71 | 8 | திருவடி | திருவடி |
| ,, | 20 | அறவ வடிவ | அறவடிவ |
| ,, | 23 | செரு | சேறு |
| ,, | 25 | 41 காவம் | 49 காலம் |
| 72 | 5 | வழங்குகின்றளர் | வழங்குகின்றனர் |
| ,, | 25 | வாலறிவ | வாலறிவ |
| ,, | 26 | சான்ருே | சான்ருேர் |
| 73 | 19 | தகக | தக்க |
| 76 | 6 | எருந்தருள் | எழுந்தருள் |
| 78 | 8 | கம்முலு | ஜம்முலு |
| 80 | 6 | பூசசி | பூச்சி |
| ,, | 19 | அழீவது | அழிவது |
| 81 | 5 | மயககம | மயக்கம |
| ,, | 25 | எழுந்நருள் | எழுந்தருள் |
| 82 | 8 | ஞடைமை | ஞடைமை |
| 83 | 20 | மல்லீா | மல்லீர் |
| 85 | 3 | அங்ஙன | அங்ஙனம் |
| ,, | 8 | உறைகள் | உறையுள் |
| 86 | 21 | செரிற் | சொற் |

திருப் பூ வணம் மடம், ஸ்ரீ காசிகாநந்த ஞாநாச்சார்ய ஸ்வாமிகள் இயற்றிய நூல்கள் பதிப்பித்தன.

1. வேதாந்த பதார்த்த மஞ்ஜனஷா. வசநம். ஹிந்தி மொழி பெயர்ப்பு. ரூ. 2—50
2. விசார சாகரம். வசநம். ஹிந்தி மொழி பெயர்ப்பு. ... 2—25
3. வியாச தாத்பரிய நிர்ணயம். வசநம் சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு. ... 0—50
4. வேதாந்த சித்தாந்த முக்தாவலி, வசநம் சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு. ... 0—50
5. நைஷ்க் கர்ப்ய சித்தி, வசநம் சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு. ... 0—50
6. ஹரி மீடே, ஹரி தத்வ முக்தாவலி, சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு. ... 0—75
7. வேதாந்த பரிபஷை, வசநம் சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு. ... 0—44
8. ஸ்வராஜ்ய சித்தி, வசநம் சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு. ... 0—25
9. ஈசாவாஸ்ய உபநிஷத், சங்கர பாஷ்யம், வசநம் சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு. ... 0—25
10. மண்டல பிராஹ்மண உபநிஷத், ராஜ யோக பாஷ்யம், வசநம் சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு 0—25
11. வேதாந்த சஞ்ஞா, வசநம் சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு. ... 0—13
12. கதா சரித் சாகரம், வசநம் கதை சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு. ... 2—25
13. நாநா ஜீவ வாதக் கட்டளை, சத்யார்த்தப் பிரகாசிகை உரை. ... 2—00
14. கீதா சாரத் தாலாட்டு, லகு சந்திரிகை உரை. ரூ. 2—00 15. பஞ்சதசி கவி ... 0—63
16. மகா ராஜத் துறவு, மகப் பிரசாதிநி உரை. ரூ. 2—00. 17 பகவற் கீதை கவி (545) ... 1—25
18. பக்தி (வைராக்ய) சதகப் பத உரை பொழிப் புரை. ரூ. 1–50. 19. பிரஹ்ம கீதை கவி ... 0—38
20. வைராக்ய தீப பத உரை பொழிப்புரை ரூ. 0-50. 21. சீடாசாரம் பால போதிநி உரை ... 0—50
22. பகவத் கீதை 15வது அத்தியாயம் சம்ஸ்கிருதம் தமிழ் கவி உரை மூர்க்க சதகம் பத உரை 0—50
23. திருக் களர் வீர சேகர சரிதம் வசநம் ரூ. 1-00. 24. மந்திரோபதேசம் வசநம் ... 0—25
25. கீதா சாரத் தாலாட்டு குறிப்புரை ரூ. 0-25. 26. வேதாந்த சாஸ்திர ரத்நாவலி 9சேர்ந்தது கவி 3—00
27. தாந்திரீக த்வைத சைவ கண்டநம் (சூட்டுக் கோல் கட்டாரி புச்சம்) ... 1—00
28. வாசிட்டம் கவி 2055 ரூ. 2-25. 29. கீதாத் திரயம் கவி ஈசுவர கீதை பகவற் கீதை ... 3—00